பன்னிரு சைவத் திருமுறைத் தொகுதி



திருஞான சம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

திருமுறை

: க, உ, ங :

கழக வெளியீடு - ௭௮

உ

திருச்சிற்றம்பலம்

---

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்



கயப்பாக்கம்

சதாசிவ செட்டியார் பி. ஏ., அவர்களால்

பார்வையிடப்பெற்றன.



## திருமுறை

: ௧, ௨, ௩ :



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

அட்சய ௵ தைமீ

## அற்புதப்படங்கள்





# முன்னுரை

'பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே'

திருஞானசம்பந்தர்—திருவலிவலம்.

திங்களுங் கங்கையுந் திருமுடி மிலைச்சிய
மங்கை பாதியன் மறைமுதல் யோகி
கறைகெழு கண்டத் திறைவன் கண்ணுதல்
மின்னேர் சடையன் பொன்னூர் மேனியன்
தன்னே ரில்லாத் தலைவன் றனதுது
மணியடி பொன்னடி மாண்பா மடியை
அன்புறு மாரி னருச்சனை புரிந்து
பசுக்கள் பாச வேதனை தவிர
முதற்பெரும் படைப்பிற் சிறப்புற வருளிய

வேத சிவாகமங்கள் என்னும் இரண்டுமே முதனூல்களாகிய பதி நூல்களாம். இவை யுண்மை நூல்களாகிய பதி நூல்களா மென்பது

'வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க்க பேதமே'

எனத் திருமந்திரமும்,

'வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்'

எனச் சிவஞான சித்தியாரும் கூறுமாற்றா னறியப்படுவ தொன் றாம்.

# முன்னுரை

இவற்றுள், வேதம் சிவபெருமானது தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்னும் நான்கு முகங்களிற் றோன்றியதாய், நான்கு பேதமுடையதாய், எண்ணிறந்த சாகைகளை யுடையதாய், எல்லாவிதமான அறங்களையும் ஓதுவதாய் உண்மைப் பத்தியோடு ஓதினர்க்கு முத்திப்பேற்றை யருளுவதாய், வன் சொற்களினாற் புணர்க்கப்பட்ட சூத்திரரூபமாய், பொது நூலாய் விளங்குவது.

சிவாகமம் சிவபெருமானது மேன்முகமாகிய ஈசான முகத்திற்றோன்றியதாய் வாதுள முதற் காமிக மீறாகிய இருபத்தெட்டு பேதமுடையதாய்ச் சத்திநிபாதமுற்ற உண்மையடியாருக்குச் சிவ புண்ணியங்களையும், சிவ ஞானத்தையும் உய்த்துணர்த்துவதாய் மென் சொற்களினாற் புணர்க்கப்பட்ட வேதபாடிய ரூபமான சிறப்பு நூலாய் விளங்குவது. இவ்வுண்மைகள்

'வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தி
னோதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே'

எனவும்,

'அஞ்சன மேனி யரிவையோர் பாகத்த
னஞ்சொ டிருபத்து மூன்றுள வாகம
மஞ்சலி கூப்பி யறுபத் தறுவரு
மஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே'

எனவும் வரும் திருமந்திரங்களானும் திருத்தொண்டர் புராண உருத்திர பசுபதி நாயனார் புராணத்தானும், திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துத் திருக்காஞ்சியிற் காமகோட்டியம்மையார் செய்த சிவாகமோக்த சிவபூசைச் சரித்திரத்தானும் உணரப்படுவனவாம்.

எனினும், இவ்விரண்டனுள்ளும் வேதம் உபநயனப் பேறுடையவராய் வடமொழியையும், தருக்கம், வியாகரண முதலிய கருவி நூல்களையும், புராணேதிகாசங்களாகிய உப விருங்கணங்

# முன்னுரை

களையும் நன்குணர்ந்து ஐயந்திரி பொழிந்த உண்மை ஞானமுடையவர்க் கன்றி ஏனையோர்க்குப் பொருள் விளங்காததாயும், மயக்க முண்டுபண்ணுவதாயு முள்ளது.

சிவாகமம் உண்மைப் பொருள்களைச் சிறப்புவகையாயும் தெளிவாயும் உணர்த்துவதாய் விதிப்படி செய்யப் பெற்ற சிவ தீக்கைப் பேறுடைய நான்கு வருணத்தவர்க்கும் பயன்படுவ தெனினும் வடமொழிப் பயிற்சியுடையராய்ச் சத்திநிபாதமுற்ற உண்மையாளர்க்கே மிகப் பயன்படுவதா யுள்ளது.

இங்ஙனமாதலின், அவ்விரண்டின் உண்மைப் பொருள்களை யெல்லாம் வடமொழிப் பயிற்சியும் கருவிநூற் பயிற்சியு மில்லாத நாங்க ளிழந்து போவமோ? எல்லையில்லாத பெருங் கருணைக்கடலுளான எம்பெருமானும் அவ்வெம்மைப் புறக் கணித் திருப்பனோ? யாங்களும் இழக்கலேம்! இறைவனும் புறக்கணியான்!

எனவே, அவ்விரண்டின் உண்மைப் பொருள்களை யெல்லாம், தமிழுலகஞ் செய்த பாக்கியப்பயனாகி, அவ்வுலக உய்வின் பொருட்டு இறைவன் அருளாணை வழிநின்று திருவவதாரஞ் செய்து பசு காரணம் நீங்கிப் பதிகாரணம் பெற்ற உண்மை நாயன்மார்களான பெரியார்கள் முற் சொன்ன வேத சிவாகமப் பொருள்களான பசுவின்பாலிற் கடைந்தெடுத்த கழிபெருஞ் சுவைத்தாகிய வெண்ணெயைக் காய்ச்சின நெய்போலத் திரட்டிப் பன்னிரு திருமுறைகளாக அருளிச் செய்தனர்களா மென்பவன்றோ? அவை:

க. ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனா ரருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் ஒன்று இரண்டு மூன்றாவது திருமுறைகளாம்.

உ. ஆளுடைய வரசுகளாகிய திருநாவுக்கரசு நாயனா ரருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் நான்கு ஐந்து ஆறாவது திருமுறைகளாம்.

## முன்னுரை

க. ஆளுடைய நம்பிகளாகிய சுந்தரமூர்த்தி நாயனு ரருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் ஏழாவது திருமுறையாம்.

ச. ஆளுடைய வடிகளாகிய மாணிக்கவாசக மூர்த்திக ளரு ளிச்செய்த திருவாசகமுந் திருக்கோவையாரும் எட்டாந் திரு முறையாம்.

ரு. திருமாளிகைத் தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனர், பூந் துருத்தி நம்பிகாடநம்பி, புருடோத்தம நம்பி, சேதிராயர் என் னும் ஒன்பதின்மரு மருளிச்செய்த திருவிசைப்பாத் திருப்பதி கங்களும், அவருட் சேந்தனர் அருளிச்செய்த திருப்பல்லாண் டுத் திருப்பதிகமும் ஒன்பதாந் திருமுறையாம்.

சா. திருக்கயிலாயத் திருநந்தியெம் பெருமான் திருமரபினைச் சேர்ந்த திருமூலதேவ நாயனு ரருளிச்செய்த மூவாயிரந் திருமந் திரத் தொகுதியே பத்தாந் திருமுறையாம்.

எ. திருவாலவாயுடை யவிர்சடைப் பெருமா னாகிய இறை வன் பாணபத்திரரின் பொருட்டுச் சேரமான் பெருமா ணாயனருக் கருளிச்செய்த திருமுகப்பாசுர முதல் நம்பியாண்டார் நம்பிக ளருளிச்செய்த திருநாவுக்கரசுதேவர் திருவேகாதச மாலை யிறுதியாக அமைந்த பிரபந்
பதினோராந் திருமுறையாம்.

அ. மேற்கூறிய உண்மை நாயன்
பொருந்திய திருவருளுண்மைச் சரித
கனியொப்பச் சங்கையின்றி யுணருமா
டத் தொகையின் விரிநூலாகச் சேக்
ழைப் பெருமுனிவ ரருளிச்செய்த
திருத்தொண்டர் புராணம் பன்னிரண

இப்பன்னிரு திருமுறைகளும்
மானதக் காட்சியானும், ஆன்மபோ
காட்சியானும் உண்டாகும் பசு ப

## முன்னுரை

சுட்டிறந்து தற்பிரகாசமாயும், பரப்பிரகாசமாயும் விளங்கும் பதிஞானமாகிய சிவஞானக் கண்கொண்டு கண்டு கூறிய சிவ வாக்குகளாக வுள்ளன என்பதைத் திருக்களிற்றுப் படியார் முதலிய ஞான சாத்திரங்களெல்லாம் கூறுமாற்றாற் கண்டு கொள்ளலாம். இன்னும் இவ்வுண்மையைச் சிவானுபூதிச் செல்வர்களாகிய அந்நாயன்மார்களே,

'எனதுரை தனதுரையாக
நீறணிந் தேறுகந் தேறிய நிமலன்'

என்பன வாதியாகக் கூறுந் திருவாக்குக்கள் கொண்டுந் தெரியலாகும். இஃதொன்றே பின்வந்த அநுபூதிமான்களாகிய பட்டினத் தடிகள் தாயுமானவப் பெருந்தகையார், குமரகுருபர சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், சாந்தலிங்க சுவாமிகள், வடநூற் கடலுந் தென்றமிழ்க் கடலும் நிலைகண்டுணர்ந்த மாதவச் சிவஞான யோகிகள், கச்சியப்ப முனிவராதியர் அன்பு ததும்பும் அரும்பெரு மொழிகளாற் கூறும் பெற்றியானு மறியப்படும். மேலும் இத்திருமுறைகள் பன்னிரண்டும் எத்தகை யோரது வன்னெஞ்சமாகிய கன்னெஞ்சையும் கரையச்செய்யும் இசை மயமான சிவபெருமானுக்குரிய உத்த மோத்தமமாகிய தோத்திரங்களாயும், மெய்யன்போடு ஓதுபவர்க்கு இம்மை மறுமை வீடு என்னும் மும்மைப் பெரும் பயன்களையும் ஒருங் களிக்க வல்லனவாயும், அத்தியற்புதமாகிய எண்ணிறந்த மகிமாதிசயங்களை யுடையனவாயும் இருப்பனவாகலின், சிவபூசை, குருபூசை, அடியார் பூசைகளினும், சிவாலய சேவைகளினும், திருவிழாக்களில் சுவாமி பின்னும் பண்டைக்காலந் தொட்டு ஓதப்பெறும் வழக்கமுடையனவாய்த் தமிழ்மறைகள் என்று சொல்லப் பெறுவனவாம். இந்நியமம் பழைய சம்பிரதாயமாக மாத்திர மல்லாமற் சிவாகமங்களிலேயும் இறைவன் தன்றிரு வாக் காகிய வேதத்தை யடுத்து இவை ஓதப் பெறவேண்டு மென்று விதித்துக் கூறுவதாலும் வலியுறுத்தப் பெறுவதாகும்.

இத்திருமுறைகளது எண்ணிறந்த பெருமை, திருத்தொண் டத்தொகைக்குப் புற்றிடங்கொண்ட புனிதன் வாக்குத் தந்தமை

## முன்னுரை

யானும், அத்திருத்தொண்டத் தொகைக்கே நம்பியாண்டார் நம்பியின் பொருட்டுப் பொல்லாப் பிள்ளையார் பொருளருளிச் செய்தமையானும், தேவாரத் திருப்பதிகங்கள் பலவும் அவ்வப் போது உபமன்னியு பகவானால் அரபத்தர் முதலிய மகரிஷிகளுக்குத் திருத்தொண்டர் சரிதங் கூறியபோது கூறப்பெற்றமையானும், திருவாசகமும், திருக்கோவையாரும், அழகிய திருச்சிற்றம்பல முடையாராகிய ஸ்ரீமன் நடேசப் பெருமானாரது திருக்கரத்தால் எழுதப் பெற்றமையானும், சிவாலய முனிவரின் பொருட்டு என்றுமுள தென்றமிழியம்பி யிசைகொண்டருளிய சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவராம் அகத்தியர் தம் பெயரால் அகத்தியத் தேவாரத் திரட்டு எனத் திரட்டி உதவினமையானும், நம்பியாண்டார் நம்பி, உமாபதி சிவாசாரியார் முதலிய பெரியோர்கள் சாந்தி செய்தமையானும், தில்லை மூவாயிரவர்களாலும் அனுசரிக்கப் பட்டமையானும், சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரிய சுவாமிகளாற் கயிறு சாத்தி மெய்கண்டதேவ நாயனாரது திருவவதாரத்திற்கு ஏதுச் செய்யப் பெற்றமையானும், அபயகுல சேகர சோழர் கண்டு உலகிற்குதவி யருளினமை யானும், அநபாய சோழர் முதலிய மன்னர் பெருமக்களாற் போற்றப் பட்டமையானும், மற்று மிவை போல்வன பிறவற்றானும் மலையிலிட்ட மாபெருந் தீபம் போன் மிளிர்ந்து விளங்குவதாகும்.

இத்திருமுறைகள் பன்னிரண்டனுள் மூவர் முதலிகளானருளிச் செய்யப்பெற்ற தேவாரத் திருமுறைகள் ஏழுமே சப்த கோடி மகா மந்திரங்களைப் பிரதிபாதித்து நிற்கும் அடங்கன் முறையென்று கூறப் பெறுவனவாய்த் தலையங்கமாய்ச் சிறந்து நிற்பனவாம்.

இவ்வாறுய சிறப்புக்களினால் இத்திருமுறைகளும் இவற்றுள் அடங்கன் முறையும் திருவாசகத் திருமுறையும் வைதிக சைவசித்தாந்த செந்நெறிச் செல்வர்களுக்கு இருக்கு முதலிய வேதப் பகுதிகள்போன்ற இன்றியமையாத ஒப்புயர் வில்லாத

முதற் பெருநூற் றொகுதிகளாதல் தெற்றெனக் கண்டு கொள்வ தாகிய வொன்றேயாம்.

இத்துணைப் பெருஞ் சிறப்புவாய்ந்த திருமுறைகள் யாவும் பிழையறப் பரிசோதிக்கப் பெற்றும், நல்லதாளில் நன்கு எளி தின் ஓதுமாறு அச்சிடப்பெற்றும் அடிநாட்டொட்டே கிடைப்ப தரிதாயிற்று. இப்பெருங் குறையைப் பின் வந்த சைவ சீலர் களாகிய பெரியோர் சிலர் பரிசோதித்தும் அச்சிடுவித்தும் ஒரு வாறொழித் துதவினார்க ளெனினும் அப்பிரதிக ளெல்லாம் இற்றை ஞான்று முற்றிலுஞ் சென்று மருந்துக்கேனும் ஒருபிரதி கிடைப்ப தரிதாயிற்று. இம்மட்டோ, பிழைக் களஞ்சியமாய் மிகக் கேவலமான தாளில், வந்த வந்தவாறெல்லாம் அச்சிட்ட சாமானியப் பிரதியொன்றும் இந்நாட் கிடைக்கப்பெறுதெனின் சைவத்திற்கெய்திய வறுமையின் கொடுமைதான் என்னேவோ!

> ‘காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
> ஞாலத்தின் மாணப் பெரிது’

என்னும் பெருநாவலர் திருவாக்கினைக் கடைப்பிடித்து இப் பெருங் குறையை நீக்கிக் காலத்தி னுதவுமாறு திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் முன்வந்து நல்ல நூல்களை நல்ல தாள்களின் நன்கு அச்சிடுவித்து நன்கு கட்டி நன்குதவும் தம்மாட்சியில் தமிழ் வேதங்களாய சைவத் திருமுறைகளைப் பேணிக்கொண்டமை தமிழுலகும் சிறப்புறச் சைவ வுலகமும் நன்றி பாராட்டும் பெற்றியதாயதை யாரறியா தொழிவர்!

பல்லாயிரப் பெருந்தொகையாய பொருள்வைத்துச் செய்ய வேண்டியதாய இப்பெரியவேலை செய்வதே துர்லபம், செய்தும் இதன் முன்றோன்றிய பிரதிகளினும் சிறக்குமாறு சிலபல திருத் தங்களையும் புனைவுகளையும் நலங்களையும் தாங்கி வெளிவருமாறு செய்யாரெனின் அது செய்கையாமாறில்லையென அறியற்பால தொன்றேயாகும்.

ஆதலின் அவ்வாறு செப்பமாய நலனுற்ற பாங்கின்வெளிப் படுத்துமாறே இத்திருமுறை வேலை இப்பொழுது தொடங்கப் பெறுவதாயிற்று.

தொடங்கப்பெற்ற இவ்வேலை, பன்னிரு திருமுறைகளையும், ஆளுடைய பிள்ளையாரது திருமுறைமூன்றையும் முதற் சம்புட மாகவும், ஆளுடையவரசுகளது திருமுறைகள்மூன்றையும் இரண் டாஞ் சம்புடமாகவும், ஆளுடைய நம்பிகளது திருமுறை ஒன் றை, அது மூந்திய இரண்டு சம்புடங்களோ டொத்த அளவின தாய்ப் புத்தக நிலையங்களி னழகு பெற வைத்தற்கும், திரட்டி யெழுதற்கு வேண்டிய அவகாசங் குறித்தும், மிக முக்கிய மாக வும் இன்றி யமையாதன வாகவும், ஆராய்ச்சி செய்தறிய வேண்டிய பான்மை யுற்றனவாகவும், வடமொழி வேதங்களோ டியையுற்றனவாகவும், சைவசித்தாந்தப் பெருஞ் சிறப்புற்ற ஞானதானமாகவும்,இன்னோரன்ன பிறவாகவுமுற்ற திருமுறைக் குறிப்புக்களை எழுதிச் சேர்த்து மூன்றுஞ் சம்புடமாகவும், திரு வாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டுக ளாய எட்டு ஒன்பதாந் திருமுறைகளை நான்காஞ் சம்புடமாக வும், பத்து பதினொன்றாந் திருமுறைகளை ஐந்தாஞ் சம்புடமாக வும், பெரிய புராணமென்னுந் திருத்தொண்டர் புராணத் திரு முறையை ஆறுஞ் சம்புடமாகவும் செய்து முடித்துத் நாகப் பிரம மந்திரமாகி மூலமந்திரஞ் சேர்ந்த ஸ்ரீ பஞ்சாக்கர வடிவின தாகவும், தமிழ்த் தெய்வமாகிய முருகப் பெருமானது ஆறு திரு வானனங்களென்னும் ஸ்ரீ சடாக்ஷரப் பெற்றியதாகவும் சைவ வுலகத்திற் குதவிய ஞான்று பூர்த்தி யுறுவ தொன்றுகுமாம்.

இத்துணைப் பெருஞ் சிறப்புடன் இத்தகைய மாட்சியின் வெளிவரவேண்டிய இவ்வரிய பெரிய வேலை 'செயற்கரிய செய் வர் பெரியர்' எனவும் 'செய்தற் கரியதனைச் செய்து சிலர் எய் தற்கரியதனை யெய்தினர்கள்' எனவும் வரும் உண்மைத் திரு வாக்குகளுக் கிலக்கியமாகும் முத்தமிழும் வல்ல நல்லிசைப் பெரும்புலவர்களும் சைவ சித்தாந்த செந்நெறிப் பெருஞ் செல் வர்களும் வடமொழி வல்லுனராய் வேதமுதலிய கலைப்பயிற்சி

யுற்ற சைவசீலர்களுமாய பெருமக்கள் மேற்கொண்டு திருவருட் டுணை பெற்றுச் செய்யப்பெற வேண்டியதாகவும், இதனை, அம் மாட்சி யொன்றும் பெறாத என்னைக் கழகத்தார் ஏவியது என் மாட்டு வைத்த அன்பாகவும், என்னுடைய வேடங்கண்டு மயங்கின மயக்கமாகவும், அவற்றை நன்கறிந்த ஏழையேன் ஏற்றது பலகாலும் பயின்று படித்துக் கையாள வேண்டுமென்னும் பேரவாவின் மறைந்து கரந்துறையும் பெருந்துணிவே யாகவும், பெரியாரும் பெரியாருட் பெரியானும் ஒப்புயர்வில்லா முழு முதற்றலைவனும் தமது பெருங் கருணைத்திறத்தாற் பொறுத் துக் கோதாட்டுவரென்று பெரிதும் அன்னார் பொன்னடிகளைப் பரவுவேனாக.

ஆசை வயிற்பட்டு அவ்வாறு ஏற்றுக்கொண்ட நீ யிதுகாறும், வெளிவந்த பிரதிகளினும் அதிகமாக யாது செய்தாய்? என்று அன்பர் வினவுவாராயின் அவர் அன்பின் வயப்பட்டு நிற்பேனா கிய எளியேன் ஈண்டுச் செய்தனவற்றை ஒரு பொருட்படுத் திக் கூறுதற் கியைபின்றெனினும் அவர் அன்பின் வினையது பற் றியும் நியமம் பற்றியும் கூறக்கடவேனாக.

தேவாரத் திருப்பதிகங்கள் சாமானியமான தமிழ்ச் செய் யுளிலக்கண முறைகளைப் பற்றி மட்டும் நடைபெறுவன வாகா மல் வேதங்களைப்போலப் பண்ணிசை முறையைக் கொண்டு நடைபெறுவனவாம். இப் பண்முறை யிலக்கணங்களை விளக் கும் பண்டைய தமிழ் இசை நூல்கள் யாவும் இறந்துபோய் அவற்றியலெல்லாம் அறியவராமையிற் றிருப்பதிகங்கள் எளி திற் படிக்கவராமல் மிக்க இடர்ப்பாடுடையனவா யிருத்தலும் யாவருமறிந்த தொன்றே. அறிந்துவைத்தும் இதுவரை அச் சிட்டுதவிய உபகார சீலர்களான அறிஞர்கள் இவ்விடர்ப் பாட்டை நீக்கி அடிகளை யெளிதின் எளியர் ஓதுமாறு பிரித்து அச்சிடுவது மிக்க பொறுப்பான காரியமென்று விட்டோ, அன் றித் தங்கட்கு அது வேண்டாமைபற்றி வேண்டாமென் றெண் ணியோ, அம் முயற்சியைக் கைக்கொண்டாரில்லை. ஆயினும் என் அனுபவத்தில் அடியேன் ஓதுந்தோறும் ஓதுந்தோறும்

# முன்னுரை

பல அமயங்களினும் எய்திய இடர்ப்பாடு அடிகளைப் பிரித்து அச்சிடுவது மிக்க அவசியமெனத் தோற்றுவித்தது. அன்றியும் 'கோழைமிட றுககவி கோளுமில வாகவிசை கூடும்வகையால் ஏழையடியா' ர்கள் இடர்ப்பட்டு மனமுடைந்து ஓதுதலையொழியாதிருக்கும் பொருட்டும் இவ்வேலையைச் செய்ய வேண்டுமென எண்ணினேன். எண்ணிய யான் பிள்ளையாரது திருமுறைகளில் பல திருப்பதிகங்கள் அவ்வாறு பிரித்து அச்சிடுவது மிக்க சிரமமாயிருப்பதை யறிந்தும் பல இடங்களிற் றவற நேருமென்பதை யறிந்தும் அதனிடத்து அடியேனுக்கிருந்த ஊக்கம் அதனை விடச்செய்திலது. இத் திருமுறைகளை யச்சிட்டு முடிக்கவேண்டிய காலவரையறை மிகச் சுருக்கமாயிருந்தமையின் தக்க பண்டிதர்களையேனும் ஓதுவா மூர்த்திகளையேனுங் கலந்துசெய்ய அவகாசமில்லையாய்ப்போயிற்று. பிரித்து அச்சிட்டு முடித்தவிதம் முற்றிலும் செய்யுளிலக்கண முறையைப் பின் பற்றாமல் ஓதுவோர் எளிதிற் படித்து ஓதும் உதவியொன்றையே மிக முக்கியமாகக் கருதிச் செய்திருக்கின்றது. இப்படி யாதொரு நியமமு மில்லாமல் இவ்வேலையைச் செய்தற்கு எனக்குக் கிடைத்த உதவி ஒன்றே.

இற்றைக்கு ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்னர்ச் சென்னையிற் றலமுறைத் தேவாரம் அச்சிட்ட காலத்தில் தட்சிணத்திலிருந்து வந்து இவணிருந்த ஓதுவாமூர்த்திகளிடந் திருப்பதிகங்களைச் சுலபமாய் ஓதக் கேட்டுக்கொண்ட பெரியார் சிலரிடம் யான் பழகியதே அது. ஆயினும் அன்னார் எல்லாப் பண்களினும், எல்லாக் கட்டளைகளினும் எல்லாப் பதிகங்களையும் கேட்டு ஓதினார்களில்லை யாதலால் எனக்குண்டான இடர்ப்பாடு இனைத்து என்றுசொல்ல முடியாதிருந்தபடியால் அவ்விடங்களினெல்லாம் திருவருளுக்கு யான் பாத்திர னல்லனெனினும் அதனைத் துணைக்கொண்டு ஒருவாறு செய்தமைத்து வைத்தேன். இப்படிச் செய்ததில் எனக்கு வேறொரு கருத்துமுண்டு. இவ்வாறு அரை குறையாகச் செய்துவைப்பதினின்றும் அதனைத் திருத்திச் செய்ய எண்ணும் பெரியார் அதனைத் திருந்தச்

செய்து காலக்கிரமத்தில் எண்ணிய கருத்து நிறைவேறு மென்பதொன்றே யதுவாகும்.

திருப்பாட்டுக்களின் அடிகளின் இறுதியினும், முதலினும் வருவனவாய சந்திகள் பிரித்து அச்சிடப் படவில்லை யெனின் சிறுவர்களும், லௌகிகர்களும், இலக்கண ஞான மில்லாதவர்களும் இவைகளை யோத வருங்கால் அன்னார் அவைகளை யுள்ளவாறே வாசித்துத் தாமும் இடர்ப்பட்டுக் கேட்போர்க்கு மிடர்ப்பாடு உண்டாக்குவர் என்னு முண்மையைக் கடைப்பிடித்துச் சந்தம் சிதையும் குற்றுகரச் சந்தி முதலிய சந்திகளை யொழித்து ஏனைய வெல்லா விடங்களினுஞ் சந்தி பிரித்து அச்சிட்டுள்ளேன். இவ்வேலையைச் சிவஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் தவிர ஏனையோர் நியமமாகக் கடைபோகச் செய்யாமையின் இதனை யிங்குக் குறித்தெழுதினேன்.

பல திருப்பதிகங்களிற் பல திருப்பாட்டுக்கள் மறைந்து போயினமையை யாருமறிவார்கள். அவ்வாறு இறந்துபோன திருப்பாட்டுக்களை முன் அச்சிட்ட பதிப்பாசிரியர்கள் யாவரும் இன்ன திருப்பாட்டு இறந்துபோனது என்பதனை விளக்கமாகக் காட்டிப் போந்தாரில்லை. அன்னார் ஒரு திருப்பாட்டிற்கு நேரே (சு - எ, அ - கூ) என்பனபோலக் குறிப்பித்திருக்கின்றார். அங்ஙனங் குறிப்பித்தது இறந்த திருப்பாட்டு ஆறாவதோ வன்றி ஏழாவதோ, எட்டாவதோ வன்றி ஒன்பதாவதோ என்னும் ஐயப்பாட்டை யுண்டாக்குவதே யன்றி நிச்சயித்தற்கு ஏதுவாக வில்லை. சிவஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் அவ்வாறு செய்யாமல் திருப்பாட்டு வரிசையில் அதனைவிட்டுப் பாதக்குறிப்பில் இன்ன திருப்பாட்டு இறந்து போயிற்று என்று காட்டியுள்ளது சந்தேகமில்லாமற் றிடம்பெறச் செய்தற்கு ஏதுவா யிருப்பினும் திருப்பாட்டு எண்களையும், பாதக்குறிப்பையும் கவனியாதார்க்கு எளிதி னறிதற்கில்லாதிருத்தலின் யான் திருப்பாட்டு வரிசையிலேயே இறந்த திருப்பாட்டினிடத்தே நட்சத்திரக் குறிகாட்டி எண்ணைப் பதிப்பிக்கச் செய்திருக்கின்றேன். அன்றியும் சிற்சில பதிகங்களி னிறந்த திருப்பாட்டின்னதென மற்றை

யோர் நிச்சயித்திருப்பதற்கு மாறாக நிச்சயித் தச்சிட்டிருக்கின்றேன். உதாரணமாக உகஎ-ந் திருப்பதிகத் (திருவேணுபுரம்-பண்-காந்தாரம்) தில் பத்தாவது திருப்பாட்டும், கூஉக-ந் திருப்பதிகத்தில் (திருச்செங்காட்டங்குடி - பண் - பழந்தக்கராகம்) பதினோராந் திருப்பாட்டும் இறந்துபோனதாக மற்றையோர் குறிப்பிட்டதற்கு மாறாகப் பதினோராந் திருப்பாட்டும், பத்தாந் திருப்பாட்டும் முறையே இறந்துபோனவாகக் காட்டியிருப்பன போன்றவை. இவைகளை யவ்வாறு மாறாக நிச்சயித்தற்குப் போந்த காரணங்கள் அப்பாட்டினமைந்த விஷயங்களே. ஆளுடைய பிள்ளையார் தமது திருப்பதிகத்தில் பெரும்பாலும் எட்டாந் திருப்பாட்டில் இராவணனையும், ஒன்பதாந் திருப்பாட்டில் பிரம விட்டுணுக்களையும், பத்தாந் திருப்பாட்டில் புத்த சமணர்களையும் பதினோராந் திருப்பாட்டில் பலப் பேற்றையுமருளிச் செய்துள்ளாராதலின் அவைகளை நிச்சயித்தற்கு அதிக சிரமம் வேண்டாததாயிற்று.

திருத்தொண்டர் புராணத்தை யொட்டிப் பல திருப்பதிகங்கட்கு விஷயக் குறிப்புக்கள் எழுதி அவ்வத் திருப்பதிகங்கட்கிறுதியிற் சேர்த்திருக்கின்றேன்.

இத்திருமுறை மூன்றினும் உள்ள மொத்தத் திருப்பதிகங்களை அறிதற்கும், தொடர்ச்சியாக அறிதற்கும், இத்தனையாவது திருப்பதிகமிதுவென அறிதற்கும் ஏதுவாகத் திருப்பதிகங்கட்கு வரிசை எண் கொடுத் தச்சிட்டிருக்கின்றது. எடுத்த வுடனே எடுத்த பக்கம், இன்ன திருமுறையது, இன்ன பண்ணது, இத்தனையாவது பதிகத்தது என்றறிதற்குப் பக்கத் தலைப்பில் அவைகள் காட்டப்பெற் றிருக்கின்றன. இவற்றோடு மாறுபடுவதற் கேதுவின்றிச் சுலபமாயும், தெளிவாயு மறிதற்குப் பக்கங்கள் தாளடியில் கண்டிருக்கின்றன.

பாட பேதங்கள் எவ்வெவ்விடங்களிற் பொருள் மாறுபாடும், இன்றியமையாமையு முடையனவோ அவ்வவ் விடங்களிலேயே காட்டப்பட் டுள்ளன. அப்படிக் கொண்டவிடங்

# பதிப்புரை

தமிழ்நாட்டின்கண், புத்தம் சமணம் முதலிய புறப்புறச் சமயங்கள் தோன்றி, சைவ சமய வளர்ச்சி வலி குன்றிய ஞான்று, அப்புறச் சமயங்களை வேரறுக்கப் பண்டையரு மறைக் கருத்துக்களோடு எழுந்தனவாய், ஓதவும் உன்னவும் உலப்பிலா மகிழ்வைத் தருவனவாய், எண்ணியவற்றை எண்ணியாங்கு எய்துவிப்பனவாய், நூல் சார்த்திப் பார்ப்பார்க்கு உண்மை நுவல்வனவாய், அன்போடு போற்றுவார் அருவினையறுப்பனவாய், செந்தமிழ் மொழிவளம் நிரம்பியனவாய், பண்டை இசைவளம் காண்பார்க்கு இன்ப நலம் இசைப்பனவாய், இயற்கைநலம் விரும்புவார்க்கு இனிமை பயப்பனவாய், அருஞ் செயல்களை அடியார்க்கு நிகழ்த்துவனவாய், தத்துவக் கருத்துக்கள் இலை மறை காய்போலப் பொதிந்துள்ளனவாய், பண்டைத் தமிழியல் நூல் வழக்கிற்கேற்ப அகப்பொருள், புறப் பொருளிலக்கணங்களைக் கூறுவனவாய், மக்கட்குப் பிறவியழித்து வீடு அளிப்பனவாய், புறவிருள் நீக்கும் பன்னிரு பகலவர்போல மக்கள் அகவிருள் நீக்கும் பன்னிரு அருமணிச் சுடர்களாய் விளங்குவன தெய்வத் திருவருணூற் றொகுதியாய பன்னிரு திருமுறைகள். அமிழ் தறழூந் தமிழ் மொழியின்கண் சைவ சமயத்தார்க்கு அமையப் பெற்றிருப்பது போல வேறெம் மொழியிலும், வேறெச்சமயத்தார்க்கும் இத்தகைய அருணூற் றொகுதி யமையாமையே இவற்றின் பெருமையை விளக்கும்.

சிவம் பழுத்த இத்தமிழ்மாண் சைவப் பெருநூற் றொகுதி, இதுகாறும் செப்பமான திருத்தப் பதிப்பைப் பெறாதிருந்தது தமிழ் மக்கட்கு ஒரு பெருங் குறையே. அதனை நீக்குவான் கருதி இறைவன் இன்னருள் கொண்டு பன்னிரு திருமுறைகளை ஆறு பகுதிகளாகப் பதிக்க ஒழுங்கு படுத்தி, முதற்கண் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த முதன் மூன்று திருமுறைகளாய தேவாரத் திருப்பதிகங்களை அழகுறப் பதித்து வெளியிடலானேம். இப்பதிப்பில் பிழைகாண்டல் அரிதென்க.

## பதிப்புரை

இதன்கண் பண் விளக்கமும், பண் வரிசையும் தலவரிசையும், தலவகராதியும் பதிக முதற் குறிப்பகராதியும், பதிக வரலாற் றட்டவணையும், அருஞ்சொற் பொருளகராதியும், பாட்டு முதற்குறிப் பகராதியும், ஆளுடைய பிள்ளையார் அழகிய திருவுருவப்படமும், அவர் நிகழ்த்திய அற்புதங்களைக் காட்டும் படங்களும், இதுவரை வெளியாகாது கல்வெட்டிற்கண்ட திருவிடைவாய்ப் பதிகமும் சேர்த்திருக்கின்றேம். சிறிது தமிழ் கற்றாரும் எளிதில் கற்றுணருமாறு பாட்டுக்கள் சீர் பிரிக்கப் பெற்றிருக்கின்றன. தலமுறைப் பதிப்பு விரும்புவார்க்கு மிக்கதே பயன்படுமாறு இதன்கண் தலவகராதியும் பதிக முதற்குறிப் பகராதியும் சேர்க்கப் பெற்றிருப்பது கருதற்பாலது. ஆகவே இவ்விழுமிய அருணூற் றொகுதி ஒவ்வொரு நூல் நிலையத்திலும் ஒவ்வொரு இல்லின் இறைவழிபாட்டறையினும் இன்றியமையாது இருக்கற்பாலது.

இதற்குப் பதிப்பாசிரியராயிருந்து செப்பஞ் செய்து உதவி புரிந்து வரும் திருவாளர் கயப்பாக்கம்-சதாசிவ செட்டியார் பி. ஏ., அவர்களுக்கும், இதன்கண் புதிதாகச் சேர்த்திருக்கும் திருவிடைவாய்ப் பதிகத்தை முதற்கண் கல்வெட்டினின்று எடுத்து வெளியிட்ட சிவனடியார்க்கும், பின்னர் ஆராய்ந்துதவியால் அதன்கணுள்ள சில வழுக்களை மிக்க உழைப்போடு கண்டுபிடித்துத் திருத்தி யுதவிய திருவாளர் ஆராவமுதய்யங்கார் பி. ஏ., பி. எல்., அவர்களுக்கும், இதனைப் பதித்து வருகையில் எழுத்துப் பிழைகள் முதலியவற்றைப் பார்த்துதவிய மருத்துவாசிரியரும், தமிழாசிரியருமான திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்களுக்கும், திருவாளர் S. அனவரத விநாயகம் பிள்ளை, எம். ஏ., எல். டி., அவர்களுக்கும், ஆசிரியர் படம் அற்புதப் படங்கள் முதலியவற்றை மிக்க திறமையோடு எழுதியுதவிய திருவாளர் ஆ. ஜெகந்நாதாச்சாரியார் அவர்களுக்கும் நன்றி செலுத்தக் கடப்பாடுடையேம்.

திருநெல்வேலி,
அட்சய,
மார்கழி, ௧௫.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தார்.

## முன்னுரை

களினும் சிறந்த பாடத்தை யமைத்துக்கொண்டு மற்றதைப் பாதக் குறிப்பிற் காட்டச் செய்திருக்கின்றேன்.

திருப்பாட்டுக்களைச் சுலபமாகத் தேடி எடுத்தற்கு அநுகூலமாயிருத்தற்கு இம்மூன்று திருமுறைகளுக்கு மட்டுமே தனியே பாட்டு முதற்குறிப்பகராதி யொன்றும், மிகச் சுருக்கமாகத்திரட்டிய அரும்பதப்பொருளகராதி யொன்றும், பண், பதிகம், தலம் முதலியவற்றை யறியவரும் அகராதியொன்றும் விஷயக் குறிப்பகராதி யொன்றும் வகுத்துச் சேர்த்திருக்கின்றேன்.

இன்னோரன்ன சிறிய எளிய தொண்டினைச் செய்து ஆளுடைய பிள்ளையாரது திருமுறை மூன்றினையும் முதற் புத்தகமாக அச்சிட்டு முடிப்பித்தேன்.

௯௮௰-வது பக்கத்தில் 'திருக்கச்சி நெறிக் காரைக்காடு' என்னும் திருப்பதியிலுள்ள இறைவி பெயர் 'காரார் குழலி' என அப்பதிகம் பதிப்பித்த பின்னர் கிடைக்கப்பெற்றமையால் இங்கே குறிக்கப்பட்டது.

௧௧௩-வது பக்கம் திருவலிவலத் திருப்பதிகத்தில் முதற் பாடலில் 'யாறியுள்' எனபது முதல் ஒன்பதாந் திருப்பாடலில் 'ஓ' என்பது வரை வெள்ளிப்பாடல் எனப் பல பதிப்புக்களினும் காணப்படுவது குறிக்கப்பட வேண்டியது விட்டுப் போயினமையின் ஈண்டுக் குறிக்கப்பட்டது.

**கயப்பாக்கம்- சதாசிவன்.**



## முதற் றிருமுறையின்

# பதிக அட்டவணை

# முதற்றிருமுறையின் பதிக அட்டவணை

# முதற்றிருமுறையின் பதிக அட்டவணை



ஆக பதிகம் ௧௩௬

# முதற்றிருமுறையின் பதிக அட்டவணை

# முதற்றிருமுறையின் பதிக அட்டவணை



ஆக பதிகம் கஙசு

# இரண்டாந் திருமுறையின்

# பதிக அட்டவணை

# இரண்டாந்திருமுறையின் பதிக அட்டவணை

| எண் | பதிகப்பெயர் | பக்கம் |
|---|---|---|
| கஅரு | சீகாழி | நஅஅ |
| கஅசு | திருவாமாத்தூர் | நகூக |
| கஅஎ | திருக்களர் | நகூங |
| கஅஅ | திருக்கோட்டாறு | நகூசு |
| கஅகூ | திருப்புறவார் பனங்காட்டூர் | நகூஅ |
| | பண் காந்தாரம் | |
| ககூய | திருப்புகலி | ச௱க |
| ககூக | திருத்தலைச்சங்காடு | ச௱உ |
| ககூஉ | திருவிடைமருதூர் | ச௱ச |
| ககூங | திருநல்லூர் | ச௱சு |
| ககூச | திருக்குடவாயில் | ச௱அ |
| ககூரு | சீகாழி | ச௱ய |
| ககூசு | திருப்பாசூர் | சயக |
| ககூஎ | திருவெண்காடு | சயங |
| ககூஅ | திருமீயச்சூர் | சயரு |
| ககூகூ | திருவரிசிற் கரைப்புத்தூர் | சயஎ |
| உ௱ | திருமுதுகுன்றம் | சயகூ |
| உ௱க | திருப்பிரமபுரம் | சஉக |
| உ௱உ | திருவாலவாய் | சஉஉ |
| உ௱ங | திருப்பெரும் புலியூர் | சஉரு |
| உ௱ச | திருக்கடம்பூர் | சஉஎ |
| உ௱ரு | திருப்பாண்டிக் கொடுமுடி | சஉகூ |
| உ௱சு | திருப்பிரமபுரம் | சஙக |
| உ௱எ | திருக்குறும்பலா | சஙங |
| உ௱அ | திருநணா | சஙரு |
| உ௱கூ | திருப்பிரமபுரம் (சக்கரமாற்று) | சஙஎ |
| உ௱ய | திருப்பிரமபுரம் (கோமூத்திரி) | சசய |
| உகக | சீகாழி | சசங |
| உகஉ | திருவகத்தியான் பள்ளி | சசரு |
| உகங | திருவறையணி நல்லூர் | சசஎ |
| உகச | திருவிளநகர் | சசகூ |
| உகரு | திருவாரூர் | சருக |
| உகசு | திருக்கடவூர் மயானம் | சருங |
| உகஎ | திருவேணுபுரம் | சருரு |
| உகஅ | திருத்தேவூர் | சருசு |
| | பண் பியந்தைக் காந்தாரம் | |
| உககூ | திருக்கொச்சை வயம் | சருஅ |
| உஉய | திருநனிபள்ளி | சசுக |
| உஉக | பொது (கோளறு திருப்பதிகம்) | சசுரு |
| உஉஉ | திருநாரையூர் | சசுகூ |
| உஉங | திருநறையூர்ச் சித்தீச்சரம் | சஎஉ |
| உஉச | தென்றிருமுல்லை வாயில் | சஎரு |
| உஉரு | திருக்கொச்சை வயம் | சஎஅ |
| உஉசு | திருநெல்வாயி லரத்துறை | சஅய |
| உஉஎ | திருமறைக்காடு | சஅங |
| உஉஅ | திருப்புகலூர், வர்த்தமானீச்சரம் | சஅச |
| உஉகூ | திருத்தெங்கூர் | சஅஎ |
| உஙய | திருவாழ்கொளி புத்தூர் | சஅகூ |
| உஙக | திருவரசிலி | சகூய |
| உஙஉ | சீகாழி | சகூஉ |
| | பண் நட்டராகம் | |
| உஙங | சீகாழி (திருவிராகம்) | சகூச |
| உஙச | திருத்துருத்தி | சகூசு |
| உஙரு | திருக்கோடிகா | சகூஅ |
| உஙசு | திருக்கோவலூர் வீரட்டம் | ரு௱ |

# இரண்டாந்திருமுறையின் பதிக அட்டவணை



ஆக பதிகம்—௧௨௨

# மூன்றாந் திருமுறையின்

# பதிக அட்டவணை

# மூன்றாந்திருமுறையின் பதிக அட்டவணை

# மூன்றாந்திருமுறையின் பதிக அட்டவணை

| எண் | பதிகப்பெயர் | பக்கம் | எண் | பதிகப்பெயர் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| ௩௫௭ | திருமுதுகுன்றம் | ௭௫௫ | ௩௭௨ | திருக்கச்சியேகம்பம் | ௭௮௫ |
| | பண் பழம்பஞ்சுரம் | | | (திருவியமகம்) | |
| ௩௫௮ | திருத்தோணிபுரம் | ௭௫௭ | ௩௭௩ | திருவாலவாய் ,, | ௭௮௮ |
| ௩௫௯ | திருவிராமேச்சுரம் | ௭௫௮ | ௩௭௪ | திருவீழிமிழலை ,, | ௭௯௧ |
| ௩௬௰ | திருநாரையூர் | ௭௬௰ | | | |
| ௩௬௧ | திருவலம்புரம் | ௭௬௨ | | பண் - கௌசிகம் | |
| ௩௬௨ | திருப்பரிதிநியமம் | ௭௬௪ | | (திருமாலைமாற்று) | |
| ௩௬௩ | திருக்கலிக்காமூர் | ௭௬௬ | ௩௭௫ | சீகாழி | ௭௯௩ |
| ௩௬௪ | திருவலஞ்சுழி | ௭௬௮ | | பண் புறநீர்மை | |
| ௩௬௫ | திருநாரையூர் | ௭௭௰ | ௩௭௬ | திருக்கழுமலம் | ௭௯௪ |
| ௩௬௬ | திருவாலவாய் | ௭௭௨ | ௩௭௭ | திருவீழிமிழலை | ௭௯௭ |
| ௩௬௭ | திருக்கயிலாயமும் | | ௩௭௮ | திருவாலவாய் | ௮௱ |
| | திருவானைக்காவும் | | ௩௭௯ | திருப்பந்தணை | |
| | திருமயேந்திரமும் | | | நல்லூர் | ௮௱௪ |
| | திருவாரூரும் | | ௩௮௰ | திருவோமாம் | |
| | (கூடற்சதுக்கம்) | ௭௭௪ | | புலியூர் | ௮௱௭ |
| ௩௬௮ | (ஈரடி) | | ௩௮௧ | திருக்கோணமலை | ௮௱௰ |
| | திருப்பிரமபுரம் | ௭௭௬ | | பண் அந்தாளிக் | |
| ௩௬௯ | திருவீழிமிழலை | ௭௭௮ | | குறிஞ்சி | |
| ௩௭௰ | திருப்பல்லவ | | ௩௮௨ | திருக்குருகாவூர் | |
| | னீச்சரம் | ௭௮௰ | | வெள்ளடை | ௮௧௩ |
| ௩௭௧ | திருக்கழுமலம் | | ௩௮௩ | திருநல்லூர்ப் | |
| | (திருவியமகம்) | ௭௮௨ | | பெருமணம் | ௮௧௪ |

ஆக பதிகம் ௧௨௫

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திரு மு. எண் | பக்கம் |
|---|---|---|
| க. அகத்தியான்பள் | | |
| வாடியவெ | உ | சசரு |
| உ. அச்சிறுபாக்கம் | | |
| பொன்றிரண் | க | கசுகூ |
| ங. அண்ணுமலை | | |
| உண்ணுமுலை | க | உஎ |
| பூவார்மலர் | ,, | கருக |
| ச. அதிகை | | |
| குண்டைக்கு | க | ௱ச |
| ரு. அம்பர்ப்பெருந் | | |
| திருக்கோயில் | | |
| எரிதரவனல் | ங | ருஅகூ |
| சு. அம்பர்மாகாளம் | | |
| அடையார்பு | க | கஅச |
| புல்குபொன் | உ | ரு௱எ |
| படியுளார் | ங | எசரு |
| எ. அரசிலி | | |
| பாடல்வண் | உ | சகூ௰ |
| அ. அரதைப்பெரும் | | |
| பாழி | | |
| பைத்தபாம் | ங | சுகக |
| கூ. அரிசிற்கரை | | |
| புத்தூர் | | |
| மின்னுஞ்சு | உ | சகஎ |
| ௰. அவளிவணல்லூ | | |
| கொம்பிரிய | ங | எஉச |
| கக. அழுந்தூர் | | |
| தொழுமாறு | உ | ஙங௰ |
| கஉ. அறையணிநல் | | |
| பீடிஞற்பெ | உ | சசஎ |
| கங. அனேகதங்கா | | |
| வதம் | | |
| நீடன்மேவு | உ | ங௱க |

| தலம்—பதிகம் | திரு மு. எண் | பக்கம் |
|---|---|---|
| கச. அன்பிலாலந் | | |
| துறை | | |
| கணைநீடெரி | க | எங |
| கரு. அன்னியூர் | | |
| மன்னியூரிறை | க | உ௱சு |
| கசு. ஆக்கூர் | | |
| அக்கிருந் | உ | ஙஎங |
| கஎ. ஆடானை | | |
| மாதோர்கூ | உ | ருஙக |
| கஅ. ஆப்பனூர் | | |
| முற்றுஞ்ச | க | ககூச |
| ககூ. ஆமாத்தூர் | | |
| துன்னம்பெய் | உ | ஙஎஎ |
| குன்றவார் | உ | ஙகூக |
| உ௰. ஆரூர் | | |
| சித்தந்தெ | க | உ௱ |
| பாடலன் | க | உஉஉ |
| பவனமாய் | உ | சருக |
| பருக்கையா | உ | ரு௱உ |
| அந்தமா | ங | சுஙகூ |
| உக. ஆலங்காடு | | |
| துஞ்சவரு | க | ௱உ |
| உஉ. ஆலவாய் | | |
| (மதுரை) | | |
| நீலமாமிடற் | க | உ௱ச |
| மந்திரமா | உ | சஉஉ |
| மாணினேர் | ங | சுஉகூ |
| காட்டுமா | ,, | சுசங |
| செய்யனே | ,, | சுருக |
| வீடலாலவா | ,, | சுருங |
| வேதவேள்வி | ,, | எஎஉ |
| ஆலநீழலு | ,, | எஅஅ |
| மங்கையர்க் | ,, | அ௱ |

| தலம்—பதிகம் | திருமு. எண் | பதிகம் |
|---|---|---|
| ௨௩. ஆவடுதுறை | | |
| இடரினும் | ௩ | ௫௫௯ |
| ௨௪. ஆவூர்ப்பசுபதீச்சரம் | | |
| புண்ணியர் | ௧ | ௨௨ |
| ௨௫. ஆனைக்கா | | |
| மழையார் | ௨ | ௩௩௬ |
| வானைக்கா | ௩ | ௬௫௫ |
| மண்ணது வுண்ட | ௩ | ௭௭௪ |
| ௨௬. இடும்பாவனம் | | |
| மனமார்த | ௧ | ௪௧ |
| ௨௭. இடைச்சுரம் | | |
| வரிவளரவி | ௧ | ௧௭௨ |
| ௨௮. இடைமருதூர் | | |
| ஓடேகலனு | ௧ | ௭௧ |
| தோடொர்கா | ௧ | ௨௦௫ |
| மருந்தவன் | ” | ௨௩௧ |
| நடைமருதி | ” | ௨௫௩ |
| விரிதருபுலி | ” | ௨௫௫ |
| பொங்குநூன் | ௨ | ௪௦௪ |
| ௨௯. இந்திரநீல பருப்பதம் | | |
| குலவுபாரி | ௨ | ௩௪௩ |
| ௩௰. இராமனதீச்சரம் | | |
| சங்கொளிர் | ௧ | ௨௪௧ |
| ௩௧. இராமேச்சுரம் | | |
| அலைவளர் | ௩ | ௫௭௨ |
| திருதருமா | ” | ௭௫௮ |
| ௩௨. இரும்பூளை (ஆலங்குடி) | | |
| சீரார்கழலே | ௨ | ௩௬௰ |
| ௩௩. இரும்பைமாகாளம் | | |
| மண்டுகங் | ௨ | ௫௪௰ |
| ௩௪. இலம்பையங்கோட்டூர் | | |
| மலையினார் | ௧ | ௧௬௬ |
| ௩௫. இன்னம்பர் | | |
| எண்டிசைக்கும் | ௩ | ௭௪௮ |

| தலம்—பதிகம் | திருமு. எண் | பக்கம் |
|---|---|---|
| ௩௬. ஈங்கோய்மலை | | |
| வானத்துயர் | ௧ | ௧௫௩ |
| ௩௭. உசாத்தானம் (திருக்கோயி | | |
| நீரிடைத் [லூர்) | ௩ | ௬௪௭ |
| ௩௮. ஊறல் (தக்கோலம்) | | |
| மாறிலவுணர் | ௧ | ௨௨௪ |
| ௩௯. எருக்கத்தம்புலியூர் | | |
| படையார்த | ௧ | ௧௬௬ |
| ௪௰. ஏடகம் | | |
| வன்னியுமத் | ௩ | ௬௬௫ |
| ௪௧. ஐயாறு | | |
| கலையார்மதி | ௧ | ௦௯ |
| பணிந்தவரரு | ” | ௨௫௧ |
| புலனைந்தும் | ” | ௨௦௩ |
| கோடல்கோ. | ௨ | ௩௦௩ |
| திருத்திகழ் | ” | ௩௫௩ |
| ௪௨. ஒற்றியூர் | | |
| விடையவன் | ௩ | ௬௬௩ |
| ௪௩. ஓத்தூர் | | |
| பூத்தேர்ந் | ௧ | ௧௨௪ |
| ௪௪. ஓமாம்புலியூர் | | |
| பூங்கொடி | ௩ | ௮௦௭ |
| ௪௫. கச்சியேகம்பம் (காஞ்சிபுரம்) | | |
| வெந்தவெண் | ௧ | ௨௮௨ |
| மறையானை | ௨ | ௩௬௪ |
| கருவார்க | ௩ | ௬௩௩ |
| பாயுமால் | ” | ௭௮௫ |
| ௪௬. கச்சிநெறிக் காரைக்காடு | | |
| வாரணவுமு | ௩ | ௬௦௯ |
| ௪௭. கடம்பூர் | | |
| வானமர்திங்கள் | ௨ | ௪௨௭ |
| ௪௮. கடவூர்வீரட்டம் | | |
| சடையுடை | ௩ | ௫௬௮ |
| ௪௯. கடவூர் மயானம் | | |
| வரியமறை | ௨ | ௪௫௩ |

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திருமு. எண் | பக்கம் |
|---|---|---|
| கரும்பமர் | ௩ | ௭௫௭ |
| **பூந்தராய்** | | |
| செங்கொலங் | ௨ | ௨௧௩ |
| பந்துசேர்விரலாள் | ௩ | ௫௫௬ |
| தக்கன்வேள்வி | ,, | ௫௬௨ |
| மின்னனவெயிலு | ,, | ௫௭௮ |
| **சிரபுரம்** | | |
| பல்லடைந்த | ௧ | ௱௬ |
| வாருறுவனமுலை | ,, | ௨௨௧ |
| அன்னமென் | | |
| னடை | ௨ | ௫௱௩ |
| **புறவம்** | | |
| நறவநிறை | ௧ | ௧௬௧ |
| எய்யாவென் | ௧ | ௨௱௭ |
| பெண்ணியலுரு | ௩ | ௭௨௮ |
| **சண்பைநகர்** | | |
| பங்கமேறு | ௧ | ௧௪௬ |
| எந்தமதுசிந்தை | ௩ | ௭௱௮ |
| **சீகாழி** | | |
| பூவார்கொன்றை | ௧ | ௫௫ |
| அடலேறமரு | ,, | ௭௫ |
| நல்லார்தீ | ,, | ௧௮௧ |
| உரவார்கலை | ,, | ௨௧௭ |
| நல்லானை | ௨ | ௩௧௩ |
| பண்ணினேர் | ,, | ௩௮௮ |
| நலங்கொண் | ,, | ௪௱௰ |
| விண்ணியங்கு | ,, | ௪௪௩ |
| பொங்குவெண் | ,, | ௪௧௨ |
| கம்பொருண | ,, | ௪௧௪ |
| பொடியிலங்கு | ,, | ௫௩௩ |
| சந்தமார் | ௩ | ௬௩௬ |
| **கோச்சைவயம்** | | |
| நீலநன்மா | ௨ | ௪௫௮ |
| அறையும்பூம் | ,, | ௪௭௮ |
| திருந்துமாக | ௩ | ௭௩௭ |
| **கழுமலம்** | | |
| பிறையணி | ௧ | ௪௫ |
| அயிலுறு | ௧ | ௧௭௬ |
| பந்தத்தால் | ,, | ௨௬௩ |
| சேவுயருந் | ,, | ௨௭௰ |
| மண்ணினல்ல | ௩ | ௫௧௧ |

| தலம்—பதிகம் | திருமு. எண் | பக்கம் |
|---|---|---|
| மடன்மலி | ௩ | ௭௧௪? |
| **பன்னிரு** | | |
| **திருநாமங்கள்** | | |
| காடதணிகலங் | ௧ | ௨௫௫ |
| பிரமபுரத்துறை | ,, | ௨௬௬ |
| ஒருருவாயினை | ,, | ௨௬௮ |
| விளங்கிய | ௨ | ௪௩௭? |
| பூமகனூர் | ,, | [illegible] |
| பிரமனூர் | ,, | [illegible] |
| யாமாமா | ௩ | [illegible] |
| உற்றுமைசேர் | ,, | [illegible] |
| எ௰. காளத்தி | | |
| சந்தமார | ௩ | [illegible] |
| வானவர்க | ,, | [illegible] |
| எ௧. காறுயில் | | |
| நீராணேநீள் | ௨ | [illegible] |
| எ௨. கானப்பேர் | | |
| (காளையார் | | |
| கோயில்) | | |
| பிடியெலாம் | ௩ | [illegible] |
| எ௩. கானூர் | | |
| வானூர்சோ | ௧ | [illegible] |
| எ௪. கீழ்வேளூர் | | |
| மின்னுலாவி | ௨ | [illegible] |
| எ௫. குடந்தைக் | | |
| காரோணம் | | |
| (கும்பகோணம் | | |
| விசுவநாதர் | | |
| கோயில்) | | |
| வாரார்கொ | ௧ | [illegible] |
| எ௬. குடமூக்கு | | |
| (கும்பகோணம்) | | |
| அரவிரிகோ | ௩ | [illegible] |
| எஎ. குடவாயில் | | |
| திகழுந்திரு | ௨ | [illegible] |
| கலைவாழுமங் | ௨ | [illegible] |
| எ௮. குரங்கணின் | | |
| விழுநீர்ம | ௧ | [illegible] |
| எ௯. குரங்காடுதுறை | | |
| வட | | |
| கோங்கமே | ௩ | ௭௪௧ |

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திருமு. எண் | பக்கம் |
|---|---|---|
| ௮௰. குரங்காடுதுறை | | |
| தென் | | |
| பரவக்கெடும் | ௨ | ௩௫௮ |
| ௮௧. குருகாவூர் | | |
| வெள்ளடை | | |
| சுண்ணவெண் | ௩ | ௮௧௩ |
| ௮௨. குற்றாலம் | | |
| வம்பார்கு | ௧ | ௨௧௧ |
| திருந்த (குறும் | ௨ | ௪௩௩ |
| ௮௩. கேதாரம் [பலா) | | |
| தொண்டரஞ் | ௨ | ௫௩௪ |
| ௮௪. கேதீச்சரம் | | |
| விருதுகுன் | ௨ | ௫௧௮ |
| ௮௫. கைச்சினம் | | |
| தையலோர் | ௨ | ௩௭௯ |
| ௮௬. கொடிமாடச் | | |
| செங்குன்றூர் | | |
| (திருச்செங்கோடு) | | |
| வெந்தவெண் | ௧ | ௨௨௫ |
| ௮௭. கொடுங்குன்றம் | | |
| (பிரான்மலை) | | |
| வானிற்பொ | ௧ | ௩௫ |
| ௮௮. கொள்ளம்பூதூர் | | |
| கொட்டமே | | |
| கமழு | ௩ | ௫௬௪ |
| ௮௯. கொள்ளிக்காடு | | |
| நிணம்படு | ,, | ௫௮௩ |
| ௯௰. கோகரணம் | | |
| என்றுமரி | ,, | ௭௯௭ |
| ௯௧. கோடிகா | | |
| இன்றுநன்று | ௨ | ௪௯௮ |
| ௯௨. கோட்டாறு | | |
| கருந்தடங் | ௨ | ௩௯௬ |
| வேதியன்வி | ௩ | ௫௭௬ |
| ௯௩. கோட்டூர் | | |
| நீலமார்த | ௨ | ௫௨௨ |
| ௯௪. கோணமலை | | |
| நிரைகழல | ௩ | ௮௱௰ |
| ௯௫. கோயில் (சிதம் | | |
| பரம்) கற்றாங்கெரி | ௧ | ௧௭௯ |
| ஆடினாய் நறு | ௩ | ௫௫௧ |

| தலம்—பதிகம் | திருமு. எண் | பக்கம் |
|---|---|---|
| ௯௬. கோலக்கா | | |
| மடையில்வாளை | ௧ | ௫௩ |
| ௯௭. கோவலூர் | | |
| வீரட்டம் | | |
| படைகொள் | ௨ | ௫௱ |
| ௯௮. கோழம்பம் | | |
| நீற்றானை | ௨ | ௩௧௯ |
| ௯௯. கோளிலி | | |
| நாளாயபோ | ௧ | ௧௩௮ |
| ௱. சக்கரப்பள்ளி | | |
| படையினார் | ௩ | ௬௱௫ |
| ௱௧. சாத்தமங்கை | | |
| திருமலர்க் | ௩ | ௬௯௫ |
| ௱௨. சாய்க்காடு | | |
| நித்தலுந் | ௨ | ௩௯௫ |
| மண்புகார் | ,, | ௩௭௧ |
| ௱௩. சிக்கல் | | |
| வானுலாவு | ,, | ௩௱௭ |
| ௱௪. சிராப்பள்ளி | | |
| நன்றுடையா | ௧ | ௨௱௯ |
| ௱௫. சிவபுரம் | | |
| புவம்வளி | ௧ | ௪௯ |
| இன்குரலி | ,, | ௨௩௫ |
| கலைமலிய | ,, | ௨௬௧ |
| ௱௬. சிறுகுடி | | |
| திடமலிமதி | ௩ | ௭௫௨ |
| ௱௭. சிற்றேமம் | | |
| நிறைவெண் | ௩ | ௬௩௪ |
| ௱௮. செங்காட்டங் | | |
| குடி | | |
| நறைகொண்ட | ௧ | ௧௩௬ |
| பைங்கோட் | ௩ | ௬௭௫ |
| ௱௯. செம்பொன்பள் | | |
| மருவார்கு [ளி | ௧ | ௫௭ |
| ௱௰. சேய்ஞலூர் | | |
| நூலடைந்த | ௧ | ௱௮ |
| ௧௧௧. சேறை | | |
| முறியுறுநிற | ௩ | ௭௩௧ |
| ௧௧௨. சோபுரம் | | |
| (தியாகவல்லி) | | |
| வெங்கண் | ௧ | ௧௧௫ |

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திருமு. எண் | பக்கம் |
|---|---|---|
| ககங. சோற்றுத்துறை | | |
| செப்பநெஞ்சே | க | சுங |
| ககச. தண்டலைநீணெறி | | |
| விரும்புந் | ங | சுசக |
| ககரு. தருமபுரம் | | |
| மாதர்மட | க | உஅஅ |
| ககசு. தலைச்சங்காடு | | |
| நலச்சங்க | உ | சாஉ |
| ககஎ. திருந்துதேவன்குடி | | |
| மருந்துவேண் | ங | சுாக |
| ககஅ. திலதைப்பதி | | |
| பொடிகள் | உ | ருசஉ |
| கககூ. துருத்தி (குற்றாலம்) | | |
| வரைத்தலை | உ | சகூசு |
| கஉய. தூங்கானைமாடம் (பெண்ணாகடம்) | | |
| ஒடுங்கும் | க | கஙக |
| கஉக. தெங்கூர் | | |
| புரைசெய் | உ | சஅஎ |
| கஉஉ. தெளிச்சேரி | | |
| பூவலர்ந் | உ | உகூஎ |
| கஉங. தென்குடித்திட்டை | | |
| முன்னைநான் | ங | சுஉய |
| உஉச. தேவூர் | | |
| பண்ணிலாவி | உ | சருசு |
| காடுபயில் | ங | எாரு |
| கஉரு. நணா (பவானிமுக்கூடல்) | | |
| பந்தார்வி | உ | சஙரு |
| கஉசு. நல்லம் | | |
| கல்லானிழன் | க | கஅஅ |
| கஉஎ. நல்லூர் | | |
| கொட்டும்ப | க | ககூய |
| பெண்ணமரு | உ | சாசு |
| வண்டிரிய | ங | எஉசு |
| கஉஅ. நல்லூர்ப்பெருமணம் (ஆச்சாபுரம்) | | |
| கல்லூர்ப் | ங | அகச |
| கஉகூ. நள்ளாறு | | |
| பாடகமெல் | க | கஅ |
| போகமார்த்த | க | ாக |
| ஏடுமலிகொ | உ | ஙருச |
| தளிரிளவள | ங | எஙங |
| கஙய. நறையூர்ச்சித்தீச்சரம் | | |
| ஊருலாவு | க | சுரு |
| பிறைகொள் | ,, | கருரு |
| நேரியனாகு | உ | சஎஉ |
| கஙக. நனிபள்ளி | | |
| காரைகள் | உ | சகூக |
| கஙஉ. நாகேச்சுரம் | | |
| பொன்னேர் | உ | கூஙஅ |
| தழைகொள் | ,, | ருசச |
| கஙங. நாகைக்காரோணம் (நாகபட்டினம்) | | |
| புனையும்விரி | க | கஅசு |
| கூனற்றிங்க | உ | ருஙஅ |
| கஙச. நாரையூர் | | |
| உரையினில் | உ | சகூக |
| காம்பினை | | |
| வென்ற | ங | எகூய |
| கடலிடை | ,, | எஎய |
| கஙரு. நாலூர் மயானம் | | |
| பாலூருமலை | உ | ஙஅக |
| கஙசு. நின்றியூர் | | |
| சூலம்படை | க | சங |
| கஙஎ. நெடுங்களம் | | |
| மறையுடை | க | ககஎ |
| கஙஅ. நெய்த்தானம் | | |
| மையாடியகண் | க | ஙஎ |
| கஙகூ. நெல்லிக்கா | | |
| அறத்தாலு | உ | ஙஉஅ |
| கசய. நெல்வாயில் (சிவபுரி) | | |

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திருமு எண் | பக்கம் |
|---|---|---|
| புடையினுர் | ௨ | ௩௪௧ |
| ௧௪௧. நெல்வாயிலரத்துறை | | |
| எந்தையீச | ௨ | ௪௮௰ |
| ௧௪௨. நெல்வெண்ணெய் | | |
| நல்வெணெய் | ௩ | ௭௫௰ |
| ௧௪௩. நெல்வேலி | | |
| மருந்தவை | ௩ | ௭௪௩ |
| ௧௪௪. பட்டீச்சரம் | | |
| பாடன்மறை | ௩ | ௭௱௧ |
| ௧௪௫. பந்தணை நல்லூர் | | |
| இடறினுர்கூற் | ௩ | ௮௱௪ |
| ௧௪௬. பரங்குன்றம் | | |
| நீடலர்சோ | ௧ | ௨௧௩ |
| ௧௪௭. பராய்த்துறை | | |
| நீறுசேர்வ | ௧ | ௨௮௬ |
| ௧௪௮. பரிதிநியமம் | | |
| விண்கொண்ட | ௩ | ௭௬௪ |
| ௧௪௯. பருப்பதம் (ஸ்ரீசைலம்) | | |
| சுடுமணிய | ௧ | ௨௪௭ |
| ௧௫௰. பழனம் | | |
| வேதமோதி | ௧ | ௧௪௭ |
| ௧௫௧. பழுவூர் | | |
| முத்தன்மிகு | ௨ | ௩௫௬ |
| ௧௫௨. பறியலூர் | | |
| கருத்தன் | ௧ | ௨௮௪ |
| ௧௫௩. பனந்தாள் | | |
| கண்பொலிநெற்றி | ௩ | ௬௭௩ |
| ௧௫௪. பனையூர் | | |
| அரவச்சடை | ௧ | ௮௧ |
| ௧௫௫. பாசூர் | | |
| சிந்தையிடை | ௨ | ௪௧௧ |
| ௧௫௬. பாச்சிலாச்சிராமம் | | |
| துணிவளர் | ௧ | ௯௮ |
| ௧௫௭. பாண்டிக்கொடுமுடி | | |
| பெண்ணமர் | ௨ | ௪௨௧ |
| ௧௫௮. பாதாளீச்சரம் | | |
| மின்னியல் | ௧ | ௨௨௭ |
| ௧௫௯. பாதிரிப்புலியூர் | | |
| முன்னநின்ற | ௨ | ௫௪௭ |
| ௧௬௰. பாம்புரம் | | |
| சீரணிதிகழ் | ௧ | ௯௧ |
| ௧௬௧. பாற்றுறை | | |
| காரார்கொன் | ௧ | ௧௨௫ |
| ௧௬௨. புகலூர் | | |
| குறிகலந்த | ௧ | ௪ |
| வெங்கள்விம் | ௨ | ௫௩௬ |
| ௧௬௩. புகலூர் வர்த்தமானீச்சரம் | | |
| பட்டம்பா | ௨ | ௪௮௪ |
| ௧௬௪. புத்தூர் | | |
| வெங்கள்விம் | ௧ | ௫௯ |
| ௧௬௫. புள்ளமங்கை | | |
| பாலுந்துறு | ௧ | [illegible] |
| ௧௬௬. புள்ளிருக்குவேளூர் (வைத்தீச்சுரன் கோயில்) | | |
| கள்ளார்ந்த | ௨ | ௩௭௫ |
| ௧௬௭. புறம்பயம் | | |
| மறம்பய | ௨ | ௩௪௯ |
| ௧௬௮. புறவார்பனங்காட்டூர் (பனையபுரம்) | | |
| விண்ணமர்ந் | ௨ | ௩௯௮ |
| ௧௬௯. புனவாயில் | | |
| மின்னியல் | ௩ | ௫௭௪ |
| ௧௭௰. புன்கூர் | | |
| முந்திநின்ற | ௧ | ௬௧ |
| ௧௭௧. பூவணம் | | |
| அறையார் | ௧ | ௧௪௨ |
| மாதர்மே | ௩ | ௫௧௧ |
| ௧௭௨. பெரும்புலியூர் | | |
| மண்ணுமோர் | ௨ | ௪௨௫ |
| ௧௭௩. பெருவேளூர் | | |
| அண்ணவுங் | ௩ | ௬௭௭ |

# தல அகராதி முதலியன

| தலம்—பதிகம் | திரு மு. எண் | பதிகம் | தலம்—பதிகம் | திரு மு. எண் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| ௧௭௪. பேணுபெருந் துறை | | | ௧௮௮. மீயச்சூர் | | |
| பைம்மாநாகம் | ௧ | ௯௪ | காயச்செவ் | ௨ | ௪௧௫ |
| ௧௭௫. பைஞ்ஞீலி | | | ௧௮௯. முதுகுன்றம் (விருத்தாசலம்) | | |
| ஆரிடம்பா | ௩ | ௫௮௦ | மத்தாவரை | ௧ | ௩௧ |
| ௧௭௬. மங்குலக்குடி | | | தேவராயு | ,, | ௧௧௯ |
| சீரினார்மணி | ௨ | ௩.௧௧ | நின்றுமலர் | ,, | ௨௦௩ |
| ௧௭௭. மணஞ்சேரி | | | மெய்த்தாறு | ,, | ௨௭௧ |
| அயிலாருமம்ப | ௨ | ௩௨௨ | தேவாசிறி | ௨ | ௪௧௯ |
| ௧௭௮. மயிலாடுதுறை (மாயூரம்) | | | வண்ணமாம | ௩ | ௬௩௯ |
| | | | முரசதிர்ந் | ,, | ௭௫௫ |
| கரவின்றி | ௧ | ௮௩ | ௧௯௦. முல்லைவாயில் (தென்) | | |
| ஏனவெயிறு | ௩ | ௬௯௩ | துளிமண்டி | ௨ | ௪௭௫ |
| ௧௭௯. மயிலாப்பூர் | | | ௧௯௧. மூக்கீச்சுரம் (உறையூர்) | | |
| மட்டிட்ட | ௨ | ௩௮௩ | சாந்தம் | ௨ | ௫௪௫ |
| ௧௮௦. மயேந்திரப் பள்ளி | | | ௧௯௨. வக்கரை | | |
| திரைதருபவள | ௩ | ௬௧௩ | கரையணி | ௩ | ௬௬௯ |
| ௧௮௧. மருகல் (செங்காட்டங்குடி [யும்) | | | ௧௯௩. வடகூர் | | |
| அங்கமும் | ௧ | ௧௫ | சுடுகூடெரி | ௪ | ௧௯௨ |
| சடையாயெ | ௨ | ௩௨௬ | ௧௯௪. வலஞ்சுழி | | |
| ௧௮௨. மழபாடி | | | விண்டெலா | ௨ | ௨௯௫ |
| வளையும்வல் | ௨ | ௩௦௯ | என்னபுண் | ,, | [illegible] |
| காலையார் | ௩ | ௬௦௭ | பள்ளமதாய | ,, | [illegible] |
| அங்கையார | ,, | ௬௪௫ | ௧௯௫. வலம்புரம் | | |
| ௧௮௩. மறைக்காடு (வேதாரணியம்) | | | கொடியுடை | ௩ | [illegible] |
| | | | ௧௯௬. வலிதாயம் (பாடி) | | |
| சிலைதனைநடு | ௧ | ௫௧ | | | |
| சதுரம்மறை | ௨ | ௩௬௨ | பத்தரோடு | ௧ | [illegible] |
| பொங்குவெண் | ,, | ௪௮௩ | ௧௯௭. வலிவலம் | | |
| கற்பொலிசுர | ௩ | ௭௧௧ | ஒல்லையா | ௧ | ௧௧௩ |
| ௧௮௪. மாகறல் | | | பூவியல்புரி | ,, | [illegible] |
| விங்குவிளை | ௩ | ௬௯௮ | ௧௯௮. வல்லம் | | |
| ௧௮௫. மாணிகுழி | | | எரித்தவன் | ௧ | ௨௩௭ |
| பொன்னியல் | ௩ | ௭௧௨ | ௧௯௯. வாஞ்சியம் | | |
| ௧௮௬. மாந்துறை | | | வன்னிகொன் | ௨ | ௩௦௫ |
| செம்பொனார் | ௨ | ௫௨௫ | ௨௦௦. வாய்மூர் | | |
| ௧௮௭. மாற்பேறு | | | தளிரிளவள | ௨ | ௫௨௭ |
| ஊறியார் | ௧ | ௧௨௩ | ௨௦௧. வாழ்கொளி | | |
| குருந்தவன் | ,, | ௨௩௯ | புத்தூர் | | |

# ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய
# பண் மொத்தம்

| முதற்றிருமுறை | | இரண்டாந் திருமுறை | | மூன்றாந் திருமுறை | |
|---|---|---|---|---|---|
| க | நட்டபாடை | க | இந்தளம் | க | காந்தாரபஞ்சமம் |
| உ | தக்கராகம் | உ | சீகாமரம் | உ | கொல்லி |
| ௩ | பழந்தக்கராகம் | ௩ | காந்தாரம் | ௩ | கொல்லிக்கௌவாணம் |
| ச | தக்கேசி | ச | பியந்தைக் காந்தாரம் | ச | கௌசிகம் |
| ரு | குறிஞ்சி | ரு | நட்டராகம் | ரு | பஞ்சமம் |
| சா | வியாழக்குறிஞ்சி | சா | செவ்வழி | சா | சாதாரி |
| எ | மேகராகக் குறிஞ்சி | | | எ | பழம்பஞ்சுரம் |
| | பண்ணமைதி பெறு யாழ்மூரி | | | அ | புறநீர்மை |
| | | | | கூ | அந்தாளிக்குறிஞ்சி |

ஆக மூன்று திருமுறைகட்கும் மொத்தப் பண் உஉ-ம் யாழ்மூரியும்.

## இப்பண் இருபத்திரண்டிற்கும் ஏற்பட்ட பதிகங்கள்

| முதற்றிருமுறை | | | இரண்டாந் திருமுறை | | | மூன்றாந் திருமுறை | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| க | நட்டபாடை | உஉ | க | இந்தளம் | ௩கூ | க | காந்தாரபஞ்சமம் | உ௩ |
| உ | தக்கராகம் | உச | உ | சீகாமரம் | கச | உ | கொல்லி | கஅ |
| ௩ | பழந்தக்கராகம் | கரு | ௩ | காந்தாரம் | உகூ | ௩ | கொல்லிக்கௌவாணம் | க |
| ச | தக்கேசி | கஉ | ச | பியந்தைக்காந்தாரம் | கச | ச | கௌசிகம் | க௩ |
| ரு | குறிஞ்சி | உகூ | ரு | நட்டராகம் | கசா | ரு | பஞ்சமம் | கச |
| சா | வியாழக்குறிஞ்சி | உரு | சா | செவ்வழி | ய | சா | சாதாரி | உசா |
| எ | மேகராகக்குறிஞ்சி | எ | | ஆ | கஉஉ | எ | பழம்பஞ்சுரம் | கஅ |
| | யாழ்மூரி | க | | | | அ | புறநீர்மை | கூ |
| | ஆ | க௩ரு | | | | கூ | அந்தாளிக்குறிஞ்சி | ச |
| | | | | | | | ஆ | கஉசா |

யாழ்மூரியோடு பண் உஉ - க்கும் பதிகம் ௩அ௩.

இவற்றோடு திருமறைக்காடு பண். கொல்லி வெள்ளிப்பதிகம் ஒன்றும், நூதனமாகக் கிடைத்த திருவிடைவாய்ப்பதிகம் ஒன்றும் சேர்த்து மொத்தப் பதிகம் ௩அரு.

இவற்றில் தலப் பதிகம் ௩எஅ, பொதுப் பதிகம் எ

ஆக மொத்தம் ௩அரு.

இவற்றின் தலமுறை விவரம் பின்வருமாறு :—

# பதிக வரலாறுகளின் அட்டவணை

# பதக வரலாறுகளின் அட்டவணை

# பதிக வரலாறுகளின் அட்டவணை

உ

திருச்சிற்றம்பலம்



## திருஞான சம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

# முதற்றிருமுறை

## திருப்பிரமபுரம் — பதிகம் க

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. க

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. உ

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. ௩

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்இவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலமிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. ரு

மறைகலந்தவொலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தஇன வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

சடைமுயங்குபுன லன்னனலன்னெரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. எ

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்குமுல கிற்பலவூழிக டோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. அ

தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. கூ

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயமிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. ௰

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே.　　கக

திருச்சிற்றம்பலம்

இவ்வூர் சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - பிரமபுரீசர்; இறைவி - திருநிலைநாயகி.
திருத்தோணி இறைவன் - தோணியப்பர்; இறைவி - பெரியநாயகி.

---

**பதிக வரலாறு:**

சோழ நாட்டிலே, பிரமபுரம் முதலிய பன்னிரு திருப்பெயருடைய சீகாழியிலே, பார்ப்பன குலத்திலே, கவுணியர் வகுப்பிலே சிவபாதவிருதயர் என்பார் ஒருவர் சைவப்பற்று மிக்குடையராயிருந்தார். அவர், அந்நாளில் சமணம், புத்தம் முதலிய புறப்புறச் சமயக் களை மிகுந்து சைவ வான்பயிர் குன்றுதலை நோக்கி உளம் வருந்திச் சைவத்தை நிலை நாட்டுதற்குரிய மகப்பேறு கருதி பெரியநாயகியாரோடு ஆண்டெழுந்தருளிய திருத்தோணியப்பரைக் குறித்து நோற்பாராயினர். அந்நோன்பு வழியாக அவ்வம்மையப்பருடைய திருவருட்பெருக்கினாலே, அவரது மனைவியார் பகவதியம்மையாருடைய மணிவயிற்றிலே சித்திரைத் திங்களிலே திருவாதிரை நாளிலே திருமகனார் ஒருவர் தோன்றியருளினார். அவர் தமது மூன்றும் ஆண்டிலே ஒரு நாள் திருக்கோயிலிலுள்ள திருக்குளத்திலே நீராடச் சென்ற தந்தையோடு அழுதுகொண்டு பின் செல்ல, சிவபாதவிருதயர் அவரை அக்குளக்கரையிலே இருத்தி நீரின் மூழ்கி, மறமகற்றும் மந்திர சிந்தனையிலிருந்தார். அப்போது பிள்ளையார் திருத்தோணிக் கோபுரத்தைப் பார்த்து, "அம்மே, அப்பா" என்று அழைத்து அழத் திருத்தோணியப்பர் அவருக்கு அருள்புரியுமாறு அம்மையாரோடு விடையூர்ந்து எழுந்தருளிவந்தார். அம்மையார் தம்முடைய ஞானத் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்திலே கறந்து, கண்ணீர் துடைத்துப் பிள்ளையாருடைய கையிலே கொடுத்து ஊட்டத், தோணியப்பர் அவரது அழுகை தீர்த்து ஆண்டருளினார். பிள்ளையார் எல்லா உலகங்கட்கும் இருமுதுகுரவராகிய இறைவன் இறைவி இருவராலும் ஆட்கொள்ளப் பெற்றமையால் 'ஆளுடைய பிள்ளையார்' எனவும், சிவஞானசம்பந்தம் பெற்றமையால் 'திருஞானசம்பந்தப்பெருமான்' எனவும் திருப்பெயர் உடையவராயினர்.

சிறிது நேரத்திலே சிவபாதவிருதயர் செய்கடன் முடித்துக் கரையேறி ஆளுடைய பிள்ளையாரைப் பார்த்து, 'நீ யார் தந்த பாலை உண்டாய்?' என முனிவுற்று, 'எச்சில் மயங்க உனக்கு இப்பாலை இட்டாரைக் காட்டு' என ஒரு மாறுகொண் டோச்சிக் கேட்பப் பிள்ளையார் இன்ப வெள்ளத் தாழ்ந்து, உச்சிமேல் எடுத்த தந்திருக்கை விரலினாலே சுட்டி வானிலே உமையம்மையாரோடு விடையூர்ந்து நின்றருளிய பெருமானைக் காட்டி, உலக முய்யப் பாடுந் தமது திருப்பாடல் சிவபெருமானது திருச்செவியில் ஏறும் பொருட்டு முதலில் அத்திருச்செவியைச் சிறப்பித்துத் திருவடையாளங்களைச் சாற்றி, மறை முதலாகிய ஓங்காரத் திருவெழுத்தைத் தகரமெய்யொடு புணர்த்தித் 'தோடுடைய செவியன்' என்னும் இம் மெய்ம்மொழித் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.



## திருப்புகலூர் — பதிகம் ௨

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

குறிகலந்தவிசை பாடலினானசை யாலிவ்வுலகெல்லாம்
நெறிகலந்ததொரு நீர்மையனாயெரு தேறிப்பலிபேணி
முறிகலந்ததொரு தோலரைமேலுடை யானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும்புகலூரே. ௧

காதிலங்குகுழை யன்னிழைசேர்திரு மார்பனொருபாகம்
மாதிலங்குதிரு மேனியினான்கரு மானினுரியாடை
மீதிலங்கவணிந் தானிமையோர்தொழ மேவுமிடஞ்சோலைப்
போதிலங்குநசை யால்வரிவண்டிசை பாடும்புகலூரே. ௨

பண்ணிலாவும்மறை பாடலினானிறை சேரும்வளையங்கைப்
பெண்ணிலாவவுடை யான்பெரியார்கழ லென்றுந்தொழுதேத்த
உண்ணிலாவியவர் சிந்தையுணீங்கா வொருவன்னிடமென்பர்
மண்ணிலாவும்மடி யார்குடிமைத்தொழின் மல்கும்புகலூரே. ௩

நீரின்மல்குசடை யன்விடையன்னடை யார்தம்மரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலை யேசிலையாகமு னிந்தானுலகுய்யக்
காரின்மல்குகட னஞ்சமதுண்ட கடவுளிடமென்பர்
ஊரின்மல்கிவளர் செம்மையினாலுயர் வெய்தும்புகலூரே. ௪

செய்யமேனிவெளி யபொடிப்பூசுவர் சேரும்மடியார்மேல்
பையநின்றவினை பாற்றுவர்போற்றிசைத் தென்றும்பணிவாரை
மெய்யநின்றபெரு மானுறையும்மிட மென்பரருள்பேணிப்
பொய்யிலாதமனத் தார்பிரியாதுபொ ருந்தும்புகலூரே. ௫

கழலினோசைசிலம் பின்னொலியோசை கலிக்கப்பயில்கானில்
குழலினோசைகுறட் பாரிடம்போற்றக் குனித்தாரிடமென்பர்
விழவினோசையடி யார்மிடைவுற்று விரும்பிப்பொலிந்தெங்கும்
முழவினோசைமுந் நீரயர்வெய்த முழங்கும்புகலூரே. ௬

வெள்ளமார்ந்துமிளிர் செஞ்சடைதன்மேல் விளங்கும்மதிசூடி
உள்ளமார்ந்தவடி யார்தொழுதேத்த வுகக்கும்மருடந்தெம்
கள்ளமார்ந்தகழி யப்பழிதீர்த்த கடவுளிடமென்பர்
புள்ளையார்ந்தவய லின்விளைவால்வள மல்கும்புகலூரே. ௭

தென்னிலங்கையரை யன்வரைபற்றி யெடுத்தான்முடிதிண்டோள்
தன்னிலங்குவிர லானெரிவித்திசை கேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடை யான்மடமாதொடு மேவும்மிடமென்பர்
பொன்னிலங்குமணி மாளிகைமேன்மதி தோயும்புகலூரே. ௮

நாகம்வைத்தமுடி யானடிகைதொழு தேத்தும்மடியார்கள்
ஆகம்வைத்தபெரு மான்பிரமன்னொடு மாலுந்தொழுதேத்த
ஏகம்வைத்தவெரி யாய்மிகவோங்கிய வெம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழி லின்னிழலான்மது வாரும்புகலூரே. ௯

செய்தவத்தர்மிகு தேரர்கள்சாக்கியர் செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழி யைத்தவிர்வார்கள் கடவுளிடம்போலும்
கொய்துபத்தர்மல ரும்புனலுங்கொடு தூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல் வாருயர்வானக மெய்தும்புகலூரே. ௰

புற்றில்வாழுமர வம்மரையார்த்தவன் மேவும்புகலூரைக்
கற்றுநல்லவர் காழியுண்ஞானசம் பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றும்மிசை பாடியமாந்தர் பரமன்னடிசேர்ந்து
குற்றமின்றிக்குறை பாடொழியாப்புக ழோங்கிப்பொலிவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இறைவன் - அக்கினீசுவரர்; இறைவி - கருந்தார்க்குழலம்மை.

---

**பதிக வரலாறு:**

சிரபுரச் செம்மலார் திருப்புகலூருக்கு எழுந்தருளும்போது இதன் முன்னரே யாண்டெழுந்தருளியிருந்த நாவினுக்கரசரும் நம்பி சீர் முருகரும் அடியார் குழாத்தோடு எதிர்கொண் டழைத்தருள அவரோடு சென்று இறைவனை வழிபட்டு வணங்கி முருக நாயனார் திருமடத்திலே எழுந்தருளியிருந்தார். அப்போது திருநீலநக்கநாயனாரும் சிறுத்தொண்ட நாயனாருந் தத்தமதூர்களினின்றும் எழுந்தருளி யளவளாவியிருந்தார்கள். அந்நாட்களிலொருநாள் பிள்ளையார் அவர் யாவரோடுந் திருக்கோயிலுக்குச் சென்று கும்பிடுங் கொள்கையிற் 'குறிகலந்தவிசை' யென்றெடுத்துத் திருப்பதிகம் பாடி யப்பதிகத்தின் திருப்பாட்டுக்களி னிறுதிதோறும் அத்திருப்பதியின் தலைமைசான்ற நிலைமையினைச் சால்புற விளம்பி யருளினார்.



## திருவலிதாயம்

பதிகம் ௩

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

பத்தரோடுபல ரும்பொலியம்மல ரங்கைப்புனல்தூவி
ஒத்தசொல்லியுல கத்தவர் தாந்தொழு தேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெரு மான்பிரியாதுறை கின்றவலிதாயம்
சித்தம்வைத்தவடி யாரவர்மேலடை யாமற்றிடர்நோயே. ௧

படையிலங்குகர மெட்டுடையான்படி றுகக்கனலேந்திக்
கடையிலங்குமனை யிற்பலிகொண்டுணுங் கள்வனுறைகோயில்
மடையிலங்குபொழி லின்னிழல்வாய்மது வீசும்வலிதாயம்
அடையநின்றவடி யார்க்கடையாவினை யல்லற்றுயர்தானே. ௨

ஐயனொய்யனணி யன்பிணியில்லவ ரென்றுந்தொழுதேத்தச்
செய்யன்வெய்யபடை யேந்தவல்லான்றிரு மாதோடுறைகோயில்
வையம்வந்துபணி யப்பிணிதீர்த்துயர் கின்றவலிதாயம்
உய்யும்வண்ணநினை மின்னினைந்தால்வினை தீருந்நலமாமே. ௩

ஒற்றையேறதுடை யானடமாடியோர் பூதப்படைசூழப்
புற்றினாகமரை யார்த்துழல்கின்றவெம் பெம்மான்மடவாளோ
டுற்றகோயிலுல கத்தொளிமல்கிட வுள்கும்வலிதாயம்
பற்றிவாழும்மது வேசரணாவது பாடும்மடியார்க்கே. ௪

புந்தியொன்றிநினை வார்வினையாயின தீரப்பொருளாய
அந்தியன்னதொரு பேரொளியானமர் கோயிலயலெங்கும்
மந்திவந்துகடு வன்னொடுங்கூடி வணங்கும்வலிதாயஞ்
சிந்தியாதவவர் தம்மடும்வெந்துயர் தீர்தலெளிதன்றே. ௫

ஊனியன்றதலை யிற்பலிகொண்டுல கத்துள்ளவரேத்தக்
கானியன்றகரி யின்னுரிபோர்த்துழல் கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறை வைத்தவெம்மாதி மகிழும்வலிதாயந்
தேனியன்றநறு மாமலர்கொண்டுநின் றேத்தத்தெளிவாமே. ௬

கண்ணிறைந்தவிழி யின்னழலால்வரு காமன்னுயிர்வீட்டிப்
பெண்ணிறைந்தவொரு பான்மகிழ்வெய்திய பெம்மானுறைகோயில்
மண்ணிறைந்தபுகழ் கொண்டடியார்கள் வணங்கும்வலிதாயத்
துண்ணிறைந்தபெரு மான்கழலேத்தநம் முண்மைக்கதியாமே. ௭

கடலினஞ்சமமு துண்டிமையோர்தொழு தேத்தநடமாடி
அடலிலங்கையரை யன்வலிசெற்றரு ளம்மானமர்கோயில்
மடலிலங்குகமு கின்பலவின்மது விம்மும்வலிதாயம்
உடலிலங்குமுயி ருள்ளளவுந்தொழ வுள்ளத்துயர்போமே. ௮

பெரியமேருவரை யேசிலையாமலை வுற்ருரெயின்மூன்றும்
எரியவெய்தவொரு வன்னிருவர்க்கறி வொண்ணாவடிவாகும்
எரியதாகியுற வோங்கியவன்வலி தாயந்தொழுதேத்த
உரியராகவுடை யார்பெரியாரென வுள்குமுலகோரே. ௯

ஆசியாரமொழி யாரமண்சாக்கிய ரல்லாதவர்கூடி
ஏசியீரமில ராய்மொழிசெய்தவர் சொல்லைப்பொருளென்னேல்
வாசிதீரவடி யார்க்கருள்செய்து வளர்ந்தான்வலிதாயம்
பேசுமார்வமுடை யாரடியாரெனப் பேணும்பெரியோரே. ௰

வண்டுவைகும்மண மல்கியசோலை வளரும்வலிதாயத்
தண்டவாணனடி யுள்குதலாலருண் மாலைத்தமிழாகக்
கண்டல்வைகுகடற் காழியுண்ஞானசம் பந்தன்றமிழ்பத்துங்
கொண்டுவைகியிசை பாடவல்லார்குளிர் வானத்துயர்வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இவ்வூர் தொண்டை நாட்டில் பாடியென வழங்கப்படுகிறது.
இறைவன் - வலிதாயநாதர்; இறைவி - தாயம்மை.



## திருப்புகலியும் திருவீழிமிழலையும் — பதிகம் ௪

வி ன வு ரை

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற
வாணுதன் மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழி யாமறை யோர்களேத்தப்
புகலி நிலாவிய புண்ணியனே
எம்மிறை யேயிமை யாதமுக்க
ணீசவெ னேசவி தென்கொல்சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை
விண்ணிழி கோயில் விரும்பியதே. ௧

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழினுழைந்து கூர்வாயா
லிறகுலர்த்திக் கூதனீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கான
லிரைதேருந் திருவையாறே.

ஊன்பாயு முடைதலைகொண் டூரூரின்
பலிக்குழல்வா ருமையாள்பங்கர்
தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார்
தழலுருவர் தங்குங்கோயில்
மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கடோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவையாறே.

நீரோடு கூவிளமு நிலாமதியும்
வெள்ளெருக்கு நிறைந்தகொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த
தத்துவனார் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடு மரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலுந் திருவையாறே.

வேந்தாகி விண்ணவர்க்கு மண்ணவர்க்கு
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனார் நண்ணுங்கோயில்
காந்தார மிசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே.

நின்றுலா நெடுவிசும்பி னெருக்கிவரு
புரமூன்று நீள்வாயம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்
குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே. ௭

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
வரக்கர்கோன் றலைகள்பத்தும்
மஞ்சாடு தோணெரிய வடர்த்தவனுக்
கருள்புரிந்த மைந்தர்கோயில்
இஞ்சாய விளந்தெங்கின் பழம்வீழ
விளமேதி யிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியுந் திருவையாறே. ௮

மேலோடி விசும்பணவி வியனிலத்தை
மிகவகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனு மறியாத
வகைநின்றான் மன்னுங்கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. ௯

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு
சாக்கியருங் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே
யாளாமின் மேவித்தொண்டீர்
எண்டோளர் முக்கண்ண ரெம்மீச
ரிறைவரினி தமருங்கோயில்
செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்
வந்தலைக்குந் திருவையாறே. ௰

அன்னமலி பொழில்புடைசூ ழையாற்றெம்
பெருமானை யந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையா லிவைபத்து மிசையுங்கா
லீசனடி யேத்துவார்கள்
தன்னிசையோ டமருலகிற் றவநெறிசென்
றெய்துவார் தாழாதன்றே. கக

திருச்சிற்றம்பலம்



## திருமுதுகுன்றம் பதிகம் கஉக

பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

மெய்த்தாறு சுவையு மேழிசையு
மெண்குணங்களும் விரும்புநால்வே
தத்தாலு மறிவொண்ணா நடைதெளியப்
பளிங்கேபோ லரிவைபாகம்
ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்
கருதுமூ ருலவுதெண்ணீர்
முத்தாறு வெதிருதிர நித்திலம்வா
ரிக்கொழிக்கு முதுகுன்றமே. க

வேரிமிகு குழலியொடு வேடுவனாய்
வெங்கானில் விசயன்மேவு
போரின்மிகு பொறையளந்து பாசுபதம்
புரிந்தளித்த புராணர்கோயில்
காரின்மலி கடிபொழில்கள் கனிகள்பல
மலருதிர்த்துக் கயமுயங்கி
மூரிவளங் கிளர்தென்ற றிருமுன்றிற்
புகுந்துலவு முதுகுன்றமே. உ

தக்கனது பெருவேள்விச் சந்திரனிந்
திரனெச்ச னருக்கனங்கி
மிக்கவிதா தாவினொடும் விதிவழியே
தண்டித்த விமலர்கோயில்
கொக்கினிய கொழும்வருக்கை கதலிகமு
குயர்தெங்கின் குலைகொள்சோலை
முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா
நீள்வயல்சூழ் முதுகுன்றமே. ௩

வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய
விறலழிந்து விண்ணுளோர்கள்
செம்மலரோ னிந்திரன்மால் சென்றிரப்பத்
தேவர்களே தேரதாக
மைம்மருவு மேருவிலு மாசுணநா
ணரியெரிகால் வாளியாக
மும்மதிலு நொடியளவிற் பொடிசெய்த
முதல்வனிட முதுகுன்றமே. ௪

இழைமேவு கலையல்கு லேந்திழையா
ளொருபாலா யொருபாலெள்கா
துழைமேவு முரியுடுத்த வொருவனிருப்
பிடமென்ப ரும்பரோங்கு
கழைமேவு மடமந்தி மழைகண்டு
மகவினொடும் புகவொண்கல்லின்
முழைமேவு மால்யானை யிரைதேரும்
வளர்சாரன் முதுகுன்றமே. ௫

நகையார்வெண் டலைமாலை முடிக்கணிந்த
நாதனிட நன்முத்தாறு
வகையாரும் வரைப்பண்டங் கொண்டிரண்டு
கரையருகு மறியமோதித்
தகையாரும் வரம்பிடறிச் சாலிகழு
நீர்குவளை சாயப்பாய்ந்து
முகையார்செந் தாமரைகண் முகமலர
வயறழுவு முதுகுன்றமே. ௬

அறங்கிளரு நால்வேத மாலின்கீ
ழிருந்தருளி யமரர்வேண்ட
நிறங்கிளர்செந் தாமரையோன் சிரமைந்தி
னொன்றறுத்த நிமலர்கோயில்
திறங்கொண்மணித் தரளங்கள் வரத்திரண்டங்
கெழிற்குறவர் சிறுமிமார்கள்
முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன்றமே. ௭

கதிரொளிய நெடுமுடிபத் துடையகட
லிலங்கையர்கோன் கண்ணும்வாயும்
பிதிரொளிய கனல்பிறங்கப் பெருங்கயிலை
மலையைநிலை பெயர்த்தஞான்று
மதிலளகைக் கிறைமுரல மலரடியொன்
றூன்றிமறை பாடவாங்கே
முதிரொளிய சுடர்நெடுவாண் முன்னீந்தான்
வாய்ந்தபதி முதுகுன்றமே. ௮

பூவார்பொற் றவிசின்மிசை யிருந்தவனும்
பூந்துழாய் புனைந்தமாலும்
ஓவாது கழுகேன மாயுயர்ந்தாழ்ந்
துறநாடி யுண்மைகாணாத்
தேவாருந் திருவுருவன் சேருமலை
செழுநிலத்தை மூடவந்த
மூவாத முழங்கொலிநீர் கீழ்தாழ
மேலுயர்ந்த முதுகுன்றமே. ௯

மேனியிற்சீ வரத்தாரும் விரிதருதட்
டுடையாரும் விரவலாகா
வூனிகளா யுள்ளார்சொற் கொள்ளாது
முள்ளுணர்ந்தங் குய்மின்றொண்டீர்
ஞானிகளா யுள்ளார்க ணான்மறையை
முழுதுணர்ந்தைம் புலன்கள்செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
தவம்புரியு முதுகுன்றமே. ௰

முழங்கொலிநீர் முத்தாறு வலஞ்செய்யு
முதுகுன்றத் திறையைமூவாப்
பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்துடைய
கழுமலமே பதியாக்கொண்டு
தழங்கெரிமூன் றோம்புதொழிற் றமிழ்ஞான
சம்பந்தன் சமைத்தபாடல்
வழங்குமிசை கூடும்வகை பாடுமவர்
நீடுலக மாள்வர்தாமே. கக

திருச்சிற்றம்பலம்



## திருவீழிமிழலை

பதிகம் கூஉ

பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங்
கீரிருவர்க் கிரங்கிநின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்
நெறியளித்தோ னின்றகோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோது மோசைகேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லு மிழலையாமே. க

பொறியரவ மதுசுற்றிப் பொருப்பேமத்
தாகப்புத் தேளிர்கூடி
மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட
கண்டத்தோன் மன்னுங்கோயில்

செறியிதழ்த்தா மரைத்தவிசிற் றிகழ்ந்தோங்கு
மிலைக்குடைக்கீழ்ச் செய்யார்செந்நெல்
வெறிகதிர்ச்சா மரையிரட்ட விளவன்னம்
வீற்றிருக்கு மிழலையாமே.

எழுந்துலகை நலிந்துழலு மவுணர்கடம்
புரமூன்று மெழிற்கணுடி
உழுந்துருளு மளவையினொள் ளெரிகொளவெஞ்
சிலைவளைத்தோ னுறையுங்கோயில்
கொழுந்தரள நகைகாட்டக் கோகநத
முகங்காட்டக் குதித்துநீர்மேல்
விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம்
வாய்காட்டு மிழலையாமே.

உரைசேரு மெண்பத்து நான்குநூ
றாயிரமாம் யோனிபேத
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
யங்கங்கே நின்றான்கோயில்
வரைசேரு முகின்முழவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள்
கையேற்கு மிழலையாமே.

காணுமா றரியபெரு மானாகிக்
காலமாய்க் குணங்கண்மூன்றாய்ப்
பேணுமூன் றுருவாகிப் பேருலகம்
படைத்தளிக்கும் பெருமான்கோயில்
தாணுவாய் நின்றபர தத்துவனை
யுத்தமனை யிறைஞ்சீரென்று
வேணுவார் கொடிவிண்ணோர் தமைவிளிப்ப
போலோங்கு மிழலையாமே.

அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற்
றைம்புலனு மடக்கிஞானம்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்
துள்ளிருக்கும் புராணர்கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்
கந்திகழச் சலசத்தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட
மணஞ்செய்யு மிழலையாமே. ௬

ஆறாடு சடைமுடிய னனலாடு
மலர்க்கைய னிமயப்பாவை
கூறாடு திருவுருவன் கூத்தாடுங்
குணமுடையோன் குளிருங்கோயில்
சேறாடு செங்கழுநீர்த் தாதாடி
மதுவுண்டு சிவந்தவண்டு
வேறாய வுருவாகிச் செவ்வழிநற்
பண்பாடு மிழலையாமே. ௭

கருப்பமிகு முடலடர்த்துக் காலூன்றிக்
கைமறித்துக் கயிலையென்னும்
பொருப்பெடுக்க லுறுமரக்கன் பொன்முடிதோ
ணெரித்தவிரற் புனிதர்கோயில்
தருப்பமிகு சலந்தரன்ற னுடறடிந்த
சக்கரத்தை வேண்டியீண்டு
விருப்பொடுமால் வழிபாடு செய்யவிழி
விமானஞ்சேர் மிழலையாமே. ௮

செந்தளிர்மா மலரோனுந் திருமாலு
மேனமோ டன்னமாகி
அந்தமடி காணாதே யவரேத்த
வெளிப்பட்டோ னமருங்கோயில்

புந்தியினான் மறைவழியே புற்பரப்பி
நெய்சமிதை கையிற்கொண்டு
வெந்தழலின் வேட்டுலகின் மிகவளிப்போர்
சேருமூர் மிழலையாமே. ௯

எண்ணிறந்த வமணர்களு மிழிதொழில்சேர்
சாக்கியரு மென்றுந்தன்னை
நண்ணரிய வகைமயக்கித் தன்னடியார்க்
கருள்புரியு நாதன்கோயில்
பண்ணமரு மென்மொழியார் பாலகரைப்
பாராட்டு மோசைகேட்டு
விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோ
டும்மிழியு மிழலையாமே. ௰

மின்னியலு மணிமாட மிடைவீதி
மிழலையான் விரையார்பாதம்
சென்னிமிசைக் கொண்டொழுகுஞ் சிரபுரக்கோன்
செழுமறைகள் பயிலுநாவன்
பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்
பரிந்துரைத்த பத்துமேத்தி
இன்னிசையாற் பாடவல்லா ரிருநிலத்தி
லீசனெனு மியல்பினோரே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கச்சியேகம்பம் — பதிகம் ௧௩௩

பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சி தன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற வணங்கினோ டாடல்புரி
எந்தை மேவிய வேகம்பந் தொழுதேத்த விடர்கெடுமே. ௧

வரந்திகழு மவுணர் மாநகர்மூன் றுடன்மாய்ந் தவியச்
சரந்துரந் தெரிசெய்த தாழ்சடைச் சங்கரன் மேயவிடம்
குருந்த மல்லிகை கோங்குமா தவிநல்ல குராமரவம்
திருந்துபைம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. ௨

வண்ணவெண் பொடிப்பூசு மார்பின் வரியர வம்புனைந்து
பெண்ணமர்ந் தெரியாடல் பேணிய பிஞ்ஞகன் மேயவிடம்
விண்ணமர் நெடுமாட மோங்கி விளங்கிய கச்சிதன்னுள்
திண்ணமாம் பொழில்சூழ்ந்த வேகம்பஞ் சேர விடர்கெடுமே. ௩

தோலுநூ லுந்துதைந்த வரைமார்பிற் சுடலைவெண் ணீறணிந்து
காலன்மாள் வுறக்காலாற் காய்ந்த கடவுள் கருதுமிடம்
மாலைவெண் மதிதோயு மாமதிற் கச்சி மாநகருள்
ஏலநாறிய சோலைசூ ழேகம்ப மேத்த விடர்கெடுமே. ௪

தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடைத் தூமதி யம்புனைந்து
பாடனான் மறையாகப் பல்கணப் பேய்க ளவைசூழ
வாடல்வெண் டலையோ டனலேந்தி மகிழ்ந்துட னாடல்புரி
சேடர்சேர் கலிக்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. ௫

சாகம்பொன் வரையாகத் தானவர் மும்மதில் சாயவெய்து
ஆகம்பெண் ணொருபாக மாக வரவொடு நூலணிந்து
மாகந்தோய் மணிமாட மாமதிற் கச்சி மாநகருள்
ஏகம்பத் துறையீசன் சேவடி யேத்த விடர்கெடுமே. ௬

* * * * * . ௭

வாணிலா மதிபுல்கு செஞ்சடை வாளர வம்மணிந்து
நாணிடத் தினில்வாழ்க்கை பேணி நகுதலையிற் பலிதேர்ந்
தேணிலா வரக்கன்ற னீண்முடி பத்து மிறுத்தவனூர்
சேணுலாம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. ௮

பிரமனுந் திருமாலுங் கைதொழப் பேரழ லாயபெம்மான்
அரவஞ் சேர்சடை யந்தண னணங்கினொ டமருமிடம்
கரவில்வண் கையினார்கள் வாழ்கலிக் கச்சி மாநகருள்
மரவஞ்சூழ் பொழிலேகம் பந்தொழ வல்வினை மாய்ந்தறுமே. ௯

குண்டுபட் டமணா யவரொடுங் கூறைதம் மெய்போர்க்கும்
பிண்டர் கட்டிய கட்டுரை யவைகொண்டு விரும்பேன்மின்
விண்டவர் புரமூன்றும் வெங்கணை யொன்றினா லவியக்
கண்டவன் கலிக்கச்சி யேகம்பங் காண விடர்கெடுமே. ய

ஏரினார் பொழில்சூழ்ந்த கச்சி யேகம்ப மேயவனைக்
காரினார் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
சீரினார் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - ஏகாம்பரநாதர்; இறைவி - காமாட்சியம்மை.



## திருப்பறியலூர்வீரட்டம் பதிகம் கஉச

பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கருத்தன் கடவுள் கனலேந் தியாடும்
நிருத்தன் சடைமே னிரம்பா மதியன்
திருத்த முடையார் திருப்பறி யலூரில்
விருத்தனெ னத்தகும் வீரட்டத் தானே. க

மருந்த னமுதன் மயானத்துண் மைந்தன்
பெருந்தண் புனற்சென்னி வைத்த பெருமான்
திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே. உ

குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை விற்காமன்
விளிந்தா னடங்க வீந்தெய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. ங

பிறப்பாதி யில்லான் பிறப்பார் பிறப்புச்
செறப்பாதி யந்தஞ் செலச்செய்யுந் தேசன்
சிறப்பா ருடையார் திருப்பறி யலூரில்
விறற்பா ரிடஞ்சூழ வீரட்டத் தானே. ௪

கரிந்தா ரிடுகாட்டி லாடுங்க பாலி
புரிந்தார் படுதம் புறங்காட் டிலாடும்
தெரிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. ௫

அரவுற்ற நாணா வனலம்ப தாகச்
செருவுற் றவர்புரந் தீயெழச் செற்றான்
தெருவிற் கொடிசூழ் திருப்பறி யலூரில்
வெருவுற் றவர்தொழும் வீரட்டத் தானே. ௬

நரையார் விடையா னலங்கொள் பெருமான்
அரையா ரரவம் மழகா வசைத்தான்
திரையார் புனல்சூழ் திருப்பறி யலூரில்
விரையார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. ௭

வளைக்கும் மெயிற்றின் னரக்கன் வரைக்கீழ்
இளைக்கும் படிதா னிருந்தேழை யன்னம்
திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்
விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே. ௮

விளங்கொண் மலர்மே லயனோத வண்ணன்
துளங்கும் மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்
இளங்கொம் பனாளோ டிணைந்தும் பிணைந்தும்
விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே. ௯

சடையன் பிறையன் சமண்சாக் கியரோ
டுடையன் பிலாதா னடியார் பெருமான்
உடையன் புலியி னுரிதோ லரைமேல்
விடையன் றிருப்பறியல் வீரட்டத் தானே. ௰

நறுநீ ருகுங்காழி ஞானசம் பந்தன்
வெறிநீர்த் திருப்பறியல் வீரட்டத் தானைப்
பொறிநீ டரவன் புனைபாடல் வல்லார்க்
கறுநீ டவல மறும்பிறப் புத்தானே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வீரட்டேசர்; இறைவி - இளங்கொம்பனையாள்.



## திருப்பராய்த்துறை பதிகம் கரு

பண் - மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடை யண்ணலே. க

கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை
அந்தமில்ல வடிகளே. உ

வேதர்வேதமெல் லாமுறையால்விரித்
தோதநின்ற வொருவனார்
பாதிபெண்ணுரு வாவர்பராய்த்துறை
ஆதியாய வடிகளே. ௩

தோலுந்தம்மரை யாடைசுடர்விடு
நூலுந்தாமணி மார்பினர்
பாலுநெய்பயின் றாடுபேராய்த்துறை
ஆலநீழ லடிகளே. ௪

விரவிநீறுமெய் பூசுவர்மேனிமேல்
இரவினின்றெரி யாடுவர்
பரவினாரவர் வேதம்பராய்த்துறை
அரவமார்த்த வடிகளே. ௫

மறையுமோதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்ட முடையவர்
பறையுஞ்சங்கு மொலிசெய்பராய்த்துறை
அறையநின்ற வடிகளே. ௬

விடையுமேறுவர் வெண்பொடிப்பூசுவர்
சடையிற்கங்கை தரித்தவர்
படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை
அடையநின்ற வடிகளே. ௭

தருக்கின்மிக்க தசக்கிரிவன்றனை
நெருக்கினார்விர லொன்றினால்
பருக்கினாரவர் போலும்பராய்த்துறை
அரக்கன்றன்னை யடிகளே. ௮

நாற்றமாமல ரானொடுமாலுமாய்த்
தோற்றமும்மறி யாதவர்
பாற்றினார்வினை யானபராய்த்துறை
ஆற்றன்மிக்க வடிகளே. ௯

திருவிலிச்சில தேரமணாதர்கள்
உருவிலாவுரை கொள்ளேலும்
பருவிலாலெயி லெய்துபராய்த்துறை
மருவினான்றனை வாழ்த்துமே. ௰

செல்வமல்கிய செல்வர்பாராய்த்துறைச்
செல்வர்மேற்சிதை யாதன
செல்வன்ஞானசம் பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவை செப்பவே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பராய்த்துறைநாதர்; இறைவி - பொன்மயிலம்மை.



## திருத்தருமபுரம் பதிகம் ௧௩௬

பண் - யாழ்மூரி

திருச்சிற்றம்பலம்

மாதர்ம டப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மக ளுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னை தயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றருமபு ரம்பதியே. ௧

பொங்குந டைப்புகலில் விடை யாமவ ரூர்திவெண்
பொடி யணி தடங் கொண்மார் புபூணநூல் புரள
மங்குலி டைத்தவழும் மதி சூடுவ ராடுவர்
வளங் கிளர் புன லர வம்வைகிய சடையர்
சங்குக டற்றிரையா லுதை யுண்டுசெ ரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந் துசே ரும்வெண்மணற் குவைமேல்
தங்குக திர்ம்மணிநித் தில மெல்லிரு ளொல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழிற் றருமபு ரம்பதியே. ௨

விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ
　டுவர் விரி சுரி யொளி கொடோடுநின் றிலங்கக்
கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்மதிக் கண்ணியர்
　கழிந் தவ ரிழிந் திடும்*முடைதலை கலனுப்
பெண்ணுற நின்றவர்தம் முரு வம்மயன் மாறொழுவ்
　வரி வையைப் பிணைந் திணைந் தணைந்ததும் பிரியார்
தண்ணிதழ் முல்லையொடெண் ணிதழ் மௌவன்ம ருங்கலர்
　கருங் கழிந் நெருங் குறற் றருமபு ரம்பதியே.　　கூ

வாருறு மென்முலைநன் னுத லேழையொ டாடுவர்
　வளங் கிளர் விளங் குதிங் கள்வைகிய சடையர்
காருற நின்றலரும் மலர்க் கொன்றையங் கண்ணியர்
　கடுவ் விடை கொடி வெடி கொள்காடுறை பதியர்
பாருற விண்ணுலகம் பர வப்படு வோரவர்
　படு தலைப் பலி கொளல் பரிபவந் நினையார்
தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்
　தழை பொழின் மழைந் நுழை தருமபு ரம்பதியே.　　ச

நேருமவர்க்குணரப் புகி லில்லைநெ டுஞ்சடைக்
　கடும் புனல் படர்ந் திடம் படுவ்வதொர் நிலையர்
பேருமவர்க்கெனையா யிர முன்னைப்பி றப்பிறப்
　பிலா தவ ருடற் றடர்த் தபெற்றியா ரறிவார்
ஆரமவர்க்கழல்வா யதொர் நாகம ழஃகுறவ்
　வெழுஃ கொழும் மலர் கொள்பொன் னிதழிநல் லலங்கல்
தாரமவர்க்கிமவான் மக ளூர்வது போர்விடை
　கடி படு செடி பொழிற் றருமபு ரம்பதியே.　　ரு

கூழையங்கோதைகுலா யவ டம்பிணை புல்கமல்
　குமென் முலைப் பொறி கொள்பொற் கொடியிடைத் துவர்வாய்
மாழையொண் கண்மடவா ளையொர் பாகம கிழ்ந்தவர்
　வலம் மலி படை விடை கொடிகொடும் மழுவ்வாள்

---

(பா-ம்.) *ரழிந்திடும்.

யாழையும் மெள்கிடவே ழிசை வண்டுமு ரன்றினந்
துவன் றிமென் சிறஃ கறை யுறந்நறவ்வி ரியுந்நல்
தாழையு ஞாழலுந்நீ டிய கானலி னள்ளலி
சைபுள் ளினந் துயில் பயி றருமபு ரம்பதியே. சா

தேமரு வார்குழலன் னந டைப்பெடை மான்விழித்
திருந் திழை பொருந் துமே னிசெங்கதிர் விரியத்
தூமரு செஞ்சடையிற் றுதை வெண்மதி துன்றுகொன்
றைதொல் புனல் சிரங் கரந் துரித்ததோ லுடையர்
காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்
கடல் லடை கழி யிழி யமுண்டகத் தயலே
தாமரை சேர்குவளைப் படு கிற்கழு நீர்மலர்
வெறி கமழ் செறிவ் வயற் றருமபு ரம்பதியே. எ

தூவண நீறகலம் பொலி யவ்விரை புல்கமல்
குமென் மலர் வரை புரை திரள்புயம் மணிவர்
கோவண மும்முழையின் னத ளும்முடை யாடையர்
கொலேம் மலி படை யொர்சூ லமேந்திய குழகர்
பாவண மாவலறத் தலே பத்துடை யவ்வரக்
கனவ் வலி யொர்கவ் வைசெய் தருள்புரி தலேவர்
தாவண வேறுடையெம் மடி கட்கிடம் வன்றடங்
கடல் லிடுந் தடங் கரைத் தருமபு ரம்பதியே. அ

வார்மலி மென்முலேமா தொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யர வம்வைகிய சடையர்
கூர்மலி சூலமும்வெண் மழு வும்மவர் வெல்படை
குனி சிலேதனிம் மலே யதேந்திய குழகர்
ஆர்மலி யாழிகொள்செல் வனு மல்லிகொ டாமரைம்
மிசை யவன் னடிம் முடி யளவுதா மறியார்
தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடந்
தடங் கடல் லிடுந் திரைத் தருமபு ரம்பதியே. கூ

புத்தர்க டத்துவர்மொய்த் துறி புல்கிய கையர்பொய்ம்
மொழிந் தழி வில்பெற் றியுற் றநற்றவர் புலவோர்
பத்தர்க ளத்தவமெய்ப் பய னுகவு கந்தவர்
நிகழ்ந் தவர் சிவந் தவர் சுடலைப்பொடி யணிவர்
முத்தன வெண்ணகையொண் மலை மாதுமை பொன்னணி
புணர்ம் முலை யிணை துணை யணைவதும் பிரியார்
தத்தரு வித்திரளுந் திய மால்சட லோதம்வந்
தடர்ந் திடுந் தடம் பொழிற் றருமபு ரம்பதியே. ௰

பொன்னெடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலி
பொருஉ புன றிருஉ வமர் புகலியென் றுலகில்
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஃ
துசெந் தமிழ்த் தடங் கடற் றருமபுரம் பதியைப்
பின்னெடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை
யவன் பிணை துணை கழல் கள்பேணுத லுரியார்
இன்னொடு நன்னுலகெய் துவ ரெய்திய போகமும்
முறு வர்கள் ளிடர் பிணி துயரணைவ் விலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - யாழ்மூரிநாதர்; இறைவி - மதுரமின்னம்மை.

---

**பதிக வரலாறு:**

திருவேட்டக் குடியை வணங்கிய ஆளுடைய பிள்ளையார் திருத்தரும புரத்தை யடைந்தபோது அது திருநீலகண்டப் பெரும் பாணரது திருத் தாயர் பிறப்பிடமாதலின் அவர் சுற்றத்தார் யாவரும் வந்தெதிர்கொண்டு வணங்கினார்கள். பாணர் பெருமான் சுவாமிகள் பாடியருளுந் திருப்பதி கங்களைத்தாம் யாழிலிட்டு வாசிக்கும் பேற்றினையவர்க்குச் சொல்லினார். அதனைக் கேட்ட அவர்கள் 'நீர் பிள்ளையார் பாடுந் திருப்பதிக இசைகளை யாழிலே இட்டு அளவு பெற வாசித்தலினால் அவற்றின் சிறப்பு உலகத்தில் விளங்குவதாயிற்று' என்று பாராட்டிப் பேசினர். உடனே பாணர் பெரு மான் மனநடுங்கிச் சுவாமிகளது திருவடிகளை வணங்கி, 'இறைவரே, திருப்பதிக இசை அளவுபடாத அரிய தன்மையை இவர்களேயன்றி நில

வுலகிலுள்ள யாவரும் அறிந்து உய்யும் பொருட்டுத் தேவரீர் ஒரு திருப் பதிகம் பாடியருளுவீரெனின், அடியேன் அதனை யாழிலேயிட்டு அதனில் அஃது அடங்கப்பெருமையைக் காட்டப்பெறுவேன்'என்ருர். பிள்ளையார் அப்போது பதிகவிசை மாந்தர்களது கண்டத்தினும், யாழினும், இசை நூலிற் கூறிய இசையினது எல்லாமுயற்சியினும் அடங்காமையைக் காட்டும் பொருட்டு 'மாதர் மடப்பிடி'என்னுமித் திருப்பதிகம் பாடியருளினர். திருநீலகண்டப் பாணனர் அதனை யாழிலே யிட்டு அடங்காமையைக் கண்டு பயந்து பிள்ளையாரை வணங்கி, சுவாமிகளது பாடல்களை யாழிலே ஏற்பேன் என்று சொல்லப் பண்ணியது இவ் யாழன்றேவென்று அதனை யோச்சி யுடைக்கப்புக்கனர். பிள்ளையார் அதனைத்தடுத்து யாழைத் தமது கையிலே வாங்கி, 'ஐயரே, இதனை உடைப்பதேன்? இறைவனும் இறைவியும் அருளிய அருட்டிற மெல்லாம் இந்தக் கருவியிலே அமையுமோ? இயன்றவளவு வாசித்தலே சால்பு' என்று யாழை அவர் கையிலே கொடுத்தருள அவரும் அதனை வாங்கிச் சிரமேற்கொண்டார். இதனல் இப் பதிகம் 'யாழ்மூரி' என்று வழங்கியது.



உ

திருச்சிற்றம்பலம்



## திருஞான சம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

## இரண்டாந் திருமுறை

திருப்பூந்தராய் — பதிகம் க௩௭

### வினாவுரை

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

செந்நெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
பின்னு செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே. க

எற்று தெண்டிரை யேறிய சங்கினொ டிப்பிகள்
பொற்றி கழ்கம லப்பழ னம்புகு பூந்தராய்ச்
சுற்றி நல்லிமை யோர்தொழு பொற்கழ லீர்சொலீர்
பெற்ற மேறுதல் பெற்றிமை யோபெரு மானிரே. உ

சங்கு செம்பவ ளத்திரண் முத்தவை தாங்கொடு
பொங்கு தெண்டிரை வந்தலைக் கும்புனற் பூந்தராய்த்
துங்க மால்களிற் றின்னுரி போர்த்துகந் தீர்சொலீர்
மங்கை பங்கமு மங்கத்தொ டொன்றிய மாண்பதே. ௩

சேம வன்மதில் பொன்னணி மாளிகை சேணுயர்
பூம ணங்கம ழும்பொழில் சூழ்தரு பூந்தராய்ச்
சோம னும்மர வுந்தொடர் செஞ்சடை யீர்சொலீர்
காமன் வெண்பொடி யாகக் கடைக்கண் சிவந்ததே. ச

பள்ள மீனிரை தேர்ந்துழ லும்பகு வாயன
புள்ளு நாடொறுஞ் சேர்பொழில் சூழ்தரு பூந்தராய்த்
துள்ளு மான்மறி யேந்திய செங்கையி னீர்சொலீர்
வெள்ள நீரொரு செஞ்சடை வைத்த வியப்பதே. ரு

மாதி லங்கிய மங்கைய ராடம ருங்கெலாம்
போதி லங்கம லம்மது வார்புனற் பூந்தராய்ச்
சோதி யஞ்சுடர் மேனிவெண் ணீறணி வீர்சொலீர்
காதி லங்குழை சங்கவெண் டோடுடன் வைத்ததே. சு

* * * * * * . எ

வருக்க மார்தரு வான்கடு வன்னொடு மந்திகள்
தருக்கொள் சோலை தருங்கனி மாந்திய பூந்தராய்த்
துரக்கு மால்விடை மேல்வரு வீரடி கேள்சொலீர்
அரக்க னுற்ற லழித்தரு ளாக்கிய வாக்கமே. அ

வரிகொள் செங்கயல் பாய்புனல் சூழ்ந்த மருங்கெலாம்
புரிசை நீடுயர் மாடதி லாவிய பூந்தராய்ச்
சுருதி பாடிய பாணிய றாமொழி யீர்சொலீர்
கரிய மாலய னேடியு மைக்கண்டி லாமையே. கூ

வண்ட லங்கழ னிம்மடை வாளைகள் பாய்புனற்
புண்ட ரீகம லர்ந்தும துத்தரு பூந்தராய்த்
தொண்டர் வந்தடி போற்றிசெய் தொல்கழ லீர்சொலீர்
குண்டர் சாக்கியர் கூறிய தாங்குறி யின்மையே. ω

மகர வார்கடல் வந்தணை வும்மணற் கானல்வாய்ப்
புகலி ஞானசம் பந்தனெ ழின்மிகு பூந்தராய்ப்
பகவ னைப் பரவுசொன் மாலைபத் தும்வல்லார்
அகல்வர் தீவினை நல்வினை யோடுட னவரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சீகாழிக்கொருபெயர்.

## திருவலஞ்சுழி பதிகம் ௧௩௮

விஞவுரை

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

விண்டெ லாமல ரவ்விரை நாறுதண் டேன்விம்மி
வண்டெ லாநசை யாலிசை பாடும் வலஞ்சுழித்
தொண்டெ லாம்பர வுஞ்சுடர் போலொளி யீர்சொலீர்
பண்டெ லாம்பலி தேர்ந்தொலி பாடல் பயின்றதே. ௧

பாரல் வெண்குரு கும்பகு வாயன நாரையும்
வாரல் வெண்டிரை வாயிரை தேரும் வலஞ்சுழி
மூரல் வெண்முறு வன்னகு மொய்யொளி யீர்சொலீர்
ஊரல் வெண்டலை கொண்டுல கொக்கவு ழன்றதே. ௨

கிண்ண வண்ணமல ருங்கிளர் தாமரைத் தாதளாய்
வண்ண நுண்மணன் மேலனம் வைகும் வலஞ்சுழிச்
சுண்ண வெண்பொடிக் கொண்டுமெய் பூசவ லீர்சொலீர்
விண்ண வர்தொழ வெண்டலை யிற்பலி கொண்டதே. ௩

கோடெ லாநிறை யக்குவ ளைம்மல ருங்குழி
மாடெ லாமலி நீர்மண நாறும் வலஞ்சுழிச்
சேடெ லாமுடை யீர்சிறு மான்மறி யீர்சொலீர்
நாடெ லாமறி யத்தலை யின்னற வேற்றதே. ௪

கொல்லை வென்றபுனத் திற்குரு மாமணி கொண்டுபோய்
வல்லை நுண்மணன் மேலனம் வைகும் வலஞ்சுழி
முல்லை வெண்முறு வன்னகை யாளொளி யீர்சொலீர்
சில்லை வெண்டலை யிற்பலி கொண்டுழல் செல்வமே. ௫

பூச நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்
வாச நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழித்
தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீர்
ஏச வெண்டலை யிற்பலி கொள்வதி லாமையே. ௬

கந்த மாமலர்ச் சந்தொடு காரகி லுந்தழீஇ
வந்த நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழி
அந்த நீர்முத னீர்நடு வாமடி கேள்சொலீர்
பந்த நீர்கரு தாதுல கிற்பலி கொள்வதே. எ

தேனுற் றநறு மாமலர்ச் சோலையில் வண்டினம்
வானுற் றநசை யாழிசை பாடும் வலஞ்சுழிக்
கானுற் றகளிற் றின்னுரி போர்க்கவல் லீர்சொலீர்
ஊனுற் றதலை கொண்டுல கொக்கவு ழன்றதே. அ

தீர்த்த நீர்வந் திழிபுனற் பொன்னியிற் பன்மலர்
வார்த்த நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழி
ஆர்த்து வந்த வரக்கனை யன்றடர்த் தீர்சொலீர்
சீர்த்த வெண்டலை யிற்பலி கொள்வதுஞ் சீர்மையே. கூ

உரம னுஞ்சடை யீர்விடை யீரும தின்னருள்
வரம னும்பெற லாவது மெந்தை வலஞ்சுழிப்
பிரம னுந்திரு மாலு மளப்பரி யீர்சொலீர்
சிரமெ னுங்கல னிற்பலி வேண்டிய செல்வமே. ய

வீடு ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் னவது மெந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கபர்த்தீசர்; இறைவி - பெரியநாயகி.



## திருத்தெளிச்சேரி  பதிகம் கருசு

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

பூவ லர்ந்தன கொண்டுமுப் போதும்பொற் கழல்
தேவர் வந்து வணங்கு மிகுதெளிச் சேரியீர்
மேவருந் தொழி லாளொடு கேழற்பின் வேடனும்
பாவகங் கொடு நின்றது போலுநும் பான்மையே. க

விளக்கும் பத்திக்கு விண்ணவர் மண்ணவ ரேத்தவே
திளைக்குந் தீர்த்த மறுத திகழ்தெளிச் சேரியீர்
வளைக்குந் திண்சிலை மேலைந்து பாணமுந் தானெய்து
களிக்குங் காமனை யெங்ஙன நீர்கண்ணிற் காய்ந்ததே. உ

வம்ப டுத்த மலர்ப்பொழில் சூழ மதிதவழ்
செம்ப டுத்த செழும்புரி சைத்தெளிச் சேரியீர்
கொம்ப டுத்ததொர் கோல விடைமிசைக் கூர்மையோ
டம்ப டுத்தகண் ணாளொடு மேவ லழகிதே. ந

காரு லாங்கட லிப்பிகண் முத்தங் கரைப்பெயும்
தேரு லாநெடு வீதிய தார்தெளிச் சேரியீர்
ஏரு லாம்பலிக் கேகிட வைப்பிட மின்றியே
வாரு லாமுலை யாளையொர் பாகத்து வைத்ததே. ச

பக்க நுந்தமைப் பார்ப்பதி யேத்திமுன் பாவிக்கும்
செக்கர் மாமதி சேர்மதிள் சூழ்தெளிச் சேரியீர்
மைக்கொள் கண்ணியர் கைவளை மால்செய்து வெளவவே
நக்க ராயுல கெங்கும் பலிக்கு நடப்பதே. ரு

தவள வெண்பிறை தோய்தரு தாழ்பொழில் சூழநல்
திவள மாமணி மாடந் திகழ்தெளிச் சேரியீர்
குவளை போற்கண்ணி துண்ணென வந்து குறுகிய
கவள மால்கரி யெங்ஙன நீர்கையிற் காய்ந்ததே. சா

கோட டுத்தபொ ழிலின்மி சைக்குயில் கூவிடும்
சேட டுத்த தொழிலின் மிகுதெளிச் சேரியீர்
மாட டுத்த மலர்க்கண்ணி னாள்கங்கை நங்கையைத்
தோட டுத்த மலர்ச்சடை யென்கொலோநீர் சூடிற்றே. ௭

கொத்தி ரைத்த மலர்க்குழ லாள்குயில் கோலஞ்சேர்
சித்திரக் கொடி மாளிகை சூழ்தெளிச் சேரியீர்
வித்தகப் படை வல்லவ ரக்கன் விறற்றலை
பத்தி ரட்டிக் கரநெரித் திட்டதும் பாதமே. ௮

காலெ டுத்த திரைக்கை கரைக்கெறி கானல்சூழ்
சேல டுத்த வயற்பழ னத்தெளிச் சேரியீர்
மால டித்தல மாமல ரான்முடி தேடியே
ஓல மிட்டிட வெங்ஙன மோருருக் கொண்டதே. ௯

மந்தி ரந்தரு மாமறை யோர்கட வத்தவர்
செந்தி லங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்
வெந்த லாகிய சாக்கிய ரோடுச மணர்கள்
தந்தி றத்தன நீக்குவித் தீரோர் சதிரரே. ௰

திக்கு லாம்பொழில் சூழ்தெளிச் சேரியெஞ் செல்வனை
மிக்க காழியுண் ஞானசம் பந்தன் விளம்பிய
தக்க பாடல்கள் பத்தும்வல் லார்க டடமுடித்
தொக்க வானவர் சூழ விருப்பவர் சொல்லிலே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பார்வதீச்சுவரர்; இறைவி - சத்தியம்மை.



## திருவான்மியூர்                                    பதிகம் ௧௬௰

### வி னு வு ரை

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கரையு லாங்கட லிற்பொலி சங்கம்வெள் ளிப்பிவன்
திரையு லாங்கழி மீனுக ளுந்திரு வான்மியூர்
உரையு லாம்பொரு ளாயுல காளுடை யீர்சொலீர்
வரையு லாமட மாதுட னாகிய மாண்பதே. ௧

சந்து யர்ந்தெழு காரகி றண்புனல் கொண்டுதம்
சிந்தை செய்தடி யார்பர வுந்திரு வான்மியூர்ச்
சுந்தரக் கழன் மேற்சிலம் பார்க்கவல் லீர்சொலீர்
அந்தி யின்னொளி யின்னிற மாக்கிய வண்ணமே. ௨

கான யங்கிய தண்கழி சூழ்கட லின்புறம்
தேன யங்கிய பைம்பொழில் சூழ்திரு வான்மியூர்த்
தோன யங்கம ராடையி னீரடி கேள்சொலீர்
ஆனையங் கவ்வுரி போர்த்தன லாட வுகந்ததே. ௩

மஞ்சு லாவிய மாடம திற்பொலி மாளிகைச்
செஞ்சொ லாளர்க டாம்பயி லுந்திரு வான்மியூர்த்
துஞ்சு வஞ்சிரு ளாடலு கக்கவல் லீர்சொலீர்
வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்னருள் வைத்ததே. ௪

மண்ணி னிற்புகழ் பெற்றவர் மங்கையர் தாம்பயில்
திண்ணெ னப்புரி சைத்தொழி லார்திரு வான்மியூர்த்
துண்ணெ னத்திரி யுஞ்சரி தைத்தொழி லீர்சொலீர்
விண்ணி னிற்பிறை செஞ்சடை வைத்த வியப்பதே. ௫

போது லாவிய தண்பொழில் சூழ்புரி சைப்புறம்
தீதி லந்தண ரோத்தொழி யாத்திரு வான்மியூர்ச்
சூது லாவிய கொங்கையொர் பங்குடை யீர்சொலீர்
மூதெ யில்லொரு மூன்றெரி யூட்டிய மொய்ம்பதே. ௬

வண்டி ரைத்த தடம்பொழி லின்னிழற் கானல்வாய்த்
தெண்டி ரைக்கட லோதமல் குந்திரு வான்மியூர்த்
தொண்டி ரைத்தெழுந் தேத்திய தொல்கழ லீர்சொலீர்
பண்டி ருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே. எ

தக்கில் வந்த தசக்கிரி வன்றலை பத்திறத்
திக்கில் வந்தல றவ்வடர்த் தீர்திரு வான்மியூர்த்
தொக்க மாதொடும் வீற்றிருந் தீரரு ளென்சொலீர்
பக்க மேபல பாரிடம் பேய்கள் பயின்றதே. அ

பொருது வார்கட லெண்டிசை யுந்தரு வாரியால்
திரித ரும்புகழ் செல்வமல் குந்திரு வான்மியூர்ச்
சுருதியாரிரு வர்க்கு மறிவரி யீர்சொலீர்
எருது மேல்கொ டுழன்றுகந் தில்பலி யேற்றதே. கூ

மைத ழைத்தெழு சோலையின் மாலைசேர் வண்டினம்
செய்த வத்தொழி லாரிசை சேர்திரு வான்மியூர்
மெய்த வப்பொடி பூசிய மேனியி னீர்சொலீர்
கைதவச் சமண் சாக்கியர் கட்டுரைக் கின்றதே. ௰

மாதொர் கூறுடை நற்றவ னைத்திரு வான்மியூர்
ஆதி யெம்பெரு மானருள் செய்த வினவுரை
ஓதி யன்றெழு காழியுண் ஞானசம் பந்தன்சொல்
நீதி யானினை வார்நெடு வானுல காள்வரே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - பால்வண்ணநாதர்; இறைவி - சுந்தரநாயகி.



## திருவனேகதங்காவதம் பதிகம் கசக

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீடன் மேவுதிமிர் புன்சடை மேலோர் நிலாமுளை
சூடன் மேவுமறை யின்முறை யாலோர் சுலாவழல்
ஆடன் மேவுமவர் மேயவ னேகதங் காவதம்
பாடன் மேவுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. க

சூல முண்டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்
ஆல முண்டபெரு மான்ற னனேகதங் காவதம்
நீல முண்டதடங் கண்ணுமை பாக நிலாயதோர்
கோல முண்டள வில்லை குலாவிய கொள்கையே. உ

செம்பி னாருமதின் மூன்றெரி யச்சின வாயதோர்
அம்பி னாலெய்தருள் வில்லி யனேகதங் காவதம்
கொம்பி னேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை
நம்ப னாமநவி லாதன நாவென லாகுமே. ங

தந்தத் திந்தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்தகதி ரோனொடு மாசறு திங்களார்
அந்த மில்லவளை வில்ல வனேகதங் காவதம்
எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே. ச

பிறையு மாசில்கதி ரோனறி யாமைப் பெயர்ந்துபோய்
உறையுங் கோயில் பசும்பொன் னணியா ரசும்பார்புனல்
அறையு மோசை பறைபோலு மனேகதங் காவதம்
இறையெம் மீச னெம்மா னிடமாக வுகந்ததே. ரு

தேனை யேறுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்
ஆனை யேறுமணி சார லனேகதங் காவதம்
வானை யேறுநெறி சென்றுண ருந்தனை வல்லிரேல்
ஆனை யேறுமுடி யானருள் செய்வதும் வானையே. சா

வெருவி வேழமிரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்
குருவி வீழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்
அருவி பாயுமணி சாரல னேகதங் காவதம்
மருவி வாழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. எ

ஈர மேதுமில னாகி யெழுந்த விராவணன்
வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்
ஆரம் பாம்ப தணிவான்ற னனேகதங் காவதம்
வாரமாகிநினை வார்வினை யாயின மாயுமே. அ

கண்ணன் வண்ணமல ரானொடுங் கூடியோர்க் கையமாய்
எண்ணும் வண்ணமறி யாமையெ ழுந்ததோ ராரழல்
அண்ண னண்ணுமணி சாரல னேகதங் காவதம்
நண்ணும் வண்ணமுடை யார்வினை யாயின நாசமே. கூ

மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்
ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கடாம்
ஆப தம்மறி வீருளி ராகில னேகதங்
காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல் கருமமே. ம

தொல்லை யூழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை
நல்ல கேள்வித்தமிழ் ஞானசம் பந்தனல் லார்கண்முன்
அல்ல றீரவுரை செய்தவ னேகதங் காவதம்
சொல்ல நல்லவடை யும்மடை யாசுடு துன்பமே. கக

திருச்சிற்றம்பலம்

இது வடநாட்டிலுள்ளது.

இறைவன் - அனேகதங்காவதநாதர்; இறைவி - மனோன்மணி.



## திருவையாறு பதிகம் கசஉ

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கோடல் கோங்கங் குளிர் கூவிளமாலை குலாயசீர்
ஓடு கங்கை யொளிவெண் பிறைசூடு மொருவனார்
பாடல் வீணை முழவங்குழன் மொந்தைபண் ணாகவே
ஆடுமா றுவல் லானுமை யாறுடை யையனே. க

தன்மை யாரு மறிவாரில்லை தாம்பிற ரெள்கவே
பின்னு முன்னுஞ்சில பேய்க்க ணஞ்சூழத் திரிதர்வர்
துன்ன வாடை யுடுப்பர் சுடலைப்பொடிப் பூசுவர்
அன்ன மாலுந்துறை யானுமை யாறுடை யையனே. உ

கூறு பெண்ணுடை கோவண முண்பதும் வெண்டலை
மாறி லாருங்கொள் வாரில்லை மார்பி லணிகலம்
ஏறு மேறித்திரி வரிமை யோர்தொழு தேத்தவே
ஆறு நான்குஞ்சொன் னானுமை யாறுடை யையனே. ௩

பண்ணி னல்லமொழி யார்பவ ளத்துவர் வாயினார்
எண்ணி னல்லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினார்
வண்ணம் பாடிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகந் தானுமை யாறுடை யையனே. ச

வேன லானை வெருவவுரி போர்த்துமை யஞ்சவே
வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனார்
தேனெய் பாறயிர் தெங்கிள நீர்கரும் பின்றெளி
ஆனஞ் சாடுமுடி யானுமை யாறுடை யையனே. ரு

எங்கு மாகிநின் றானு மியல்பறி யப்படா
மங்கை பாகங்கொண் டானு மதிசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமாய்
அங்க மாறுஞ்சொன் னானுமை யாறுடை யையனே. சா

ஓதி யாருமறி வாரில்லை யோதி யுலகெலாம்
சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுட் சோதியான்
வேதி யாகிவிண் ணாகிமண் ணோடெரி காற்றுமாய்
ஆதி யாகிநின் றானுமை யாறுடை யையனே. எ

குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்
விரவி நீறணி வார்சில தொண்டர் வியப்பவே
பரவி நாடொறும் பாடநம் பாவம் பறைதலால்
அரவ மார்த்துகந் தானுமை யாறுடை யையனே. அ

உரைசெய் தொல்வழி செய்தறி யாவிலங் கைக்குமன்
வரைசெய் தோளடர்த் தும்மதி சூடிய மைந்தனார்
கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்
அரைசெய் மேகலை யானுமை யாறுடை யையனே. கூ

மாலுஞ் சோதி மலரானு மறிகிலா வாய்மையான்
காலங் காம்பு வயிரங் கடிகையன் பொற்கழல்
கோல மாய்க்கொழுந் தீன்று பவளந் திரண்டதோர்
ஆல நீழலு ளானுமை யாறுடை யையனே. ய

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையான்
மெய்யைப் போர்த்துழல் வாரு முரைப்பன மெய்யல
மைகொள் கண்டெத்தெண் டோண்முக்க ணான்கழல் வாழ்த்தவே
ஐயந் தேர்ந்தளிப் பானுமை யாறுடை யையனே. கக

பலிதி ரிந்துழல் பண்டங்கன் மேயவை யாற்றினைக்
கலிக டந்தகை யான்கடற் காழியர் காவலன்
ஒலிகொள் சம்பந்த னொண்டமிழ் பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. கஉ

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

சமண்டீர்த்துச் சைவம் வளர்த்த பிள்ளையார் திருவையாற்றை யடைந்து சிவபெருமானை வணங்கும்போது திருவம்பலத்தாடுந் திருக்

கூத்தின்றன்மை யவருள்ளத்திற் றோன்றிய பெற்றிமையால் 'கோடல் கோங்கம்' என்று எடுத்த பதிகத்தின் முதற்றிருப்பாட்டில் 'ஆடுமாறு வல் லானுமை யாறுடை யண்ணலே' என்று அத்திருக்கூத்தைக் கூறிக் கண்களி னீர்பொழிந் திழியுமாறு பேரானந்தங்கொண்டு கூத்தாடி யருளினார்.



## திருவாஞ்சியம் — பதிகம் கசங

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வன்னி கொன்றை மதமத்த மெருக்கொடு கூவிளம்
பொன்னி யன்றசடை யிற்பொலி வித்தபு ராணனார்
தென்னவென் றுவரி வண்டிசை செய்திரு வாஞ்சியம்
என்னை யாளுடை யானிட மாகவு கந்ததே. க

காலகா லர்கரி கானிடை மாநட மாடுவர்
மேலர்வே லைவிட முண்டிருள் கின்றமி டற்றினர்
மாலைகோ லமதி மாடமன் னுந்திரு வாஞ்சியம்
ஞாலம்வந் துபணி யப்பொலி கோயின யந்ததே. உ

மேவிலொன் றர்விரி வுற்றவி ரண்டினர் மூன்றுமாய்
நாவினா லருட லஞ்சின ராறரே ழோசையர்
தேவிலெட் டர்திரு வாஞ்சிய மேவிய செல்வனார்
பாவந்தீர்ப் பர்பழி போக்குவர் தம்மடி யார்கட்கே. ங

சூலமேந் திவளர் கையினர் மெய்சுவண் டாகவே
சாலநல் லபொடிப் பூசுவர் பேசுவர் மாமறை
சீலமே வுபுக ழாற்பெரு குந்திரு வாஞ்சியம்
ஆலமுண் டவடி கள்ளிட மாகவ மர்ந்ததே. ச

கையிலங் குமறி யேந்துவர் காந்தளம் மெல்விரல்
தையல்பா கமுடை யாரடை யார்புரஞ் செற்றவர்
செய்யமே னிக்கரி யம்மிடற் றார்திரு வாஞ்சியத்
தையர்பா தமடை வார்க்கடை யாவரு நோய்களே. ரு

அரவம்பூண் பரணி யுஞ்சிலம் பார்க்கவ கந்தொறும்
இரவினல் லபலி பேணுவர் நாணிலர் நாமமே
பரவு வார்வினை தீர்க்கநின் றார்திரு வாஞ்சியம்
மருவியேத் தமட மாதொடு நின்றவெம் மைந்தரே. ௬

விண்ணிலா னபிறை சூடுவர் தாழ்ந்துவி ளங்கவே
கண்ணி னாலநங் கன்னுட லம்பொடி யாக்கினார்
பண்ணிலா னவிசை பாடன்மல் குந்திரு வாஞ்சியத்
தண்ணலார் தம்மடி போற்றவல் லார்க்கில்லை யல்லலே. ௭

மாடநீ டுகொடி மன்னிய தென்னிலங் கைக்குமன்
வாடியூ டவரை யாலடர்த் தன்றருள் செய்தவர்
வேடவே டர்திரு வாஞ்சிய மேவிய வேந்தரைப்
பாடநீ டுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. ௮

செடிகொணோ யின்னடை யார்திறம் பார்செறு தீவினை
கடியகூற் றமுங் கண்டக லும்புக ழுன்வரும்
நெடியமா லொடய னேத்தநின் றார்திரு வாஞ்சியத்
தடிகள்பா தம்மடைந் தாரடி யாரடி யார்கட்கே. ௯

பிண்டமுண் டுதிரி வார்பிரி யுந்துவ ராடையார்
மிண்டர்மிண் டும்மொழி மெய்யல பொய்யிலை யெம்மிறை
வண்டுகெண் டிமரு வும்பொழில் சூழ்திரு வாஞ்சியத்
தண்டவா ணனடி கைதொழு வார்க்கில்லை யல்லலே. ௰

தென்றறுன் றும்பொழில் சென்றணை யுந்திரு வாஞ்சியத்
தென்றுநின் றவிறை யானையு ணர்ந்தடி யேத்தலால்
நன்றுகா ழிமறை ஞானசம் பந்தன செந்தமிழ்
ஒன்றுமுள் ளமுடை யாரடை வாருயர் வானமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வாஞ்சியநாதர்; இறைவி - வாழவந்தநாயகி.



## திருச்சிக்கல் பதிகம் கசரு

### பண் - இந்தளம்

*திருச்சிற்றம்பலம்*

வானுலா வும்மதி வந்துலா வும்மதின் மாளிகை
தேனுலா வும்மலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல்வே ளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞானமா கந்நினை வார்வினை யாயின நையுமே. க

மடங்கொள்வா ளைகுதி கொள்ளும ணமலர்ப் பொய்கைசூழ்
திடங்கொண் மாமறை யோரவர் மல்கிய சிக்கலுள்
விடங்கொள்கண் டத்துவெண் ணெய்ப்பெரு மானடி மேவியே
அடைந்துவா ழும்மடி யாரவ ரல்லல றுப்பரே. உ

நீலநெய் தன்னில விம்மல ருஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வள மல்கிய சிக்கலுள்
வேலவொண் கண்ணியி னாளையோர் பாகன்வெண் ணெய்ப்பிரான்
பாலவண் ணன்கழ லேத்தநம் பாவம்ப றையுமே. ௩

கந்தமுந் தக்கைதை பூத்துக்க மழ்ந்துசே ரும்பொழிற்
செந்துவண் டின்னிசை பாடன்மல் குந்திகழ் சிக்கலுள்
வெந்தவெண் ணீற்றண்ணல் வெண்ணெய்ப் பிரான்விரை யார்கழல்
சிந்தைசெய் வார்வினை யாயின தேய்வது திண்ணமே. ச

மங்குறங் கும்மறை யோர்கண்மா டத்தய லேமிகு
தெங்குதுங் கப்பொழிற் செல்வமல் குந்திகழ் சிக்கலுள்
வெங்கண்வெள் ளேறுடை வெண்ணெய்ப்பி ரானடி மேவவே
தங்குமேன் மைசர தந்திரு நாளுந்த கையுமே. ரு

வண்டிரைத் தும்மது விம்மிய மாமலர்ப் பொய்கைசூழ்
தெண்டிரைக் கொள்புனல் வந்தொழு கும்வயற் சிக்கலுள்
விண்டிரைத் தம்மல ராற்றிகழ் வெண்ணெய்ப்பெ ருமானடி
கண்டிரைத் தும்மன மேமதி யாய்கதி யாகவே. சா

முன்னுமா டம்மதின் மூன்றுட னேயெரி யாய்விழத்
துன்னுவார் வெங்கணை யொன்றுசெ லுத்திய சோதியான்
செந்நெலா ரும்வயற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி
உன்னிநீ டம்மன மேநினை யாய்வினை யோயவே. எ

தெற்ற லாகிய தென்னிலங் கைக்கிறை வன்மலை
பற்றி னான்முடி பத்தொடு தோள்கநெ ரியவே
செற்ற தேவனஞ் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி
உற்று நீநினை யாய்வினை யாயின வோயவே. அ

மாலி னோடரு மாமறை வல்லமு னிவனும்
கோலி னார்குறு கச்சிவன் சேவடி கோலியும்
சீலந் தாமறி யார்திகழ் சிக்கல்வெண் ணெய்ப்பிரான்
பாலும் பன்மலர் தூவப்ப றையுநம் பாவமே. கூ

பட்டை நற்றுவ ராடையி னாரொடும் பாங்கிலாக்
கட்ட மண்கழுக் கள்சொல்லி னைக்கரு தாதுநீர்
சிட்டன் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மான்செழு மாமறைப்
பட்டன் சேவடி யேபணி மின்பிணி போகவே. ம

கந்த மார்பொழிற் காழியுண் ஞானசம் பந்தனல்
செந்தண் பூம்பொழிற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடிச்
சந்த மாச்சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை
வெந்த நீறணி யும்பெரு மானடி மேவரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வெண்ணெய்ப்பிரான்; இறைவி - வேனெடுங்கண்ணி.



## திருமழபாடி பதிகம் ௧௨௫

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

களையும் வல்வினை யஞ்சனெஞ் சேகரு தார்புரம்
உளையும் பூசல்செய் தானுயர் மால்வரை நல்விலா
வளைய வெஞ்சரம் வாங்கியெய் தான்மதுத் தும்பிவண்
டளையுங் கொன்றையந் தார்மழ பாடியு ளண்ணலே. ௧

காச்சி லாதபொன் னோக்குங்க னவயி ரத்திரள்
ஆச்சி லாதப ளிங்கின னஞ்சமு றுடினன்
பேச்சி னாலுமக் காவதென் பேதைகாள் பேணுமின்
வாச்ச மாளிகை சூழ்மழ பாடியை வாழ்த்துமே. ௨

உரங்கெ டுப்பவ னும்பர்க ளாயவர் தங்களைப்
பரங்கெ டுப்பவ னஞ்சையுண் டுபக லோன்றனை
முரண்கெ டுப்பவன் முப்புரந் தீயெழச் செற்றுமுன்
வரங்கொ டுப்பவன் மாமழ பாடியுள் வள்ளலே. ௩

பள்ள மார்சடை யிற்புடை யேயடை யப்புனல்
வெள்ள மாதரித் தான்விடை யேறிய வேதியன்
வள்ளன் மாமழ பாடியுண் மேயம ருந்தினை
உள்ள மாதரி மின்வினை யாயின வோயவே. ௪

தேனு லாமலர் கொண்டுமெய்த் தேவர்கள் சித்தர்கள்
பானெ யஞ்சுட னாட்டமுன் னாடிய பால்வணன்
வான நாடர்கள் கைதொழு மாமழ பாடியெம்
கோனை நாடொறுங் கும்பிட வேகுறி கூடுமே. ௫

தெரிந்த வன்புர மூன்றுடன் மாட்டிய சேவகன்
பரிந்து கைதொழு வாரவர் தம்மனம் பாவினன்
வரிந்த வெஞ்சிலை யொன்றுடை யான்மழ பாடியைப்
புரிந்து கைதொழு மின்வினை யாயின போகுமே. ௬

சந்த வார்குழ லாளுமை தன்னொரு கூறுடை
எந்தை யானிமை யாதமுக் கண்ணின னெம்பிரான்
மைந்தன் வார்பொழில் சூழ்மழ பாடிம ருந்தினைச்
சிந்தி யாவெழு வார்வினை யாயின தேயுமே. ௭

இரக்க மொன்றுமி லானிறை யான்றிரு மாமலை
உரக்கை யாலெடுத் தான்றன தோண்முடி பத்திற
விரற்ற லைந்நிறு வியுமை யாளொடு மேயவன்
வரத்தை யேகொடுக் கும்மழ பாடியுள் வள்ளலே. ௮

ஆல முண்டமு தம்மம ரர்க்கரு ளண்ணலார்
கால னாருயிர் வீட்டிய மாமணி கண்டனார்
சால நல்லடி யார்தவத் தார்களுஞ் சார்விடம்
மால யன்வணங் கும்மழ பாடியெம் மைந்தனே. ௯

கலியின் வல்லம ணுங்கருஞ் சாக்கியப் பேய்களும்
நலியு நாள்கெடுத் தாண்டவென் னாதனார் வாழ்பதி
பலியும் பாட்டொடு பண்முழ வும்பல வோசையும்
மலியு மாமழ பாடியை வாழ்த்திவ ணங்குமே. ௰

மலியு மாளிகை சூழ்மழ பாடியுள் வள்ளலைக்
கலிசெய் மாமதில் சூழ்கடற் காழிக்க வுணியன்
* * * * * *
* * * * * * . ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வச்சிரத்தம்பநாதர்; இறைவி - அழகம்மை.



## திருமங்கலக்குடி பதிகம் கசகூ

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சீரி னார்மணி யும்மகில் சந்துஞ்செ றிவரை
வாரி நீர்வரு பொன்னிவ டமங்க லக்குடி
நீரின் மாமுனி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டியர்ச் சிக்கவி ருந்தபு ராணனே. க

பணங்கொ ளாடர வல்குனல் லார்பயின் றேத்தவே
மணங்கொண் மாமயி லாலும்பொ ழின்மங்க லக்குடி
இணங்கி லாமறை யோரிமை யோர்தொழு தேத்திட
அணங்கி னொடிருந் தானடி யேசர ணாகுமே. உ

கருங்கை யானையி னீருரி போர்த்திடு கள்வனார்
மருங்கெ லாமண மார்பொழில் சூழ்மங்க லக்குடி
அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி யன்பொடு
விரும்பி யேத்தவல் லார்வினை யாயின வீடுமே. ங

பறையி னோடொலி பாடலு மாடலும் பாரிடம்
மறையி னொடியன் மல்கிடு வார்மங்க லக்குடிக்
குறைவி லாநிறை வேகுண மில்குண மேயென்று
முறையி னால்வணங் கும்மவர் முன்னெறி காண்பரே. ச

ஆனில ங்கிளை ரைந்தும விர்முடி யாடியோர்
மானி லங்கையி னன்மண மார்மங்க லக்குடி
ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே
ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே. ரு

தேனு மாயமு தாகிநின் றான்றெளி சிந்தையுள்
வானு மாய்மதி சூடவல் லான்மங்க லக்குடி
கோனை நாடொறு மேத்திக்கு ணங்கொடு கூறுவார்
ஊன மானவை போயறு முய்யும்வ கையதே. சா

வேள்படுத்திடு கண்ணினன் மேருவில் லாகவே
வாள ரக்கர்பு ரமெரித் தான்மங்க லக்குடி
ஆளு மாதிப்பி ரானடி கள்ளடைந் தேத்தவே
கோளு நாளவை போயறுங் குற்றமில் லார்களே. ௭

பொலியு மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட
வலியும் வாளொடு நாள்கொடுத் தான்மங்க லக்குடிப்
புலியி னாடையி னானடி யேத்திடும் புண்ணியர்
மலியும் வானுல கம்புக வல்லவர் காண்மினே. ௮

ஞால முன்படைத் தானளிர் மாமலர் மேலயன்
மாலுங் காணவொ ணாவெரி யான்மங்க லக்குடி
ஏல வார்குழ லாளொரு பாகமி டங்கொடு
கோல மாகிநின் றான்குணங் கூறுங் குணமதே. ௯

மெய்யின் மாசினர் மேனிவி ரிதுவ ராடையர்
பொய்யை விட்டிடும் புண்ணியர் சேர்மங்க லக்குடிச்
செய்ய மேனிச்செ ழும்புனற் கங்கைசெ றிசடை
ஐயன் சேவடி யேத்தவல் லார்க்கழ காகுமே. ௰

மந்த மாம்பொழில் சூழ்மங்க லக்குடி மன்னிய
எந்தை யையெழி லார்பொழிற் காழியர் காவலன்
சிந்தை செய்தடி சேர்த்திடு ஞானசம் பந்தன்சொல்
முந்தி யேத்தவல் லாரிமை யோர்முத லாவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - புராணவரதேச்சுவரர்; இறைவி - மங்களநாயகி.



சீகாழி பதிகம் கஎஎ

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்
வல்லானை வல்லவர் பான்மலிந் தோங்கிய
சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்
இல்லானை யேத்தநின் றார்க்குள தின்பமே. க

நம்மான மாற்றிந மக்கரு ளாய்நின்ற
பெம்மானைப் பேயுட னாடல்பு ரிந்தானை
அம்மானை யந்தணர் சேருமணி காழி
எம்மானை யேத்தவல் லார்க்கிட ரில்லையே. உ

அருந்தானை யன்புசெய் தேத்தகில் லார்பாற்
பொருந்தானைப் பொய்யடி மைத்தொழில் செய்வாருள்
விருந்தானை வேதிய ரோதிமி டைகாழி
இருந்தானை யேத்துமி னும்வினை யேகவே. ங

புற்றானைப் புற்றர வம்மரை யின்மிசைச்
சுற்றானைத் தொண்டுசெய் வாரவர் தம்மொடும்
அற்றானை யந்தணர் காழிய மர்கோயில்
பற்றானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. ச

நெதியானை நெஞ்சிடங் கொள்ளநி னைவார்தம்
விதியானை விண்ணவர் தாம்வியந் தேத்திய
கதியானைக் காருல வும்பொழிற் காழியாம்
பதியானைப் பாடுமி னும்வினை பாறவே. ரு

செப்பான மென்முலை யாளைத்தி கழ்மேனி
வைப்பானை வார்கழ லேத்திநி னைவார்தம்
ஒப்பானை யோதமு லாவுக டற்காழி
மெய்ப்பானை மேவிய மாந்தர்வி யந்தாரே. சு

துன்பானைத் துன்பமழித் தருளாக்கிய
இன்பானை யேழிசை யின்னிலை பேணுவார்
அன்பானை யணிபொழிற் காழிந கர்மேய
நம்பானை நண்ணவல் லார்வினை நாசமே. எ

குன்றானைக் குன்றெடுத் தான்புய நாலைந்தும்
வென்றானை மென்மல ரானொடு மாலோட
நின்றானை நேரிழை யாளொடுங் காழியுள்
நன்றானை நம்பெரு மானைந ணுகுமே. அ

சாவாயும் வாதுசெய் சாவகர் சாக்கியர்
மேவாத சொல்லவை கேட்டுவெ குளேன்மின்
பூவாய கொன்றையி னானைப்பு னற்காழிக்
கோவாய கொள்கையி னானடி கூறுமே. கூ

* * * * * * . ம

கழியார்சீ ரோதமல் குங்கடற் காழியுள்
ஒழியாது கோயில்கொண் டானையு கந்துள்கித்
தழியார்சொன் ஞானசம் பந்தன்ற மிழார
மொழிவார்கண் மூவுல கும்பெறு வார்களே. கக

திருச்சிற்றம்பலம்



## திருக்கச்சியேகம்பம் பதிகம் கசஅ

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதெனது உள்ளமே. க

நொச்சியே வன்னிகொன் றைமதி கூவிளம்
உச்சியே புனைதல்வே டம்விடை யூர்தியான்
கச்சியே கம்பமே யகறைக் கண்டனை
நச்சியே தொழுமினும் மேல்வினை நையுமே. ௨

பாராரு முழவமொந் தைகுழ லியாழொலி
சீராலே பாடலா டல்சிதை வில்லதோர்
ஏரார்பூங் கச்சியே கம்பனை யெம்மானைச்
சேராதா ரின்பமா யந்நெறி சேராரே. ௩

குன்றேய்க்கு நெடுவெண்மா டக்கொடி கூடிப்போய்
மின்றேய்க்கு முகில்கடோ யும்வியன் கச்சியுள்
மன்றேய்க்கு மல்குசீ ரான்மலி யேகம்பம்
சென்றேய்க்குஞ் சிந்தையார் மேல்வினை சேராவே. ௪

சடையானைத் தலைகையேந் திப்பலி தருவார்தம்
கடையேபோய் மூன்றுங்கொண் டான்கலிக் கச்சியுள்
புடையேபொன் மலருங்கம் பைக்கரை யேகம்பம்
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. ௫

மழுவாளோ டெழில்கொள்சூ லப்படை வல்லார்தம்
கெழுவாளோ ரிமையாருச் சியுமை யாள்கங்கை
வழுவாமே மல்குசீ ரால்வள ரேகம்பம்
தொழுவாரே விழுமியார் மேல்வினை துன்னுவே. ௬

விண்ணுளார் மறைகள்வே தம்விரித் தோதுவார்
கண்ணுளார் கழலின்வெல் வார்கரி காலனை
நண்ணுவா ரெழில்கொள்கச் சிநக ரேகம்பத்
தண்ணலா ராடுகின் றவலங் காரமே. ௭

தூயானைத் தூயவா யம்மறை யோதிய
வாயானை வாளரக் கன்வலி வாட்டிய
தீயானைத் தீதில்கச் சித்திரு வேகம்பம்
மேயானை மேவுவா ரென்றலை மேலாரே. ௮

நாகம்பூ ணேறதே றனறுங் கொன்றைதார்
பாகம்பெண் பலியுமேற் பர்மறை பாடுவர்
ஏகம்ப மேவியா டிறை யிருவர்க்கும்
மாகம்ப மறியும்வண் ணத்தவ னல்லனே. ௯

போதியார் பிண்டியா ரென்றிவர் பொய்ந்நூலை
வாதியா வம்மினம் மாவெனுங் கச்சியுள்
ஆதியார் மேவியா டுந்திரு வேகம்பம்
நீதியாற் றொழுமினும் மேல்வினை நில்லாவே. ௰

அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்
கந்தண்பூங் காழியூ ரன்கலிக் கோவையால்
சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்
பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கோழம்பம் பதிகம் ௧௪௯

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீற்றானை நீள்சடை மேனிறை வுள்ளதோர்
ஆற்றானை யழகமர் மென்முலை யாளையோர்
கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்ப மேவிய
ஏற்றானை யேத்துமி னும்மிட ரேகவே. ௧

மையான கண்டனை மான்மறி யேந்திய
கையானைக் கடிபொழிற் கோழம்ப மேவிய
செய்யானைத் தேனெய்பா லுந்திகழ்ந் தாடிய
மெய்யானை மேவுவார் மேல்வினை மேவாவே. ௨

ஏதனை யேதமி லாவிமை யோர்தொழும்
வேதனை வெண்குழை தோடுவி ளங்கிய
காதனைக் கடிபொழிற் கோழம்ப மேவிய
நாதனை யேத்துமி னும்வினை நையவே. ௩

சடையானைத் தண்மல ரான்சிர மேந்திய
விடையானை வேதமும் வேள்வியு மாயநன்
குடையானைக் குளிர்பொழில் சூழ்திருக் கோழம்பம்
உடையானை யுள்குமி னுள்ளங்கு ளிரவே. ௪

காரானைக் கடிகமழ் கொன்றையம் போதணி
தாரானைத் தையலொர் பான்மகிழ்ந் தோங்கிய
சீரானைச் செறிபொழிற் கோழம்ப மேவிய
ஊரானை யேத்துமி னும்மிட ரொல்கவே. ௫

பண்டாலின் னீழலா னைப்பரஞ் சோதியை
விண்டார்க டம்புர மூன்றுட னேவேவக்
கண்டானைக் கடிகமழ் கோழம்பங் கோயிலாக்
கொண்டானைக் கூறுமி னுள்ளங்கு ளிரவே. ௬

சொல்லானைச் சுடுகணை யாற்புர மூன்றெய்த
வில்லானை வேதமும் வேள்வியு மானானைக்
கொல்லானை யுரியானைக் கோழம்ப மேவிய
நல்லானை யேத்துமி னும்மிடர் நையவே. ௭

விற்றானை வல்லரக் கர்விறல் வேந்தனைக்
குற்றானைத் திருவிர லாற்கொடுங் காலனைச்
செற்றானைச் சீர்திக ழுந்திருக் கோழம்பம்
பற்றானைப் பற்றுவார் மேல்வினை பற்றாவே. ௮

நெடியானோ டயனறி யாவகை நின்றதோர்
படியானைப் பண்டங்க வேடம்ப யின்றானைக்
கடியாருங் கோழம்ப மேவிய வெள்ளேற்றின்
கொடியானைக் கூறுமி னுள்ளங்கு ளிரவே. ௯

புத்தருந் தோகையம் பீலிகொள் பொய்ம்மொழிப்
பித்தரும் பேசுவ பேச்சல்ல பீடுடைக்
கொத்தலர் தண்பொழிற் கோழம்ப மேவிய
அத்தனை யேத்துமி னல்லல றுக்கவே. ௰

தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்
நண்புடை ஞானசம் பந்தனம் பானுறை
விண்பொழிற் கோழம்ப மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கோகிலேச்சுவரர்; இறைவி - சௌந்தரநாயகி.



## திருவெண்ணியூர் — பதிகம் ௧௱௰

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சடையானைச் சந்திர னோடுசெங் கண்ணரா
உடையானை யுடைதலை யிற்பலி கொண்டுழும்
விடையானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியை
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. ௧

சோதியைச் சுண்ணவெண் ணீறணிந் திட்டவெம்
ஆதியை யாதியு மந்தமு மில்லாத
வேதியை வேதியர் தாந்தொழும் வெண்ணியில்
நீதியை நினையவல் லார்வினை நில்லாவே. ௨

கனிதனைக் கனிந்தவ ரைக்கலந் தாட்கொள்ளும்
முனிதனை மூவுல குக்கொரு மூர்த்தியை
நனிதனை நல்லவர் தாந்தொழும் வெண்ணியில்
இனிதனை யேத்துவ ரேதமி லாதாரே. ௩

மூத்தானை மூவுல குக்கொரு மூர்த்தியாய்க்
காத்தானைக் கனிந்தவ ரைக்கலந் தாளாக
ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மான்றன்னை
ஏத்தாதா ரென்செய்வா ரேழையப் பேய்களே. ச

நீரானை நிறைபுனல் சூழ்தரு நீள்கொன்றைத்
தாரானைத் தையலொர் பாகமு டையானைச்
சீரானைத் திகழ்தரு வெண்ணிய மர்ந்துறை
ஊரானை யுள்கவல் லார்வினை யோயுமே. ரு

முத்தினை முழுவயி ரத்திரண் மாணிக்கத்
தொத்தினைத் துளக்கமி லாதவி ளக்காய
வித்தினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அத்தனை யடையவல் லார்க்கில்லை யல்லலே. சா

காய்ந்தானைக் காமனை யுஞ்செறு காலனைப்
பாய்ந்தானைப் பரியகை மாவுரித் தோன்மெய்யில்
மேய்ந்தானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
நீந்தானை நினையவல் லார்வினை நில்லாவே. எ

மறுத்தானை மாமலை யைமதி யாதோடிச்
செறுத்தானைத் தேசழி யத்திகழ் தோண்முடி
இறுத்தானை யெழிலமர் வெண்ணியெம் மானெனப்
பொறுத்தானைப் போற்றுவா ராற்றலு டையாரே. அ

மண்ணினை வானவ ரோடும னிதர்க்கும்
கண்ணினைக் கண்ணனு நான்முக னுங்காணா
விண்ணினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அண்ணலை யடையவல் லார்க்கில்லை யல்லலே. கூ

குண்டருங் குணமிலா தசமண் சாக்கிய
மிண்டர்கண் மிண்டவை கேட்டுவெ குளேன்மின்
விண்டவர் தம்புர மெய்தவன் வெண்ணியில்
தொண்டரா யேத்தவல் லார்துயர் தோன்றாவே. ம

மருவாரு மல்குகா ழித்திகழ் சம்பந்தன்
திருவாருந் திகழ்தரு வெண்ணிய மர்ந்தானை
உருவாரு மொண்டமிழ் மாலையி வைவல்லார்
பொருவாகப் புக்கிருப் பார்புவ லோகத்தே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - வெண்ணிநாதர்; இறைவி - அழகியநாயகி.



## திருக்காறாயில் பதிகம் கருக

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீரானே நீள்சடை மேலொர்நி றைகொண்டதுறைத்
தாரானே தாமரை மேலயன் றான்றொழும்
சீரானே சீர்திக ழுந்திருக் காறாயில்
ஊரானே யென்பவ ரூனமி லாதாரே. க

மதியானே வரியர வோடுடன் மத்தஞ்சேர்
விதியானே விதியுடை வேதியர் தாந்தொழும்
நெதியானே நீர்வயல் சூழ்திருக் காறாயிற்
பதியானே யென்பவர் பாவமி லாதாரே. ௨

விண்ணுளானே விண்ணவ ரேத்திவி ரும்புஞ்சீர்
மண்ணுளானே மண்ணிடை வாழுமு யிர்க்கெல்லாம்
கண்ணுளானே கடிபொழில் சூழ்திருக் காறாயில்
எண்ணுளானே யென்பவ ரேதமி லாதாரே. ௩

தாயானே தந்தையு மாகிய தன்மைகள்
ஆயானே யாயநல் லன்பர்க்க ணியானே
சேயானே சீர்திக ழுந்திருக் காறாயில்
மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே. ௪

கலையானே கலைமலி செம்பொற் கயிலாய
மலையானே மலைபவர் மும்மதின் மாய்வித்த
சிலையானே சீர்திக ழுந்திருக் காறாயில்
நிலையானே யென்பவர் மேல்வினை நில்லாவே. ௫

ஆற்றானே யாறணி செஞ்சடை யாடர
வேற்றானே யேழுல கும்மிமை யோர்களும்
போற்றானே பொழிறிக ழுந்திருக் காறாயில்
நீற்றானே யென்பவர் மேல்வினை நில்லாவே. ௬

சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்கள்
ஏத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்
காத்தானே கார்வயல் சூழ்திருக் காறாயில்
ஆர்த்தானே யென்பவர் மேல்வினை யடராவே. ௭

கடுத்தானே காலனைக் காலாற் கயிலாயம்
எடுத்தானை யேதமா கம்முனி வர்க்கிடர்
கெடுத்தானே கேழ்கிள ருந்திருக் காறாயில்
அடுத்தானே யென்பவர் மேல்வினை யடராவே. ௮

பிறையானே பேணிய பாடலொ டின்னிசை
மறையானே மாலொடு நான்முகன் காணாத
இறையானே யெழிறிக ழுந்திருக் காறாயில்
உறைவானே யென்பவர் மேல்வினை யோடுமே. ௯

செடியாரும் புன்சமண் சீவரத் தார்களும்
படியாரும் பாவிகள் பேச்சுப் பயனில்லை
கடியாரும் பூம்பொழில் சூழ்திருக் காறாயில்
குடியாருங் கொள்கையி னார்க்கில்லை குற்றமே. ௰

ஏய்ந்தசீ ரெழிறிக ழூந்திருக் காறுயில்
ஆய்ந்தசீ ரானடி யேத்திய ருள்பெற்ற
பாய்ந்தநீர்க் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
வாய்ந்தவா றேத்துவார் வானுல காள்வாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கண்ணாயிரநாதர்; இறைவி - கயிலாயநாயகி.



## திருமணஞ்சேரி பதிகம் கரு௨

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

அயிலாரு மம்பத னாற்புர மூன்றெய்து
குயிலாரு மென்மொழி யாளொரு கூறாகி
மயிலாரு மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. க

விதியானை விண்ணவர் தாந்தொழு தேத்திய
நெதியானை நீள்சடை மேனிகழ் வித்தவான்
மதியானை வண்பொழில் சூழ்ந்த மணஞ்சேரிப்
பதியானைப் பாடவல் லார்வினை பாறுமே. உ

எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலா யெனையு மாள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. ந

விடையானை மேலுல கேழுமிப் பாரெல்லாம்
உடையானை யூழிதோ றூழி யுளதாய
படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி
அடைவானை யடையவல் லார்க்கில்லை யல்லலே. ச

எறியார்பூங் கொன்றையி னோடு மிளமத்தம்
வெறியாருஞ் செஞ்சடை யாரமி லைத்தானை
மறியாருங் கையுடை யானை மணஞ்சேரிச்
செறிவானைச் செப்பவல் லார்க்கிடர் சேராவே. ரு

மொழியானை முன்னொரு நான்மறை யாறங்கம்
பழியாமைப்* பண்ணிசை யான பகர்வானை
வழியானை வானவ ரேத்து மணஞ்சேரி
இழியாமை யேத்தவல் லார்க்கெய்து மின்பமே. சு

எண்ணானை யெண்ணமர் சீரிமை யோர்கட்குக்
கண்ணானைக் கண்ணொரு மூன்றுடை யானை
மண்ணானை மாவயல் சூழ்ந்த மணஞ்சேரிப்
பெண்ணானைப் பேசநின் றார்பெரி யோர்களே. எ

எடுத்தானை யெழின்முடி யெட்டு மிரண்டுந்தோள்
கெடுத்தானைக் கேடிலாச் செம்மை யுடையானை
மடுத்தார வண்டிசை பாடு மணஞ்சேரி
பிடித்தாரப் பேணவல் லார்பெரி யோர்களே. அ

சொல்லானைத் தோற்றங்கண் டானு நெடுமாலுங்
கல்லானைக் கற்றன சொல்லித் தொழுதோங்க
வல்லார்நன் மாதவ ரேத்து மணஞ்சேரி
எல்லாமா மெம்பெரு மான்கழ லேத்துமே. கூ

சற்றேயுந் தாமறி வில்சமண் சாக்கியர்
சொற்றேயும் வண்ணமொர் செம்மை யுடையானை
வற்றாத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி
பற்றாக வாழ்பவர் மேல்வினை பற்றாவே. ய

(பா - ம்.) *பழியானைப்.

கண்ணாருங் காழியர் கோன்கருத் தார்வித்த
தண்ணார்சீர் ஞானசம் பந்தன் றமிழ்மாலை
மண்ணாரு மாவயல் சூழ்ந்த மணஞ்சேரி
பண்ணாரப் பாடவல் லார்க்கில்லை பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மணவாளநாயகர்; இறைவி - யாழ்மொழியம்மை.



## திருவேணுபுரம் பதிகம் ௧௩௩

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நிலவும் புனலுந் நிறைவா ளரவும்
இலகுஞ் சடையார்க் கிடமா மெழிலார்
உலவும் வயலுக் கொளியார் முத்தம்
விலகுங் கடலார் வேணு புரமே. ௧

அரவார் கரவன் னமையார் திரடோட்
குரவார் குழலா ளொருகூ றனிடங்
கரவா தகொடைக் கலந்தா ரவர்க்கு
விரவா கவல்லார் வேணு புரமே. ௨

ஆகம் மழகா யவடான் வெருவ
நாகம் முரிபோர்த் தவனண் ணுமிடம்
போகந் தருசீர் வயல்சூழ் பொழில்கண்
மேகந் தவழும் வேணு புரமே. ௩

காசக் கடலில் விடமுண் டகண்டத்
தீசர்க் கிடமா வதுவின் னறவ
வாசக் கமலத் தனம்வன் றிரைகள்
வீசத் துயிலும் வேணு புரமே. ௪

அரையார் கலைசே ரனமென் னடையை
உரையா லுகந்தா னுறையும் மிடமாம்
திரையார் கமுகின் னிகழ்பா ளையுடை
விரையார் பொழில்சூழ் வேணு புரமே. ரு

ஒளிரும் பிறையும் முறுகூ விளவின்
றளிருஞ் சடைமே லுடையா னிடமாம்
நளிரும் புனலின் னலசெங் கயல்கண்
மிளிரும் வயல்சூழ் வேணு புரமே. சு

* * * * . எ

ஏவும் படைவேந் தனிரா வணனை
ஆவென் றலற வடர்த்தா னிடமாந்
தாவும் மறிமா னொடுதண் மதியம்
மேவும் பொழில்சூழ் வேணு புரமே. அ

கண்ணன் கடிமா மலரிற் றிகழும்
அண்ணல் லிருவ ரறியா விறையூர்
வண்ணச் சுதைமா ளிகைமேற் கொடிகள்
விண்ணிற் றிகழும் வேணு புரமே. கூ

போகம் மறியார் துவர்போர்த் துழல்வார்
ஆகம் மறியா வடியா ரிறையூர்
மூகம் மறிவார் கலைமுத் தமிழ்நூன்
மீகம் மறிவார் வேணு புரமே. ௰

கலமார் கடல்போல் வளமார் தருநற்
புலமார் தருவே ணுபுரத் திறையை
நலமார் தருஞா னசம்பந் தன்சொன்ன
குலமார் தமிழ்கூ றுவர்கூர் மையரே. கக

திருச்சிற்றம்பலம்



## திருமருகல் பதிகம் ௧௩௪

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ விவளுண் மெலிவே. ௧

சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமான் முதல்வா வெனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ விவளே சறவே. ௨

அறையார் கழலும் மழல்வா யரவும்
பிறையார் சடையும் முடையாய் பெரிய
மறையார் மருகன் மகிழ்வா யிவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே. ௩

ஒலிநீர் சடையிற் கரந்தா யுலகம்
பலிநீ திரிவாய் பழியில் புகழாய்
மலிநீர் மருகன் மகிழ்வா யிவளை
மெலிநீர் மையளாக் கவும்வேண் டினையே. ௪

துணிநீ லவண்ணம் முகிறோன் றியன்ன
மணிநீ லகண்டம் முடையாய் மருகல்
கணிநீ லவண்டார் குழலா ளிவடன்
அணிநீ லவொண்கண் ணயர்வாக் கினையே. ௫

பலரும் பரவப் படுவாய் சடைமேல்
மலரும் பிறையொன் றுடையாய் மருகல்
புலரும் தனையுந் துயிலாள் புடைபோந்
தலரும் படுமோ வடியா ளிவளே. ௬





வணிகனுக்கு விடந்தீர்த்தது

ஆட லரவசைத்த வாமாத்தூ ரம்மானைக்
கோட விரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்
நாட லரியசீர் ஞானசம் பந்தன்றன்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - அழகியநாதர்; இறைவி - அழகியநாயகி.



## திருக்கைச்சினம் பதிகம் கஅக

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

தையலோர் கூறுடையான் றண்மதிசேர் செஞ்சடையான்
மையுலா மணிமிடற்றான் மறைவிளங்கு பாடலான்
நெய்யுலா மூவிலைவே லேந்தி நிவந்தொளிசேர்
கையுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. க

விடமல்கு கண்டத்தான் வெள்வளையோர் கூறுடையான்
படமல்கு பாம்பரையான் பற்றார் புரமெரித்தான்
நடமல்கு மாடலினா னான்மறையோர் பாடலினான்
கடமல்கு மாவுரியா னுறைகோயில் கைச்சினமே. உ

பாடலார் நான்மறையான் பைங்கொன்றை பாம்பினொடும்
சூடலான் வெண்மதியந் துன்று கரந்தையொடும்
ஆடலா னங்கை யனலேந்தி யாடரவக்
காடலான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௩

பண்டமரர் கூடிக் கடைந்த படுகடனஞ்
சுண்டபிரா னென்றிறைஞ்சி யும்பர் தொழுதேத்த
விண்டவர்க டொன்னகர மூன்றுடனே வெந்தவியக்
கண்டபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௪

தேய்ந்துமலி வெண்பிறையான் செய்யதிரு மேனியினான்
வாய்ந்திலங்கு வெண்ணீற்றான் மாதினையோர் கூறுடையான்
சாய்ந்தமரர் வேண்டத் தடங்கடனஞ் சுண்டகங்கைக்
காய்ந்தபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௫

மங்கையோர் கூறுடையான் மன்னு மறைபயின்றான்
அங்கையோர் வெண்டலையா னாடரவம் பூண்டுகந்தான்
திங்களொடு பாம்பணிந்த சீரார் திருமுடிமேல்
கங்கையினான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௬

வரியரவே நாணாக மால்வரையே வில்லாக
எரிகணையான் முப்புரங்க ளெய்துகந்த வெம்பெருமான்
பொரிசுடலை யீமப் புறங்காட்டான் போர்த்ததோர்
கரியுரியான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௭

போதுலவு கொன்றை புனைந்தான் றிருமுடிமேல்
மாதுமையா ளஞ்ச மலையெடுத்த வாளரக்கன்
நீதியினா லேத்த நிகழ்வித்து நின்றாடும்
காதலினான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௮

மண்ணினைமுன் சென்றிரந்த மாலு மலரயனும்
எண்ணரியா வண்ண மெரியுருவ மாயபிரான்
பண்ணிசையா லேத்தப் படுவான்றன் னெற்றியின்மேல்
கண்ணுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. ௯

* * * * * ௰

தண்வயல்சூழ் காழித் தமிழ்ஞான சம்பந்தன்
கண்ணுதலான் மேவியுறை கோயில் கைச்சினத்தைப்
பண்ணிசையா லேத்திப் பயின்ற விவைவல்லார்
விண்ணவரா யோங்கி வியனுலக மாள்வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கைச்சினநாதர்; இறைவி - வெள்வளையம்மை.

௨௮௰

## திருநாலூர்மயானம் பதிகம் கஅ௨

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

பாலூரு மலைப்பாம்பும் பனிமதியு மத்தமும்
மேலூருஞ் செஞ்சடையான் வெண்ணூல்சேர் மார்பினன்
நாலூர் மயானத்து நம்பான்ற னடிநினைந்து
மாலூருஞ் சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே. க

சூடும் பிறைச்சென்னிச் சூழ்கா டிடமாக
ஆடும் பறைசங் கொலியோ டழகாக
நாடுஞ் சிறப்போவா நாலூர் மயானத்தைப்
பாடுஞ் சிறப்போர்பாற் பற்றாவாம் பாவமே. ௨

கல்லா னிழன்மேவிக் காமுறுசீர் நால்வர்க்கன்
றெல்லா வறனுரையு மின்னருளாற் சொல்லினான்
நல்லார் தொழுதேத்து நாலூர் மயானத்தைச்
சொல்லா தவரெல்லாஞ் செல்லாதார் தொன்னெறிக்கே. ௩

கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோ லாடையான்
நீலத்தார் கண்டத்தா னெற்றியோர் கண்ணினான்
ஞாலத்தார் சென்றேத்து நாலூர் மயானத்திற்
சூலத்தா னென்பார்பாற் சூழாவாந் தொல்வினையே. ௪

கறையார் மணிமிடற்றான் காபாலி கட்டங்கன்
பிறையார் வளர்சடையான் பெண்பாக னண்பாய
நறையார் பொழில்புடைசூழ் நாலூர் மயானத்தெம்
இறையானென் றேத்துவார்க் கெய்துமா மின்பமே. ௫

கண்ணார் நுதலான் கனலா டிடமாகப்
பண்ணார் மறைபாடி யாடும் பரஞ்சோதி
நண்ணார் புரமெய்தா னாலூர் மயானத்தை
நண்ணா தவரெல்லா நண்ணாதார் நன்னெறியே. ௬

கண்பாவு வேகத்தாற் காமனைமுன் காய்ந்துகந்தான்
பெண்பாவு பாகத்தா னாகத்தோ லாகத்தான்
நண்பாவு குணத்தோர்க ணாலூர் மயானத்தை
எண்பாவு சிந்தையார்க் கேலா விடர்தானே. எ

பத்துத் தலையோனைப் பாதத் தொருவிரலால்
வைத்து மலையடர்த்து வாளோடு நாள்கொடுத்தான்
நத்தி னொலியோவா நாலூர் மயானத்தென்
அத்த னடிநினைவார்க் கல்ல லடையாவே. அ

மாலோடு நான்முகனு நேட வளரெரியாய்
மேலோடு கீழ்காணா மேன்மையான் வேதங்கள்
நாலோடு மாறங்க நாலூர் மயானத்தெம்
பாலோடு நெய்யாடி பாதம் பணிவோமே. கூ

துன்பாய மாசார் துவராய போர்வையார்
புன்பேச்சுக் கேளாதே புண்ணியனை நண்ணுமின்கள்
நண்பாற் சிவாயவெனா நாலூர் மயானத்தே
இன்பா யிருந்தானை யேத்துவார்க் கின்பமே. ய

ஞாலம் புகழ்காழி ஞானசம் பந்தன்றன்
நாலு மறையோது நாலூர் மயானத்தைச்
சீலம் புகழாற் சிறந்தேத்த வல்லாருக்
கேலும் புகழ்வானத் தின்பா யிருப்பாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பலாசவனநாதர்; இறைவி - பெரியநாயகி.



## திருமயிலாப்பூர் பதிகம் ௧௮௩

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய். ௧

மைப்பயந்த வொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய். ௨

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்றொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய். ௩

ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய். ௪

மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
நெய்ப்பூசு மொண்புழுக்க னேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய். ௫

மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலானே றூரு மடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய். ௬

மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்திரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய். எ

தண்ணா வரக்கன்றோள் சாய்த்துகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கடம் மட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய். அ

நற்றா மரைமலர்மே லான்முகனு நாரணனும்
உற்றாங்* குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய். கூ

உரிஞ்சாய வாழ்க்கை யமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரமமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய். ௰

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - கபாலீச்சுவரர்; இறைவி - கற்பகவல்லி.

---

**பதிக வரலாறு:**

திருமயிலாப்பூரிலே வணிகர் குலத்திலே சிவநேசர் என்பவர் புறச் சமயங்கள் ஒழிந்து சைவந் தழைபு மனமுடையராய்ச் சிவபத்தி யடியார் பத்திகளிற் சிறந்து மிக்க செல்வராய் ஒருவ ரிருந்தனர். அவர்

(பா - ம்.) *முற்றாங்.



ப. 384 எலும்பு பெண்ணுருவாயது

ஆளுடைய பிள்ளையாரது அருட்பெருஞ் செயல்களைக் கேட்டு அவர் பாற் பேரன்புடையராய்த் தாமும், பூமகளை யொத்த பூம்பாவை யென்னும் பெண்ணும், எல்லையில்லாத தமது செல்வமும் எல்லாம் ஆளுடைய பிள்ளையார் திருவடிக்குப் பாங்காவவெனப் பலரறியச் சொன்னார். இவ்வாறு நாட்கள் செல்லா நிற்ப, ஓர் நாள் பூம்பாவை பூங்காவில் மலர் பறிக்கும்போது பாம்புகடித் தவ் விடம் எதனானும் தீராது இறக்க, சிவநேசர் 'இவளை முன்னமே ஞானசம்பந்தருக் கெனக் கொடுத்ததனால் இவளைத் தகனம் செய்து இவளது என்பையும் சாம்பரையும் அவரெய்தும் வரையில் சேமித்து வைப்பேன்' என்று உன்னி யவ்வாறே செய்தவற்றைக் குடத்திலே யிட்டுக் கன்னிமாடத்தில் வைத்துத் தீபம் தூபம் மலர் முதலியவற்றால் உபசரித்து வந்தார். வரும்போது சிரபுரச் செம்மலார் தொண்டைநாட்டை யடைந்து பல தலங்களையும் தரிசித்துத் திருவொற்றியூரிலே எழுந்தருளி யிருத்தலைக் கேட்ட சிவநேசர் பேரன்பு கொண்டு தம்மூரினின்றும் திருவொற்றியூர் வரையும் நடைக்காவணம், பாவாடை முதலிய இட்டுச் சிவனடியார்களோடும் சுவாமிகளை எதிர் கொண்டார். சுவாமிகளும் திருக்கூட்டத்தினருடன் வரச் சிவநேசர் நிலமுறப் பணிந்து வணங்கிப் பேரானந்தங் கொண்டார். பிள்ளையார் அவரைப் பாராட்டி யவர் செய்தியெல்லாம் அடியார்பாற் றெரிந்து திருமயிலாப்பூருக்கு எழுந்தருளித் திருக்கபாலீச்சரத்து இறைவனை வணங்கி விண்ணப்பித்து வெளிவந்து சிவநேசரால் அவரது மகளது என்புக் குடத்தைத் திருக்கோயிற் றிருமதிற் புறத்திலே திருக்குளக் கரையிற் சுவாமியினது திருமுன்னர்க் கொணர்வித்து அக்குடத்தைத் திருவருணோக்கஞ் செய்து 'பூம்பாவாய்' என விளித்து, 'மண்ணுலகத்திற் பிறந்தவர் பெறும்பேறு சிவனடியார்களாகிய மாகேச்சுவரர்களை அமுது செய்வித்தலும் சிவாகம விதிப்படி செய்யப் பெறுகின்ற சிவபெருமான் திருவிழாச் சிறப்பினைக் கண்டு தொழுதலுமாகிய இவ்விரண்டுமேயாம் என்பது உண்மையாயின் இப்போது நீ இங்கு உயிர்பெற் றெழுந்திருக்கக் கடவாய்' என்னும் திருவுள்ளக்கிடையோடு 'மட்டிட்ட புன்னை' என்னும் திருப்பதிகம் பாடினர். அத் திருப்பதிகத்தின் திருப்பாட்டின் அடைவே பூம்பாவை முதற் பாட்டில் வடிவு பெற்றும், அடுத்த எட்டுப் பாட்டில் பன்னிரண் டாண்டளவெய்தியும், தெளிந்த பொருணிச்சயமில்லாத சமணரும் சாக்கியரும் இச் செய்கை ஏற்றதன்று என்று சொல்வார்கள் என்னுங் கருத்துடைய பத்தாவது பாட்டாகிய சமண் பாட்டினைச் சொன்ன மாத்திரத்தில் வளையலணிந்த சிவந்த கை வெளியே தோன்றும்படித் தாமரைக் கோயிலினின்றெழும் இலக்குமியைப் போலக்

குடமுடைந்து வெளியே வந்தாள். மண்ணும் விண்ணும் பாராட்டிப் போற்றி வியந்தன. சிவனடியார் செய்த அரவொலி கடலினும் மிக் கொலித்தது. பூம்பாவை தமது பிதாவுடன் பிள்ளையாரை வணங்கினாள். சிவநேசர், சுவாமிகள் அவளை மணம் புணருமாறு வேண்ட அவர் தாம் அவளை யெழுப்பிப் பிதாப்போன்றலால் உரை தகாதென மறுத்தார். பூம்பாவை கன்னி மாடத்திருந்து பிள்ளையார் திருவடியை உன்னிவைகிச் சிவத்தை யடைந்தாள். ஞானசம்பந்தர் சிலநாள் அங்கிருந்து திருவான்மி யூருக் கெழுந்தருளினார்.



## திருவெண்காடு

பதிகம் கஅ௪

### பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே. க

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. உ

மண்ணொடுநீ ரனல்காலோ டாகாய மதியிரவி
எண்ணில்வரு மியமான னிகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. ங

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் றண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. ௪

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் றிருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்றூதர்
ஆலமிடற் றானடியா ரென்றடர வஞ்சுவரே. ௫

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தா னுறைகோயில்
பண்மொழியா லவனாமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே. ௬

சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கு
முக்குளநன் குடையானு முக்கணுடை யிறைவனே. ௭

பண்மொய்த்த வின்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்த னுரநெரித்தன் றருள்செய்தா னுறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடன்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. ௮

கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா னெனவிவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்து முணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண் காட்டானென்
றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே. ௯

போதியர்கள் பிண்டியர்கண் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்பிரிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. ௰

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சுவேதாரணியேச்சுவரர்; இறைவி - பிரமவித்தியாநாயகி.

---

**பதிக வரலாறு:**

முத்தமிழ் விரகர் திருத்தொண்டர் எதிர்கொள்ளத் திருவெண்காட்டையடைந்து தூலலிங்கமாகிய கோபுரத்தை வணங்கி யுள்புக்கு வலம் வந்து திருவெண்காட்டீசரது முன்னின்று 'கண்காட்டு நுதலானும்' என்னு மிப்பதிகத்தை யெடுத்து அதில் மூழ்கினவரை இறைவனது திருவடியைச் சேரச்செய்யும் முக்குளத்தைச் சிறப்பித்துப் பாடி யுளமகிழ்ந்தார். இத்திருப்பதிகத்தின் இரண்டாவதாகிய 'பேயடையாபிரிவெய்தும்' என்னுந் திருப்பாட்டுத்தானே திருப்பெண்ணாகடத்தில் உறையும் புத்திரப்பேற்றை விரும்பிய அச்சுதகளப்பாளர் தமது குலகுருவாகிய அருணந்தி சிவாசாரியாரது ஆணையின்படி திருமுறையிற் கயிறு சாத்தியபோது உதயமாய், அத் திருவுள்ளக் கிடையின்படி அவர் திருவெண்காட்டையடைந்து இறைவனை வணங்கி முக்குளத்தில் தமது மனைவியாரோடு விதிப்படி மூழ்கித் திருக்கைலாயப் புறச்சந்தானத்து முதற்பெருங் குரவராகிய மெய்கண்ட தேவநாயனாரை தமது மகவாகப் பெற்றருளினர்.



சீகாழி

பதிகம் ௧அரு

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

பண்ணி னேர்மொழி மங்கை மார்பலர்
பாடி யாடிய வோசை நாடொறுங்
கண்ணி னேரயலே பொலியுங் கடற்காழிப்
பெண்ணி னேரொரு பங்கு டைப்பெரு
மானை யெம்பெரு மானென் றென்றுன்னும்
அண்ண லாரடியா ரருளாலுங் குறைவிலரே. ௧

மொண்ட லம்பிய வார்தி ரைக்கடன்
மோதி மீதெறி சங்கம் வங்கமுங்
கண்டலம் புடைசூழ் வயல்சேர் கலிக்காழி
வண்ட லம்பிய கொன்றை யானடி
வாழ்த்தி யேத்திய மாந்தர் தம்வினை
விண்ட லங்கெளி தா மதுநல் விதியாமே. ௨

நாடெ லாமொளி யெய்த நல்லவர்
நன்று மேத்தி வணங்கு வார்பொழிற்
காடெ லாமலர் தேன்றுளிக்குங் கடற்காழித்
தோடு லாவிய காது ளாய்சுரி
சங்க வெண்குழை யாயென் றென்றுன்னும்
வேடங் கொண்டவர்கள் வினை நீங்கலுற்றாரே. ௩

மையி னார்பொழில் சூழ நீழலில்
வாச மார்மது மல்க நாடொறுங்
கையி னார்மலர் கொண்டெழுவார் கலிக்காழி
ஐய னேயர னேயென் றுதரித்
தோதி நீதியு ளேநி னைப்பவர்
உய்யு மாறுலகில் லுயர்ந்தாரி னுள்ளாரே. ௪

மலிக டுந்திரை மேனி மிர்ந்தெதிர்
வந்து வந்தொளிர் நித்தி லம்விழக்
கலிக டிந்தகையார் மருவுங் கலிக்காழி
வலிய காலனை வீட்டி மாணித
னின்னு யிரளித் தானை வாழ்த்திட
மெலியுந் தீவினைநோ யவைமேவுவர் வீடே. ௫

மற்று மிவ்வுல கத்து ளோர்களும்
வானு ளோர்களும் வந்து வைகலுங்
கற்ற சிந்தையராய்க் கருதுங் கலிக்காழி
நெற்றி மேலமர் கண்ணி னானை
நினைந்தி ருந்திசை பாடு வார்வினை
செற்றமாந் தரெனத் தெளிமின்கள் சிந்தையுளே. ௬

தான லம்புரை வேதிய ரொடு
தக்க மாதவர் தாங்தொ ழுப்பயில்
கானலின் விரைசேர விம்மும் கலிக்காழி
ஊனு ளாருயிர் வாழ்க்கை யாயுற
வாகி நின்றவொ ருவனே யென்றென்
றுனலங் கொடுய்ப்பா ரருள்வேந்த ராவாரே. எ

மைத்த வண்டெழு சோலை யாலைகள்
சாலி சேர்வய லார வைகலுங்
கத்து வார்கடல் சென்றுலவுங் கலிக்காழி
அத்த னேயர னேய ரக்கனை
யன்ற டர்த்துகந் தாயு னகழல்
பத்தராய்ப் பரவும் பயனீங்கு நல்காயே. அ

பருமா ராமொடு தெங்கு பைங்கத
லிப்ப ருங்கனி யுண்ண மந்திகள்
கருவரா லுகளும் வயல்சூழ் கலிக்காழித்
திருவி னாயக னாய மாலொடு
செய்ய மாமலர்ச் செல்வ னாகிய
இருவர் காண்பரியா னெனவேத்துத லின்பமே. கூ

பிண்ட முண்டுழல் வார்க ளும்பிரி
யாது வண்டுகி லாடை போர்த்தவர்
கண்டு சேரகிலா ரழகார் கலிக்காழித்
தொண்டை வாயுமை யோடு கூடிய
வேட னேசுட லைப்பொ டியணி
அண்டவா ணனென்பார்க் கடையா வல்லலுறுனே. ௰

பெயரெ னும்மிவை பன்னி ரண்டினு
முண்டெ னப்பெயர் பெற்ற வூர்திகழ்
கயலுலாம் வயல்சூழ்ந் தழகார் கலிக்காழி
நயன டன்கழ லேத்தி வாழ்த்திய
ஞான சம்பந்தன் செந்த மிழுரை
உயருமா மொழிவா ருலகத் துயர்ந்தாரே. கக

திருச்சிற்றம்பலம்

௩கூ௰

திருவாமாத்தூர்

பதிகம் ௧அ௬

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

குன்ற வார்சிலை நாண ராவரி
வாளி கூரெரி காற்றின் மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்ற லார்மணி மாட மாளிகை
சூளி கைக்கெதிர் நீண்ட பெண்ணைமேல்
அன்றில் வந்தணையு மாமாத்தூ ரம்மானே. ௧

பரவி வானவர் தான வர்பல
ருங்க லங்கிட வந்த கார்விடம்
வெருவ வுண்டுகந்த வருளென்கொல் விண்ணவனே
கரவின் மாமணி பொன்கொ ழித்திழி
சந்து காரகி றந்து பம்பைநீர்
அருவி வந்தலைக்கு மாமாத்தூ ரம்மானே. ௨

நீண்ட வார்சடை தாழ நேரிழை
பாட நீறுமெய் பூசி மாலயன்
மாண்ட வார்சுடலை நடமாடு மாண்பதுவென்
பூண்ட கேழன் மருப்ப ராவிரி
கொன்றை வாள்வரி யாமை பூணென
ஆண்ட நாயகனே யாமாத்தூ ரம்மானே. ௩

சேலி னேரன கண்ணி வெண்ணகை
மான்வி ழித்திரு மாதைப் பாகம்வைத்
தேல மாதவ நீமுயல்கின்ற வேடமிதென்
பாலி னேர்மொழி மங்கை மார்நட
மாடி யின்னிசை பாட நீள்பதி
ஆலை சூழ்கழனி யாமாத்தூ ரம்மானே. ௪

தொண்டர் வந்து வணங்கி மாமலர்
தூவி நின்கழ லேத்து வாரவர்
உண்டியால் வருந்த விரங்காத தென்னைகொலாம்
வண்ட லார்கழ னிக்க லந்தும
லர்ந்த தாமரை மாதர் வாண்முகம்
அண்டவாணர் தொழு மாமாத்தூ ரம்மானே. ரு

ஓதி யாரண மாய நுண்பொரு
ளன்று நால்வர்முன் கேட்க நன்னெறி
நீதி யாலநீழ லுரைக்கின்ற நீர்மையதென்
சோதி யேசுட ரேசு ரும்பமர்
கொன்றை யாய்திரு நின்றி யூருறை
ஆதியே யரனே யாமாத்தூ ரம்மானே. சா

மங்கை வாணுதன் மான்ம னத்திடை
வாடி யூடம ணங்க மழ்சடைக்
கங்கையா ளிருந்த கருத்தாவ தென்னைகொலாம்
பங்க யமது வுண்டு வண்டிசை
பாட மாமயி லாட விண்முழ
வங்கையா லதிர்க்கு மாமாத்தூ ரம்மானே. எ

நின்ற டர்த்திடு மைம்பு லன்னிலை
யாத வண்ண நினைந்து ளத்திடை
வென்றடர்த் தொருபான் மடமாதை விரும்புதலென்
குன்றெ டுத்தநி சாச ரன்றிர
டோளி ருபது தானெ ரிதர
அன்றடர்த் துகந்தா யாமாத்தூ ரம்மானே. அ

செய்ய தாமரை மேலி ருந்தவ
னோடு மாலடி தேட நீண்முடி
வெய்ய வாரழலாய் நிமிர்கின்ற வெற்றிமையென்
தைய லாளொடு பிச்சைக் கிச்சை
தயங்கு தோலரை யார்த்த வேடங்கொண்
டைய மேற்றுகந்தா யாமாத்தூ ரம்மானே. கூ

புத்தர் புன்சம ணுதர் பொய்ம்மொழி
நூல்பி டித்தலர் தூற்ற நின்னடி
பத்தர் பேணநின்ற பரமாய பான்மையதென்
முத்தை வென்ற முறுவ லாளுமை
பங்க னென்றிமை யோர்ப ரவிடும்
அத்தனே யரியா யாமாத்தூ ரம்மானே. ൰

வாடல் வெண்டலை மாலை யார்த்துமை
யங்கி ருள்ளெரி யேந்தி மாநடம்
ஆடன் மேயதென்னென் றுமாத்தூ ரம்மானைக்
கோட லுகை மரும்பு பைம்பொழிற்
கொச்சை யாரிறை ஞான சம்பந்தன்
பாடல் பத்தும்வல்லார் பரலோகஞ் சேர்வாரே. கக

திருச்சிற்றம்பலம்



திருக்களர் பதிகம் கஅஎ

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

நீரு ளார்கயல் வாவி சூழ்பொழி
னீண்ட மாவய லீண்டு மாமதில்
தேரினார் மறுகில் விழாமல்கு திருக்களருள்
ஊரு ளாரிடு பிச்சை பேணு
மொருவ னேயொளிர் செஞ்ச டைம்மதி
ஆரநின் றவனே யடைந்தார்க் கருளாயே. க

தோளின் மேலொளி நீறு தாங்கிய
தொண்டர் வந்தடி போற்றி மிண்டிய
தாளினார் வளருந் தவமல்கு திருக்களருள்
வேளி னேர்விச யற்க ருள்புரி
வித்த காவிரும் பும்ம டியாரை
ஆளுகந் தவனே யடைந்தார்க் கருளாயே. உ

பாட வல்லநன் மைந்த ரோடு
    பனிம லர்பல கொண்டு போற்றிசெய்
சேடர் வாழ்பொழில் சூழ்செழுமாடத் திருக்களருள்
நீட வல்ல நிமல னேயடி
    நிரைக ழல்சிலம் பார்க்க மாநடம்
ஆடவல் லவனே யடைந்தார்க் கருளாயே. ௫

அம்பி னேர்தடங் கண்ணி னாருட
    னாட வர்பயின் மாட மாளிகை
செம்பொ னார்பொழில் சூழ்ந்தழகாய திருக்களருள்
என்பு பூண்டதோர் மேனி யெம்மிறை
    வாவி ணையடி போற்றி நின்றவர்க்
கன்பு செய்தவனே யடைந்தார்க் கருளாயே. ௬

கொங்கு லாமலர்ச் சோலை வண்டினங்
    கிண்டி மாமது வுண்டி சைசெயத்
தெங்கு பைங்கமுகம் புடைசூழ்ந்த திருக்களருள்
மங்கை தன்னொடுங் கூடிய மண
    வாள னேபிணை கொண்டொர் கைத்தலத்
தங்கை யிற்படையா யடைந்தார்க் கருளாயே. ௭

கோல மாமயி லாலக் கொண்டல்கள்
    சேர்பொ ழிற்குல வும்வ யலிடைச்
சேலிளங் கயலார் புனல்சூழ்ந்த திருக்களருள்
நீல மேவிய கண்ட னேநிமிர்
    புன்ச டைப்பெரு மானெ னப்பொலி
ஆல நீழலுளா யடைந்தார்க் கருளாயே. ௮

தம்ப லம்மறி யாத வர்மதி
    ளுங்கு மால்வரை யாலழ லெழத்
திண்பலங் கெடுத்தாய் திகழ்கின்ற திருக்களருள்
வம்ப லர்மலர் தூவி நின்னடி
    வானவர் தொழக் கூத்து கந்துபேர்
அம்பலத் துறைவா யடைந்தார்க் கருளாயே. ௯

குன்ற டுத்தநன் மாளி கைக்கொடி
மாட நீடுயர் கோபு ரங்கண்மேல்
சென்ற டுத்துயர்வான் மதிதோயுந் திருக்களருள்
நின்ற டுத்துயர் மால்வ ரைத்திர
டோளி னாலெடுத் தான்ற னீண்முடி
அன்றடர்த் துகந்தா யடைந்தார்க் கருளாயே. ௮

பண்ணி யாழ்பயில் கின்ற மங்கையர்
பாட லாடலொ டார வாழ்பதி
தெண்ணி லாமதியம் பொழில்சேருந் திருக்களருள்
உண்ணி லாவிய வொருவ னேயிரு
வர்க்கு நின்கழல் காட்சி யாரழல்
அண்ண லாயவெம்மா னடைந்தார்க் கருளாயே. ௯

பாக்கி யம்பல செய்த பத்தர்கள்
பாட்டொ டும்பல பணிகள் பேணிய
தீக்கியல் குணத்தார் சிறந்தாருந் திருக்களருள்
வாக்கி னான்மறை யோதி னாயமண்
டேரர் சொல்லிய சொற்க ளானபொய்
ஆக்கி நின்றவனே யடைந்தார்க் கருளாயே. ௰

இந்து வந்தெழு மாட வீதியெ
ழில்கொள் காழிந் நகர்க் கவுணியன்
செந்து நேர்மொழியா ரவர்சேருந் திருக்களருள்
அந்தி யன்னதொர் மேனி யானை
யமரர் தம்பெரு மானை ஞானசம்
பந்தன் சொல்லிவை பத்தும்பாடத் தவமாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - களர்முளைநாதர்; இறைவி - இளங்கொம்பன்னாள்.

## திருக்கோட்டாறு பதிகம் ௧௬௮

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

கருந்த டங்கணின் மாத ராரிசை
செய்யக் காரதிர் கின்ற பூம்பொழிற்
குருந்த மாதவியின் விரைமல்கு கோட்டாற்றில்
இருந்த வெம்பெரு மானை யுள்கி
யிணைய டிதொழு தேத்து மாந்தர்கள்
வருந்து மாறறியார் நெறிசேர்வர் வானூடே. ௧

நின்று மேய்ந்து நினைந்து மாகரி
நீரொ டும்மலர் வேண்டி வான்மழை
குன்றி னேர்ந்துகுத்திப் பணிசெய்யுங் கோட்டாற்றுள்
என்று மன்னிய வெம்பி ரான்கழ
லேத்தி வானர சாள வல்லவர்
பொன்று மாறறியார் புகழார்ந்த புண்ணியரே. ௨

விரவி நாளும் விழா விடைப்பொலி
தொண்டர் வந்து வியந்து பண்செயக்
குரவ மாரு நீழற்பொழின்மல்கு கோட்டாற்றில்
அரவ நீள்சடை யானை யுள்கிநின்
றாத ரித்துமு னன்பு செய்தடி
பரவு மாறுவல் லார்பழிபற் றறுப்பாரே. ௩

அம்பி னேர்விழி மங்கை மார்பல
ராட கம்பெறு மாட மாளிகைக்
கொம்பி னேர்துகி லின்கொடியாடு கோட்டாற்றில்
நம்ப னேநட னேந லந்திகழ்
நாதனே யென்று காதல் செய்தவர்
தம்பி னேர்ந்தறி யார்தடுமாற்ற வல்வினையே. ௪

பழைய தம்மடி யார்து திசெயப்
பாரு ளோர்களும் விண்ணு ளோர்தொழக்
குழலு மொந்தை விழாவொலிசெய்யுங் கோட்டாற்றில்
கழலும் வண்சிலம் பும்மொ லிசெயக்
கானி டைக்கண மேத்த வாடிய
அழக னென்றெழுவா ரணியாவர் வானவர்க்கே. ௫

பஞ்சின் மெல்லடி மாத ராடவர்
பத்தர் சித்தர்கள் பண்பு வைகலும்
கொஞ்சி யின்மொழியாற் றொழின்மல்கு கோட்டாற்றில்
மஞ்ச னேமணி யேம ணிமிடற்
றண்ண லேயென வுண்ணெ கிழ்ந்தவர்
துஞ்சு மாறறியார் பிறவாரித் தொன்னிலத்தே. ௬

கலவ மாமயி லாளோர் பங்கனைக்
கண்டு கண்மிசை நீர்நெ கிழ்த்திசை
குலவு மாறுவல்லார் குடிகொண்ட கோட்டாற்றில்
நிலவ மாமதி சேர்ச டையுடை
நின்ம லாவென வுன்னு வாரவர்
உலவு வானவரி னுயர்வாகுவ துண்மையதே. ௭

வண்ட லார்வயற் சாலி யாலைவ
ளம்பொ லிந்திட வார்பு னற்றிரை
கொண்ட லார்கொணர்ந் தங்குலவுந்திகழ் கோட்டாற்றில்
தொண்டெ லாந்துதி செய்ய நின்ற
தொழில னேகழ லால ரக்கனை
மிண்டெ லாந்தவிர்த் தென்னுகந்திட்ட வெற்றிமையே. ௮

கருதி வந்தடி யார்தொ ழுதெழக்
கண்ண னோடயன் றேட வானையின்
குருதி மெய்கலப் பவுரிகொண்டு கோட்டாற்றில்
விருதி னன்மட மாது நீயும்வி
யப்பொ டும்முயர் கோயின் மேவிவெள்
எருதுகந் தவனே யிரங்கா யுனதின்னருளே. ௯

உடையி லாதுழல் கின்ற குண்டரு
மூண ருந்தவத் தாய சாக்கியர்
கொடையி லாமனத் தார்குறையாரும் கோட்டாற்றில்
படையி லார்மழு வேந்தி யாடிய
பண்ப னேயிவ ரென்கொ லோநுனை
அடைகி லாதவண்ணம் மருளாயுன் னடியவர்க்கே. ௰

கால னைக்கழ லாலு தைத்தொரு
காம னைக்கன லாகச் சீறிமெய்
கோல வார்குழ லாள்குடிகொண்ட கோட்டாற்றில்
மூல னைம்முடி வொன்றி லாதவெம்
முத்த னைப்பயில் பந்தன் சொல்லிய
மாலை பத்தும்வல்லார்க் கெளிதாகும் வானகமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - ஐராவதநாதர்; இறைவி - வண்டமர்பூங்குழலி.



## திருப்புறவார்பனங்காட்டூர் பதிகம் ௧௮௪

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

விண்ண மர்ந்தன மும்ம தில்களை
வீழ வெங்கணை யாலெய் தாய்விரி
பண்ணமர்ந் தொலிசேர் புறவார் பனங்காட்டூர்ப்
பெண்ண மர்ந்தொரு பாக மாகிய
பிஞ்ஞ காபிறை சேர்நு தலிடைக்
கண்ணமர்ந் தவனே கலந்தார்க் கருளாயே. ௧

நீடல் கோட லலரவெண் முல்லை
நீர்ம லர்நிரைத் தாத ளஞ்செயப்
பாடல் வண்டறையும் புறவார் பனங்காட்டூர்த்

தோடி லங்கிய காத யன்மின்
றுளங்க வெண்குழை துள்ள நள்ளிருள்
ஆடுஞ் சங்கரனே யடைந்தார்க் கருளாயே. ௨

வாளை யுங்கய லும்மிளிர் பொய்கை
வார்பு னற்கரை யருகெ லாம்வயற்
பாளை யொண்கமுகம் புறவார் பனங்காட்டூர்ப்
பூளை யுந்நறுங் கொன்றை யும்மத
மத்த மும்புனை வாய்க ழலிணைத்
தாளையே பரவுந் தவத்தார்க் கருளாயே. ௩

மேய்ந்தி ளஞ்செந்நெல் மென்க திர்கவ்வி
மேற்ப டுதலின் மேதி வைகறை
பாய்ந்த தண்பழனப் புறவார் பனங்காட்டூர்
ஆய்ந்த நான்மறை பாடி யாடு
மடிக ளென்றென் றரற்றி நன்மலர்
சாய்ந்தடி பரவுந் தவத்தார்க் கருளாயே. ௪

செங்க யல்லொடு சேல்செ ருச்செயச்
சீறி யாழ்முர றேனி னத்தொடு
பங்கயம் மலரும் புறவார் பனங்காட்டூர்க்
கங்கை யும்மதி யுங்க மழ்சடைக்
கேண்மை யாளொடுங் கூடி மான்மறி
அங்கை யாடலனே யடியார்க் கருளாயே. ௫

நீரி னார்வரை கோலி மால்கட
னீடி யபொழில் சூழ்ந்து வைகலும்
பாரி னார்பிரியாப் புறவார் பனங்காட்டூர்க்
காரி னார்மலர்க் கொன்றை தாங்கு
கடவு ளென்றுகை கூப்பி நாடொறும்
சீரி னால்வணங்குந் திறத்தார்க் கருளாயே. ௬

கைய ரிவையர் மெல்வி ரல்லவை
காட்டி யம்மலர்க் காந்த ளங்குறி
பையரா விரியும் புறவார் பனங்காட்டூர்

மெய்ய ரிவையொர் பாக மாகவு
மேவி னுய்கழ லேத்தி நாடொறும்
பொய்யிலா வடிமை புரிந்தார்க் கருளாயே. ௭

தூவி யஞ்சிறை மென்ன டையன
மல்கி யொல்கிய தூமலர்ப் பொய்கைப்
பாவில் வண்டறையும் புறவார் பனங்காட்டூர்
மேவி யங்கிலை யாய ரக்கன
தோள டர்த்தவன் பாடல் கேட்டருள்
ஏவிய பெருமா னென்பவர்க் கருளாயே. ௮

அந்தண் மாதவி புன்னை நல்லவ
சோக மும்மர விந்த மல்லிகை
பைந்த ணுழல்கள் சூழ்புறவார் பனங்காட்டூர்
எந்தி ளம்முகில் வண்ண னுன்முக
னென்றி வர்க்கரி தாய்நி மிர்ந்ததொர்
சந்த மாயவனே தவத்தார்க் கருளாயே. ௯

நீண மார்முரு குண்டு வண்டின
நீல மாமலர் கவ்வி நேரிசை
பாணில் யாழ்முரலும் புறவார் பனங்காட்டூர்
நாண ழிந்துழல் வார்ச மணரு
நண்பில் சாக்கிய ருந்ந கத்தலை
யூணுரி யவனே யுகப்பார்க் கருளாயே. ௰

மையி னார்மணி போன்மி டற்றனை
மாசில் வெண்பொடிப் பூசு மார்பனைப்
பைய தேன்பொழில்சூழ் புறவார் பனங்காட்டூர்
ஐய னைப்புக ழான காழியு
ளாய்ந்த நான்மறை ஞான சம்பந்தன்
செய்யுள் பாடவல்லார் சிவலோகஞ் சேர்வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - பனங்காட்டீச்சுவரர்; இறைவி - புறவம்மை.

திருப்புகலி                                                                பதிகம் ககூ

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

உருவார்ந்த மெல்லியலோர் பாகமுடையீ ரடைவோர்க்குக்
கருவார்ந்த வானுலகங் காட்டிக்கொடுத்தல் கருத்தானீர்
பொருவார்ந்த தெண்கடலொண் சங்கந்திளைக்கும் பூம்புகலித்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. க

நீரார்ந்த செஞ்சடையீர் நிரையார்கழல்சேர் பாதத்தீர்
ஊரார்ந்த சில்பலியீ ருழைமானுரிதோ லாடையீர்
போரார்ந்த தெண்டிரைசென் றணையுங்கானற் பூம்புகலிச்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. உ

அழிமல்கு பூம்புனலு மரவுஞ்சடைமே லடைவெய்த
மொழிமல்கு மாமறையீர் கறையார்கண்டத் தெண்டோளீர்
பொழின்மல்கு வண்டினங்க ளறையுங்கானற் பூம்புகலி
எழின்மல்கு கோயிலே கோயிலாக விருந்தீரே. ங

கையிலார்ந்த வெண்மழுவொன் றுடையீர்கடிய கரியின்றோல்
மயிலார்ந்த சாயன்மட மங்கைவெருவ மெய்போர்த்தீர்
பயிலார்ந்த வேதியர்கள் பதியாய்விளங்கும் பைம்புகலி
எயிலார்ந்த கோயிலே கோயிலாக விசைந்தீரே. ச

நாவார்ந்த பாடலீ ராடலரவ மரைக்கார்த்தீர்
பாவார்ந்த பல்பொருளின் பயன்களானீ ரயன்பேணும்
பூவார்ந்த பொய்கைகளும் வயலுஞ்சூழ்ந்த பொழிற்புகலித்
தேவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. ரு

மண்ணார்ந்த மண்முழவந் ததும்பமலையான் மகளென்னும்
பெண்ணார்ந்த மெய்மகிழப் பேணியெரிகொண் டாடினீர்
விண்ணார்ந்த மதியமிடை மாடத்தாரும் வியன்புகலிக்
கண்ணார்ந்த கோயிலே கோயிலாகக் கலந்தீரே.

சாக

களிபுல்கு வல்லவுண ரூர்மூன்றெரியக் கணைதொட்டீர்
அளிபுல்கு பூமுடியீ ரமரரேத்த வருள்செய்தீர்
தெளிபுல்கு தேனினமு மலருள்விரைசேர் திண்புகலி
ஒளிபுல்கு கோயிலே கோயிலாக வுகந்தீரே. எ

பரந்தோங்கு பல்புகழ்சே ரரக்கர்கோனை வரைக்கீழிட்
டிரந்தோன்றும் பாடல்கேட் டிகவையளித்தீ ருகவாதார்
புரந்தோன்று மும்மதிலு மெரியச்செற்றீர் பூம்புகலி
வரந்தோன்று கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. அ

சலந்தாங்கு தாமரைமே லயனுந்தரணி யளந்தானுங்
கலந்தோங்கி வந்திழிந்துங் காணாவண்ணங் கனலானீர்
புலந்தாங்கி யைம்புலனுஞ் செற்றார்வாழும் பூம்புகலி
நலந்தாங்கு கோயிலே கோயிலாக நயந்தீரே. கூ

நெடிதாய வன்சமணு நிறைவொன்றில்லாச் சாக்கியருங்
கடிதாய கட்டுரையாற் கழறமேலோர் பொருளானீர்
பொடியாரு மேனியினீர் புகலிமறையோர் புரிந்தேத்த
வடிவாருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ௰

ஒப்பரிய பூம்புகலி யோங்குகோயின் மேயானை
அப்பரிசிற் பதியான வணிகொண்ஞான சம்பந்தன்
செப்பரிய தண்டமிழாற் றெரிந்தபாட லிவைவல்லார்
எப்பரிசி லிடர்நீங்கி யிமையோருலகத் திருப்பாரே. கக

திருச்சிற்றம்பலம்



## திருத்தலைச்சங்காடு பதிகம் கஅக

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நலச்சங்க வெண்குழையுந் தோடும்பெய்தோர் நால்வேதஞ்
சொலச்சங்கை யில்லாதீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
குலைச்செங்காய்ப் பைங்கமுகின் குளிர்கொள்சோலைக் குயிலாலுந்
தலைச்சங்கைக் கோயிலே கோயிலாகத் தாழ்ந்தீரே. க

துணிமல்கு கோவணமுந் தோலுங்காட்டித் தொண்டாண்டீர்
மணிமல்கு கண்டத்தி ரண்டர்க்கெல்லா மாண்பானீர்
பிணிமல்கு நூன்மார்பர் பெரியோர்வாழுந் தலைச்சங்கை
அணிமல்கு கோயிலே கோயிலாக வமர்ந்தீரே. உ

சீர்கொண்ட பாடலீர் செங்கண்வெள்ளே றூர்தியீர்
நீர்கொண்டும் பூக்கொண்டு நீங்காத்தொண்டர் நின்றேத்தத்
தார்கொண்ட நூன்மார்பர் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
ஏர்கொண்ட கோயிலே கோயிலாக விருந்தீரே. ங

வேடஞ்சூழ் கொள்கையீர் வேண்டிநீண்ட வெண்டிங்கள்
ஓடஞ்சூழ் கங்கையு முச்சிவைத்தீர் தலைச்சங்கைக்
கூடஞ்சூழ் மண்டபமுங் குலாயவாசற் கொடித்தோன்றும்
மாடஞ்சூழ் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ச

சூலஞ்சேர் கையினீர் சுண்ணவெண்ணீ றாடலீர்
நீலஞ்சேர் கண்டத்தீர் நீண்டசடைமே னீரேற்றீர்
ஆலஞ்சேர் தண்கான லன்னமன்னுந் தலைச்சங்கைக்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாகக் கொண்டீரே. ரு

நிலநீரொ டாகாச மனல்காலாகி நின்றைந்து
புலநீர்மை புறங்கண்டார் பொக்கஞ்செய்யார் போற்றோவார்
சலநீத ரல்லாதார் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
நலநீர கோயிலே கோயிலாக நயந்தீரே. சா

அடிபுல்கு பைங்கழல்க ளார்ப்பப்பேர்ந்தோ ரனலேந்திக்
கொடிபுல்கு மென்சாய லுமையோர் பாகங்கூடினீர்
பொடிபுல்கு நூன்மார்பர் புரிநூலாளர் தலைச்சங்கைக்
கடிபுல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. எ

திரையார்ந்த மாகடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை
வரையார்ந்த தோளடர விரலாலூன்று மாண்பினீர்
அரையார்ந்த மேகலையீ ரந்தணாளர் தலைச்சங்கை
நிரையார்ந்த கோயிலே கோயிலாக நினைந்தீரே. அ

பாயோங்கு பாம்பணைமே லானும்பைந்தா மரையானும்
போயோங்கிக் காண்கிலார் புறநின்றோரார் போற்றோவார்
தீயோங்கு மறையாளர் திகழுஞ்செல்வத் தலைச்சங்கைச்
சேயோங்கு கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. ௯

அலையாரும் புனறுறந்த வமணர்குண்டர் சாக்கியர்
தொலையாதங் கலர்தூற்றத் தோற்றங்காட்டி யாட்கொண்டீர்
தலையான நால்வேதந் தரித்தார்வாழுந் தலைச்சங்கை
நிலையார்ந்த கோயிலே கோயிலாக நின்றீரே. ௰

நளிரும் புனற்காழி நல்லஞான சம்பந்தன்
குளிருந் தலைச்சங்கை யோங்குகோயின் மேயானை
ஒளிரும் பிறையானை யுரைத்தபாட லிவைவல்லார்
மிளிருந் திரைசூழ்ந்த வையத்தார்க்கு மேலாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சங்கருணையகர்; இறைவி - சௌந்தரியம்மை.



## திருவிடைமருதூர் பதிகம் ௧௯௨

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொங்குநூன் மார்பினீர் பூதப்படையீர் பூங்கங்கை
தங்குசெஞ் சடையினீர் சாமவேத மோதினீர்
எங்குமெழிலார் மறையோர்கண் முறையாலேத்த விடைமருதில்
மங்குறோய் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ௧

நீரார்ந்த செஞ்சடையீர் நெற்றித்திருக்கண் ணிகழ்வித்தீர்
போரார்ந்த வெண்மழுவொன் றுடையீர் பூதம்பாடலீர்
ஏரார்ந்த மேகலையாள் பாகங்கொண்டீ ரிடைமருதில்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. ௨

அழன்மல்கு மங்கையி லேந்திப்பூத மவைபாடச்
சுழன்மல்கு மாடலீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
எழின்மல்கு நான்மறையோர் முறையாலேத்த விடைமருதில்
பொழின்மல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. ௩

பொல்லாப் படுதலையொன் றேந்திப் புறங்காட்டாடலீர்
வில்லாற் புரமூன்று மெரித்தீர் விடையார்கொடியினீர்
எல்லாக் கணங்களு முறையாலேத்த விடைமருதில்
செல்வாய கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. ச

வருந்திய மாதவத்தோர் வானோரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச மாடியுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீராலேத்த விடைமருதில்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே. ரு

சலமல்கு செஞ்சடையீர் சாந்தநீறு பூசினீர்
வலமல்கு வெண்மழுவொன் றேந்திமயானத் தாடலீர்
இலமல்கு நான்மறையோ ரினிதாயேத்த விடைமருதில்
புலமல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. சு

புனமல்கு கொன்றையீர் புலியினதளீர் பொலிவார்ந்த
சினமல்கு மால்விடையீர் செய்யீர்கரிய கண்டத்தீர்
இனமல்கு நான்மறையோ ரேத்துஞ்சீர்கொ ளிடைமருதில்
கனமல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. எ

சிலையுய்த்த வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திறலரக்கன்
தலைபத்துந் திண்டோளு நெரித்தீர் தையல்பாகத்தீர்
இலைமொய்த்த தண்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த விடைமருதில்
நலமொய்த்த கோயிலே கோயிலாக நயந்தீரே. அ

மறைமல்கு நான்முகனு மாலுமறியா வண்ணத்தீர்
கறைமல்கு கண்டத்தீர் கபாலமேந்து கையினீர்
அறைமல்கு வண்டினங்க ளாலுஞ்சோலை யிடைமருதில்
நிறைமல்கு கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. கூ

சின்போர்வைச் சாக்கியரு மாசுசேருஞ் சமணரும்
துன்பாய கட்டுரைகள் சொல்லி யல்லஹாற்றவே
இன்பாய வந்தணர்க ளேத்துமேர்கொ ளிடைமருதில்
அன்பாய கோயிலே கோயிலாக வமர்ந்தீரே. ௰

கல்லின் மணிமாடக் கழுமலத்தார் காவலவன்
நல்ல வருமறையா னற்றமிழ் ஞானசம்பந்தன்
எல்லி யிடைமருதி லேத்துபாட லிவைபத்தும்
சொல்லு வார்க்குங் கேட்பார்க்குந் துயரமில்லையே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருநல்லூர் பதிகம் ௧௧௫

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பெண்ணமருந் திருமேனி யுடையீர் பிறங்குசடைதாழப்
பண்ணமரு நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர்
திண்ணமரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மண்ணமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ௧

அலைமல்கு தண்புனலும் பிறையுஞ்சூடி யங்கையில்
கொலைமல்கு வெண்மழுவு மனலுமேந்துங் கொள்கையீர்
சிலைமல்கு வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திருநல்லூர்
மலைமல்கு கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ௨

குறைநிரம்பா வெண்மதியஞ் சூடிக்குளிர்புன் சடைதாழப்
பறைநவின்ற பாடலோ டாடல்பேணிப் பயில்கின்றீர்
சிறைநவின்ற தண்புனலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மறைநவின்ற கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ௩

கூனமரும் வெண்பிறையும் புனலுஞ்சூடுங் கொள்கையீர்
மானமரு மென்விழியாள் பாகமாகு மாண்பினீர்
தேனமரும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வானமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ச

நிணங்கவரு மூவிலையு மனலுமேந்தி நெறிகுழலாள்
அணங்கமரும் பாடலோ டாடன்மேவு மழகினீர்
திணங்கவரு மாடரவும் பிறையுஞ்சூடித் திருநல்லூர்
மணங்கமழுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ரு

கார்மருவு பூங்கொன்றை சூடிக்கமழ்புன் சடைதாழ
வார்மருவு மென்முலையாள் பாகமாகு மாண்பினீர்
தேர்மருவு நெடுவீதிக் கொடிகளாடுந் திருநல்லூர்
ஏர்மருவு கோயிலே கோயிலாக விருந்தீரே. சா

ஊன்றோயும் வெண்மழுவு மனலுமேந்தி யுமைகாண
மீன்றோயுந் திசைநிறைய வோங்கியாடும் வேடத்தீர்
தேன்றோயும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வான்றோயுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. எ

காதமரும் வெண்குழையீர் கறுத்தவரக்கன் மலையெடுப்ப
மாதமரு மென்மொழியாண் மறுகும்வண்ணங் கண்டுகந்தீர்
தீதமரா வந்தணர்கள் பரவியேத்துந் திருநல்லூர்
மாதமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. அ

போதின்மே லயன்திருமால் போற்றியும்மைக் காணாது
நாதனே யிவனென்று நயந்தேத்த மகிழ்ந்தளித்தீர்
தீதிலா வந்தணர்க டீமூன்றோம்புந் திருநல்லூர்
மாதரா ளவளோடு மன்னுகோயின் மகிழ்ந்தீரே. கூ

பொல்லாத சமணரொடு புறங்கூறுஞ் சாக்கியரொன்
றல்லாதா ரறவுரைவிட் டடியார்கள் போற்றோவா
நல்லார்க ளந்தணர்க ளுளுமேத்துந் திருநல்லூர்
மல்லார்ந்த கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. ய

கொந்தணவும் பொழில்புடைசூழ் கொச்சைமேவு குலவேந்தன்
செந்தமிழின் சம்பந்தன் சிறைவண்புனல்சூழ் திருநல்லூர்ப்
பந்தணவு மெல்விரலாள் பங்கன்றன்னைப் பயில்பாடல்
சிந்தனையா லுரைசெய்வார் சிவலோகஞ்சேர்ந் திருப்பாரே. கக

திருச்சிற்றம்பலம்



## திருக்குடவாயில் பதிகம் ககூச

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கலைவாழு மங்கையீர் கொங்கையாருங் கருங்கூந்தல்
அலைவாழுஞ் செஞ்சடையி லரவும்பிறையு மமர்வித்தீர்
குலைவாழை கமுகம்பொன் பவளம்பழுக்குங் குடவாயில்
நிலைவாழுங் கோயிலே கோயிலாக நின்றீரே. க

அடியார்ந்த பைங்கழலுஞ் சிலம்புமார்ப்ப வங்கையில்
செடியார்ந்த வெண்டலையொன் றேந்தியுலகம் பலிதேர்வீர்
குடியார்ந்த மாமறையோர் குலாவியேத்துங் குடவாயில்
படியார்ந்த கோயிலே கோயிலாகப் பயின்றீரே. உ

கழலார்பூம் பாதத்தீ ரோதக்கடலில் விடமுண்டன்
றழலாருங் கண்டத்தீ ரண்டர்போற்று மளவினீர்
குழலார வண்டினங்கள் கீதத்தொலிசெய் குடவாயில்
நிழலார்ந்த கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. ங

மறியாருங் கைத்தலத்தீர் மங்கைபாக மாகச்சேர்ந்
தெறியாரு மாமழுவு மெரியுமேந்துங் கொள்கையீர்
குறியார வண்டினங்க டேன்மிழற்றுங் குடவாயில்
நெறியாருங் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. ச

இழையார்ந்த கோவணமுங் கீளுமெழிலா ருடையாகப்
பிழையாத சூலம்பெய் தாடல்பாடல் பேணினீர்
குழையாரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த குடவாயில்
விழவார்ந்த கோயிலே கோயிலாக மிக்கீரே. ரு

அரவார்ந்த திருமேனி யானவெண்ணீ றாடினீர்
இரவார்ந்த பெய்பலிகொண் டிமையோரேத்த நஞ்சுண்டீர்
குரவார்ந்த பூஞ்சோலை வாசம்வீசுங் குடவாயில்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. சா

பாடலார் வாய்மொழியீர் பைங்கண்வெள்ளே றூர்தியீர்
ஆடலார் மாநடத்தீ ரரிவைபோற்று மாற்றலீர்
கோடலார் தும்பிமுரன் றிசைமிழற்றுங் குடவாயில்
நீடலார் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. எ

கொங்கார்ந்த பைங்கமலத் தயனுங்குறளாய் நிமிர்ந்தானும்
அங்கார்ந்து தள்ளாட வழலாய்நிமிர்ந்தீ ரிலங்கைக்கோன்
தங்காதன் மாமுடியுந் தாளுமடர்த்தீர் குடவாயில்
பங்கார்ந்த கோயிலே கோயிலாகப் பரிந்தீரே. அ

* * * * * கூ

தூசார்ந்த சாக்கியருந் தூய்மையில்லாச் சமணரும்
ஏசார்ந்த புன்மொழிநீத் தெழில்கொண்மாடக் குடவாயில்
ஆசாரஞ் செய்மறையோ ரளவிற்குன்றா தடிபோற்றத்
தேசார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. ய

நளிர்பூந் திரைமல்கு காழிஞான சம்பந்தன்
குளிர்பூங் குடவாயிற் கோயின்மேய கோமானை
ஒளிர்பூந் தமிழ்மாலை யுரைத்தபாட லிவைவல்லார்
தளர்வான தாமொழியத் தகுசீர்வானத் திருப்பாரே. கக

திருச்சிற்றம்பலம்



சீகாழி பதிகம் கசுரு

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நலங்கொண் முத்து மணியு மணியுந் திரளோதங்
கலங்க டன்னிற் கொண்டு கரைசேர் கலிக்காழி
வலங்கொண் மழுவொன் றுடையாய் விடையா யெனவேத்தி
அலங்கல் சூட்ட வல்லார்க் கடையா வருநோயே. க

ஊரா ருவரிச் சங்கம் வங்கங் கொடுவந்து
காரா ரோதங் கரைமே லுயர்த்துங் கலிக்காழி
நீரார் சடையாய் நெற்றிக் கண்ணா வென்றென்று
பேரா யிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே. உ

வடிகொள் பொழிலின் மழலை வரிவண் டிசைசெய்யக்
கடிகொள் போதிற் றென்ற லணையுங் கலிக்காழி
முடிகொள் சடையாய் முதல்வா வென்று முயன்றேத்தி
அடிகை தொழுவார்க் கில்லை யல்ல லவலமே. ௩

மனைக்கே யேற வளஞ்செய் பவளம் வளர்முத்தங்
கனைக்குங் கடலு ளோத மேறுங் கலிக்காழிப்
பனைக்கைப் பகட்டீ ருரியாய் பெரியா யெனப்பேணி
நினைக்க வல்ல வடியார் நெஞ்சி னல்லாரே. ச

பரிதி யியங்கும் பாரிற் சீரார் பணியாலே
கருதி விண்ணோர் மண்ணோர் விரும்புங் கலிக்காழிச்
சுருதி மறைநான் கான செம்மை தருவானைக்
கருதி யெழுமின் வழுவா வண்ணந் துயர்போமே. ரு

மந்த மருவும் பொழிலி லெழிலார் மதுவுண்டு
கந்த மருவ வரிவண் டிசைசெய் கலிக்காழிப்
பந்த நீங்க வருளும் பரனே யெனவேத்திச்
சிந்தை செய்வார் செம்மை நீங்கா திருப்பாரே. சு

புயலார் பூமி நாம மோதிப் புகழ்மல்கக்
கயலார் கண்ணார் பண்ணா ரொலிசெய் கலிக்காழிப்
பயில்வான் றன்னைப் பத்தி யாரத் தொழுதேத்த
முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்ற முடுகாதே. எ

அரக்கன் முடிதோ ளெரிய வடர்த்தா னடியார்க்குக்
கரக்க கில்லா தருள்செய் பெருமான் கலிக்காழிப்
பரக்கும் புகழான் றன்னை யேத்திப் பணிவார்மேற்
பெருக்கு மின்பந் துன்ப மான பிணிபோமே. அ

மாணா யுலகங் கொண்ட மாலு மலரோனுங்
காணா வண்ண மெரியாய் நிமிர்ந்தான் கலிக்காழிப்
பூணார் முலையாள் பங்கத் தானைப் புகழ்ந்தேத்திக்
கோணா நெஞ்ச முடையார்க் கில்லைக் குற்றமே. கூ

அஞ்சி யல்லன் மொழிந்து திரிவா ரமணாதர்
கஞ்சி காலை யுண்பார்க் கரியான் கலிக்காழித்
தஞ்ச மாய தலைவன் றன்னை நினைவார்கள்
துஞ்ச லில்லா நல்ல வுலகம் பெறுவாரே. ய

ஊழி யாய பாரி லோங்கு முயர்செல்வக்
காழி யீசன் கழலே பேணுஞ் சம்பந்தன்
றாழு மனத்தா லுரைத்த தமிழ்க ளிவைவல்லார்
வாழி நீங்கா வானோ ருலகின் மகிழ்வாரே. கக

திருச்சிற்றம்பலம்



## திருப்பாசூர்　　　　பதிகம் ககூச

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாள ரென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே. க

பேரும் பொழுதும் பெயரும் பொழுதும் பெம்மானென்
றாருந் தனையு மடியா ரேத்த வருள்செய்வார்
ஊரு மரவ முடையார் வாழு மூர்போலும்
பாரின் மிசையார் பாட லோவாப் பாசூரே. உ

கையாற் றொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விமலனார்
நெய்யா டுதலஞ் சுடையார் நிலாவு மூர்போலும்
பைவாய் நாகங் கோட லீனும் பாசூரே. ௩

பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற் பொலிவெய்தக்
கொங்கார் கொன்றை சூடியென் னுள்ளங் குளிர்வித்தார்
தங்கா தலியுந் தாமும் வாழு மூர்போலும்
பைங்கான் முல்லை பல்லரும் பீனும் பாசூரே. ச

ஆடற் புரியு மைவா யரவொன் றரைச்சாத்தும்
சேடச் செல்வர் சிந்தையு ளென்றும் பிரியாதார்
வாடற் றலையிற் பலிதேர் கையா ரூர்போலும்
பாடற் குயில்கள் பயில்பூஞ் சோலைப் பாசூரே. ரு

கானின் றதிரக் கனல்வாய் நாகங் கச்சாகத்
தோலொன் றுடையார் விடையார் தம்மைத் தொழுவார்கள்
மால்கொண் டோட மைய றீர்ப்பா ரூர்போலும்
பால்வெண் மதிதோய் மாடஞ் சூழ்ந்த பாசூரே. சு

கண்ணி னயலே கண்ணொன் றுடையார் கழலுன்னி
எண்ணுந் தனையு மடியா ரேத்த வருள்செய்வார்
உண்ணின் றுருக வுகவை தருவா ரூர்போலும்
பண்ணின் மொழியார் பாட லோவாப் பாசூரே. எ

தேசு குன்றாத் தெண்ணீ ரிலங்கைக் கோமானைக்
கூச வடர்த்துக் கூர்வாள் கொடுப்பார் தம்மையே
பேசிப் பிதற்றப் பெருமை தருவா ரூர்போலும்
பாசித் தடமும் வயலுஞ் சூழ்ந்த பாசூரே. அ

நகுவாய் மலர்மே லயனு நாகத் தணையானும்
புகுவா யறியார் புறமின் றோரார் போற்றேவார்
செகுவா யுகுபற் றலைசேர் கையா ரூர்போலும்
பகுவாய் நாரை யாரல் வாரும் பாசூரே. சு

தூய வெயினின் றுழல்வார் துவர்தோ யாடையார்
நாவில் வெய்ய சொல்லித் திரிவார் நயமில்லார்
காவல் வேவக் கணையொன் றெய்தா ரூர்போலும்
பாவைக் குரவம் பயில்பூஞ் சோலைப் பாசூரே. ய

ஞான முணர்வான் காழி ஞான சம்பந்தன்
தேனும் வண்டு மின்னிசை பாடுந் திருப்பாசூர்க்
கானம் முறைவார் கழல்சேர் பாட லிவைவல்லார்
ஊன மிலரா யும்பர் வானத் துறைவாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - பாசூர்நாதர்; இறைவி - பசுபதிநாயகி.



## திருவெண்காடு　　　　பதிகம் ககஎ

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

உண்டாய் நஞ்சை யுமையோர் பங்கா வென்றுள்கித்
தொண்டாய்த் திரியு மடியார் தங்க டுயரங்கள்
அண்டா வண்ண மறுப்பா னெந்தை யூர்போலும்
வெண்டா மரைமேற் கருவண் டியாழ்செய் வெண்காடே. க

நாத னம்மை யாள்வா னென்று நவின்றேத்திப்
பாதம் பன்னாள் பணியு மடியார் தங்கண்மேல்
ஏதந் தீர விருந்தான் வாழு மூர்போலும்
வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே. உ

தண்முத் தரும்பத் தடமூன் றுடையான் றனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சே வடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப வுவகை தருவா னூர்போலும்
வெண்முத் தருவிப் புனல்வந் தலைக்கும் வெண்காடே. ௩

நரையார் வந்து நாளுங் குறுகி நணுகாமுன்
உரையால் வேறா வுள்கு வார்க ளுள்ளத்தே
கரையா வண்ணங் கண்டான் மேவு மூர்போலும்
விரையார் கமலத் தன்ன மருவும் வெண்காடே. ௪

பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும் பெம்மானென்
றுள்ளத் துள்ளித் தொழுவார் தங்க ளுறுநோய்கள்
தள்ளிப் போக வருளுந் தலைவ னூர்போலும்
வெள்ளைச் சுரிசங் குலவித் திரியும் வெண்காடே. ௫

ஒளிகொண் மேனி யுடையா யும்ப ராளீயென்
றளிய ராகி யழுதுற் றூறு மடியார்கட்
கெளியா னமரர்க் கரியான் வாழு மூர்போலும்
வெளிய வுருவத் தானை வணங்கும் வெண்காடே. ௬

கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினான்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த மாணிக்காய்
ஆள்வித் தமர ருலக மளிப்பா னூர்போலும்
வேள்விப் புகையால் வான மிருள்கூர் வெண்காடே. ௭

வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
முளையார் மதியஞ் சூடி யென்று முப்போதும்
இளையா தேத்த விருந்தா னெந்தை யூர்போலும்
விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த வெண்காடே. ௮

கரியா னோடு கமல மலரான் காணாமை
எரியாய் நிமிர்ந்த வெங்கள் பெருமா னென்பார்கட்
குரியா னமரர்க் கரியான் வாழு மூர்போலும்
விரியார் பொழிலின் வண்டு பாடும் வெண்காடே. ௯

பாடு மடியார் பலருங் கூடிப் பரிந்தேத்த
ஆடு மரவ மசைத்த பெருமா னறிவின்றி
மூட முடைய சமண்சாக் கியர்க ளுணராத
வேட முடைய பெருமான் பதியாம் வெண்காடே. ய

விடையார் கொடியான் மேவி யுறையும் வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றுங் காழியான்
நடையா ரின்சொன் ஞானசம் பந்தன் றமிழ்வல்லார்க்
கடையா வினைக ளமர லோக மாள்வாரே. கக

திருச்சிற்றம்பலம்



## திருமீயச்சூர் ககஅ

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

காயச் செவ்விக் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன் றாதைதன்
மீயச் சூரே தொழுது வினையை வீட்டுமே. க

பூவார் சடையின் முடிமேற் புனல ரனல்கொள்வர்
நாவார் மறையர் பிறையர் நறவெண் டலையேந்தி
ஏவார் மலையே சிலையாக் கழியம் பெரிவாங்கி
மேவார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. உ

பொன்னேர் கொன்றை மாலை புரளு மகலத்தான்
மின்னேர் சடைக ளுடையான் மீயச் சூரானைத்
தன்னேர் பிறரில் லானைத் தலையால் வணங்குவார்
அந்நே ரிமையோ ருலக மெய்த லரிதன்றே.* ௩

(பா - ம்.) *மெய்தற் கரிதன்றே.

வேக மதநல் லியானை வெருவ வுரிபோர்த்துப்
பாக முமையோ டாகப் படிதம் பலபாட
நாக மரைமே லசைத்து நடமா டியநம்பன்
மேக முரிஞ்சும் பொழில்சூழ் மீயச் சூரானே. ச

விடையார் கொடியார் சடைமேல் விளங்கும் பிறைவேடம்
படையார் பூதஞ் சூழப் பாட லாடலார்
பெடையார் வரிவண் டணையும் பிணைசேர் கொன்றையார்
விடையார் நடையொன் றுடையார் மீயச் சூராரே. ரு

குளிருஞ் சடைகொண் முடிமேற் கோல மார்கொன்றை
ஒளிரும் பிறையொன் றுடையா னொருவன் கைகோடி
நளிரும் மணிசூழ் மாலை நட்ட நவினம்பன்
மிளிரும் மரவ முடையான் மீயச் சூரானே. சு

நீல வடிவர் மிடறு நெடியர் நிகரில்லார்
கோல வடிவு தமதாங் கொள்கை யறிவொண்ணார்
காலர் கழலர் கரியி னுரியர் மழுவாளர்
மேலர் மதியர் விதியர் மீயச் சூராரே. எ

புலியி னுரிதோ லாடை பூசும் பொடிநீற்றர்
ஒலிகொள் புனலோர் சடைமேற் கரந்தா ருமையஞ்ச
வலிய திரடோள் வன்க ணரக்கர் கோன்றன்னை
மெலிய வரைக்கீ ழடர்த்தார் மீயச் சூராரே. அ

காதின் மிளிருங் குழையர் கரிய கண்டத்தார்
போதி லவனு மாலுந் தொழப்பொங் கெரியானார்
கோதி வரிவண் டறைபூம் பொய்கைப் புனன்மூழ்கி
மேதி படியும் வயல்சூழ் மீயச் சூராரே. கூ

கண்டார் நாணும் படியார் கலிங்க முடைபட்டைக்
கொண்டார் சொல்லைக் குறுகா ருயர்ந்த கொள்கையார்
பெண்டான் பாக முடையார் பெரிய வரைவில்லா
விண்டார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. ம

வேட முடைய பெருமா னுறையு மீயச்சூர்
நாடும் புகழார் புகலி ஞானசம் பந்தன்
பாட லாய தமிழீ ரைந்து மொழிந்துள்கி
ஆடு மடியா ரகல்வா னுலக மடைவாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - முயற்சிநாதர்; இறைவி - சுந்தரநாயகி.



## திருவரிசிற்கரைப்புத்தூர் பதிகம் ககஉ

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மின்னுஞ் சடைமேல் இளவெண் டிங்கள் விளங்கவே
துன்னுங் கடனஞ் சிருடோய் கண்டர் தொன்மூதூர்
அன்னம் படியும் புனலா ரரிசி லலைகொண்டு
பொன்னும் மணியும் பொருதென் கரைமேற் புத்தூரே. க

மேவா வசுரர் மேவெயில் வேவ மலைவில்லால்
ஏவா ரெரிவெங் கணையா லெய்தா னெய்துமூர்
நாவா னுத னுமை மோதி நாடோறும்
பூவா னீராற் பூசுரர் போற்றும் புத்தூரே. உ

பல்லார் தலைசேர் மாலை சூடிப் பாம்புப்பூண்
டெல்லா விடமும் வெண்ணீ றணிந்தோ ரேறேறிக்
கல்லார் மங்கை பங்க ரேனுங் காணுங்கால்
பொல்லா ரல்ல ரழகிய புத்தூர்ப் புனிதரே. ங

வரியேர் வளையா ளரிவை யஞ்ச வருகின்ற
கரியே ருரிவை போர்த்த கடவுள் கருதுமூர்
அரியேர் கழனிப் பழனஞ் சூழ்ந்தங் கழகாய
பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே. ௪

என்போ டரவ மேனத் தெயிற்றோ டெழிலாமை
மின்போற் புரிநூல் விரவிப் பூண்ட மணிமார்பர்
அன்போ டுருகு மடியார்க் கன்ப ரமருமூர்
பொன்போ தலர்கோங் கோங்கு சோலைப் புத்தூரே. ௫

வள்ளி முலைதோய் குமரன் றாதை வான்றோயும்
வெள்ளி மலைபோல் விடையொன் றுடையான் மேவுமூர்
தெள்ளி வருநீ ரரிசிற் றென்பாற் சிறைவண்டும்
புள்ளு மலிபூம் பொய்கை சூழ்ந்த புத்தூரே. ௬

நிலந்த ணீரோ டனல்கால் விசும்பி னீர்மையான்
சிலந்தி செங்கட் சோழ னாகச் செய்தானூர்
அலந்த வடியா னற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே. ௭

இத்தே ரேக விம்மலை பேர்ப்ப னென்றேந்தும்
பத்தோர் வாயான் வரைக்கீ ழலறப் பாதந்தான்
வைத்தா ரருள்செய் வரதன் மருவு மூரான
புத்தூர் காணப் புகுவார் வினைகள் போகுமே. ௮

முள்ளார் கமலத் தயன்மான் முடியோ டடிதேட
ஒள்ளா ரெரியா யுணர்தற் கரியா னூர்போலும்
கள்ளார் நெய்தல் கழுநீ ராம்பல் கமலங்கள்
புள்ளார் பொய்கைப் பூப்பல தோன்றும் புத்தூரே. ௯

கையார் சோறு கவர்குண் டர்களுந் துவருண்ட
மெய்யார் போர்வை மண்டையர் சொல்லு மெய்யல்ல
பொய்யா மொழியா லந்தணர் போற்றும் புத்தூரில்
ஐயா வென்பார்க் கையுற வின்றி யழகாமே. ௰

நறவங் கமழ்பூங் காழி ஞான சம்பந்தன்
பொறிகொ ளரவம் பூண்டா னாண்ட புத்தூர்மேல்
செறிவண் டமிழ்செய் மாலை செப்ப வல்லார்கள்
அறவன் கழல்சேர்ந் தன்பா டின்ப மடைவாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - படிக்காசுவைத்தபரமர் ; இறைவி - அழகம்மை.



## திருமுதுகுன்றம் பதிகம் உா

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

தேவா சிறியோம் பிழையைப் பொறுப்பாய் பெரியோனே
ஆவா வென்றங் கடியார் தங்கட் கருள்செய்வாய்
ஓவா வுவரி கொள்ள வுயர்ந்தா யென்றேத்தி
மூவா முனிவர் வணங்குங் கோயின் முதுகுன்றே. க

எந்தை யிவனென் றிரவி முதலா விறைஞ்சுவார்
சிந்தை யுள்ளே கோயி லாகத் திகழ்வானை
மந்தி யேறி யினமா மலர்கள் பலகொண்டு
முந்தித் தொழுது வணங்குங் கோயின் முதுகுன்றே. உ

நீடு மலரும் புனலுங் கொண்டு நிரந்தரம்
தேடு மடியார் சிந்தை யுள்ளே திகழ்வானைப்
பாடுங் குயிலி னயலே கிள்ளை பயின்றேத்த
மூடுஞ் சோலை முகிறோய் கோயின் முதுகுன்றே. ௩

தெரிந்த வடியார் சிவனே யென்று திசைதோறும்
குருந்த மலருங் குரவி னலருங் கொண்டேந்தி
இருந்து நின்று மிரவும் பகலு மேத்துஞ்சீர்
முரிந்து மேகந் தவழுஞ் சோலை முதுகுன்றே. ௪

வைத்த நிதியே மணியே யென்று வருந்தித்தம்
சித்த நைந்து சிவனே யென்பார் சிந்தையார்
கொத்தார் சந்துங் குரவும் வாரிக் கொணர்ந்துந்தும்
முத்தா றுடைய முதல்வர் கோயின் முதுகுன்றே. ௫

வம்பார் கொன்றை வன்னி மத்த மலர்தூவி
நம்பா வென்ன நல்கும் பெருமா னுறைகோயில்
கொம்பார் குரவு கொகுடி முல்லை குவிந்தெங்கும்
மொய்ம்பார் சோலை வண்டு பாடு முதுகுன்றே. ௬

* * * * * ௭

வாசங் கமழும் பொழில்சூ ழிலங்கை வாழ்வேந்தை
நாசஞ் செய்த நங்கள் பெருமா னமர்கோயில்
பூசை செய்த வடியார் நின்று புகழ்ந்தேத்த
மூசி வண்டு பாடுஞ் சோலை முதுகுன்றே. ௮

அல்லி மலர்மே லயனு மரவி னணையானும்
சொல்லிப் பரவித் தொடர வொண்ணாச் சோதியூர்
கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட
முல்லை யயலே முறுவல் செய்யு முதுகுன்றே. ௯

கருகு முடலார் கஞ்சி யுண்டு கடுவேதின்
றுருகு சிந்தை யில்லார்க் கயலா னுறைகோயில்
திருகல் வேய்கள் சிறிதே வளையச் சிறுமந்தி
முருகின் பணைமே லிருந்து நடஞ்செய் முதுகுன்றே. ௰

அறையார் கடல்சூ ழந்தண் காழிச் சம்பந்தன்
முறையான் முனிவர் வணங்குங் கோயின் முதுகுன்றைக்
குறையாப் பனுவல் கூடிப் பாட வல்லார்கள்
பிறையார் சடையெம் பெருமான் கழல்கள் பிரியாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருப்பிரமபுரம் பதிகம் உ௱க

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கறையணி வேலிலர் போலுங் கபாலந் தரித்திலர் போலும்
மறையு நவின்றிலர் போலு மாசுண மார்த்திலர் போலும்
பறையுங் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. க

கூரம் பதுவிலர் போலுங் கொக்கி னிறகிலர் போலும்
ஆரமும் பூண்டிலர் போலு மாமை யணிந்திலர் போலுந்
தாருஞ் சடைக்கிலர் போலுஞ் சண்டிக் கருளிலர் போலும்
பேரும் பலவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. உ

சித்த வடிவிலர் போலுந் தேசந் திரிந்திலர் போலுங்
கத்தி வருங்கடுங் காளி கதங்க டவிர்த்திலர் போலும்
மெய்த்த நயன மிடந்தார்க் காழி யளித்திலர் போலும்
பித்த வடிவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. ௩

நச்சர வாட்டிலர் போலு நஞ்ச மிடற்றிலர் போலுங்
கச்சுத் தரித்திலர் போலுங் கங்கை தரித்திலர் போலும்
மொய்ச்சவன் பேயிலர் போலு முப்புர மெய்திலர் போலும்
பிச்சை யிரந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. ச

தோடு செவிக்கிலர் போலுஞ் சூலம் பிடித்திலர் போலும்
ஆடு தடக்கை வலிய வானை யுரித்திலர் போலும்
ஓடு கரத்திலர் போலு மொள்ளழல் கையிலர் போலும்
பீடு மிகுத்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. ரு

விண்ணவர் கண்டிலர் போலும் வேள்வி யழித்திலர் போலும்
அண்ண லயன்றலை வீழ வன்று மறுத்திலர் போலும்
வண்ண வெலும்பினொ டக்கு வடங்க டரித்திலர் போலும்
பெண்ணின மொய்த்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. சா

பன்றியின் கொம்பிலர் போலும் பார்த்தற் கருளிலர் போலுங்
கன்றிய காலனை வீழக் கால்கொடு பாய்ந்திலர் போலுந்
துன்று பிணஞ்சுடு காட்டி லாடித் துதைந்திலர் போலும்
பின்றியும் பீடும் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. எ

பரசு தரித்திலர் போலும் படுதலை பூண்டிலர் போலும்
அரச னிலங்கையர் கோனை யன்று மடர்த்திலர் போலும்
புரைசெய் புனத்திள மானும் புலியி னதளிலர் போலும்
பிரச மலர்ப்பொழில் சூழ்ந்த பிரம புரமமர்ந் தாரே. அ

அடிமுடி மாலயன் றேட வன்று மளப்பிலர் போலுங்
கடிமல ரைங்கணை வேளைக் கனல விழித்திலர் போலும்
படிமலர்ப் பாலனுக் காகப் பாற்கட லீந்திலர் போலும்
பிடிநடை மாதர் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. கூ

வெற்றரைச் சீவரத் தார்க்கு வெளிப்பட நின்றிலர் போலும்
அற்றவ ரானிழ லல்வர்க் கறங்க ளுரைத்திலர் போலும்
உற்றல ரொன்றிலர் போலு மோடு முடிக்கிலர் போலும்
பெற்றமு மூர்ந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. ய

பெண்ணுரு வாணுரு வல்லாப் பிரம புரநகர் மேய
அண்ணல்செய் யாதன வெல்லா மறிந்து வகைவகை யாலே
நண்ணிய ஞானசம் பந்த னவின்றன பத்தும்வல் லார்கள்
விண்ணவ ரோடினி தாக வீற்றிருப் பாரவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்



## திருவாலவாய் பதிகம் உ௱உ

### திருநீற்றுப்பதிகம்

பண் -காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயான் றிருநீறே. க

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. உ

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. ௩

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. ௪

பூச வினியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச வினியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு வந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவால வாயான் றிருநீறே. ௫

அருத்தம தாவது நீறு வவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. ௬

எயிலது வட்டது நீறு விருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் றிருநீறே. ௭

இராவணன் மேலது நீறு வெண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி யால வாயான் றிருநீறே. ௮

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்க டங்கண் மெய்யது வெண்பொடி நீறு
ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட* மிடற்றெம் மால வாயான் றிருநீறே. கூ

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடாக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத வினியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்து மால வாயான் றிருநீறே. ய

ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

பாண்டிநாட்டுத் தலைநகராகிய மதுரையிலே மங்கையர்க்கரசியார் குலச்சிறைநாயனார் என்னு மிவரது வேண்டுகோளுக் கியைந்து எழுந் தருளி யிருந்த ஆளுடைய பிள்ளையார், தம்மடியார் குழுவோடு வசிக் கும் திருமடத்தில் அருகர் அரசனாணையால் தீக்கொளுவினாராக, இஃது அமணர் செயலன்று அரசன் காரியம் என்றுன்னி அத்தீயை வெப்பு நோயாகப் பையச்சென்று பாண்டியனைப் பற்றுமாறு பணித்தருளினார். தமதரசன் அவ்வெப்பு நோயைச சகிக்கலாற்றாது பேரிடருழக்கும் செய லைக் கண்டு மானியாரும் மந்திரியாரும் அவ்வரசனது இயைபுகொண்டு ஆளுடைய பிள்ளையாரை அரசனிடத்துக் கருணைவைத்து அதனைத் தீர்க்குமாறு வேண்டிக்கொண்டபோது ஆளுடைய பிள்ளையார் திருக் கோயிலை யடைந்து இறைவனது அருளை நாடித்தேர்ந்து அரசிருக் கையை யடைந்து அவனது வேண்டுகோளின்படியும், சமணர்களோடு செய்த ஏற்பாட்டின்படியும், பாண்டியனது வலப்பால் வெப்பைத் திரு வாலவா யண்ணலாரது திருநீறே மந்திரமும் மருந்துமாகித் தீர்க்கு மென்று இத்திருப்பதிகம் பாடியருளினார்.

---

(பா - ம்.) *ஆலமு துண்ட.





பாண்டியனது வெப்புநோய் நீக்கியது

## திருப்பெரும்புலியூர் பதிகம் உ௱௩

### பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மண்ணுமோர் பாக முடையார் மாலுமோர் பாக முடையார்
விண்ணுமோர் பாக முடையார் வேத முடைய விமலர்
கண்ணுமோர் பாக முடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாக முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. க

துன்னு கடற்பவ ளஞ்சேர் தூயன நீண்ட திண்டோள்கள்
மின்னு சுடர்க்கொடி போலு மேனியி னொளொரு கங்கைக்
கன்னி களின்புனை யோடு கலைமதி மாலை கலந்த
பின்னு சடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. உ

கள்ள மதித்த கபாலங் கைதனி லேமிக வேந்தித்
துள்ள மிதித்துநின் றாடுந் தொழில ரெழின்மிகு செல்வர்
வெள்ள நகுதலை மாலை விரிசடை மேன்மிளிர் கின்ற
பிள்ளை மதிப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. ௩

ஆட லிலைய முடையா ரருமறை தாங்கியா றங்கம்
பாட லிலைய முடையார் பன்மை யொருமைசெய் தஞ்சும்
ஊட லிலைய முடையார் யோகெனும் பேரொளி தாங்கிப்
பீட லிலைய முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. ௪

தோடுடை யார்குழைக் காதிற் சுடுபொடி யாரன லாடக்
காடுடை யாரெரி வீசுங் கையுடை யார்கடல் சூழ்ந்த
நாடுடை யார்பொரு ளின்ப நல்லவை நாளு நயந்த
பீடுடை யார்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. ௫

கற்ற துறப்பணி செய்து காண்டுமென் பாரவர் தங்கள்
முற்றி தறிதுமென் பார்கண் முதலியர் வேதபு ராணர்
மற்றி தறிதுமென் பார்கண் மனத்திடை யார்பணி செய்யப்
பெற்றி பெரிது முகப்பார் பெரும்புலி யூர்பிரி யாரே. ௬

ஒளிகொள்வாளெயிற் றரக்கனவ்வுயர்வரை
யெடுத்தலுமுமையஞ்சிச்
சுளியவூன்றலுஞ் சோர்ந்திடவாளொடு
நாளவற்கருள்செய்த
குளிர்கொள்பூம்பொழில் சூழ்தருகோட்டூர்நற்
கொழுந்தினைத்தொழுவார்கள்
தளிர்கொடாமரைப் பாதங்களருள்பெறுந்
தவமுடையவர்தாமே. அ

பாடியாடுமெய்ப் பத்தர்கட்கருள்செயு
முத்தினைப்பவளத்தைத்
தேடிமாலயன் காணவொண்ணாதவத்
திருவினைத்தெரிவைமார்
கூடியாடவர் கைதொழுகோட்டூர்நற்
கொழுந்தேயென்றெழுவார்கள்
நீடுசெல்வத்த ராகியிவ்வுலகினி
னிகழ்தருபுகழாரே. கூ

கோணல்வெண்பிறைச் சடையனைக்கோட்டூர்நற்
கொழுந்தினைச்செழுந்திரளைப்
பூணல்செய்தடி போற்றுமின்பொய்யிலா
மெய்யனல்லருளென்றும்
காணலொன்றிலாக் காரமண்டேரர்குண்
டாக்கர்சொற்கருதாதே
பேணல்செய்தரனைத்தொழுமடியவர்
பெருமையைப்பெறுவாரே. ய

பந்துலாவிரற் பவளவாய்த்தேன்மொழிப்
பாவையோடுருவாரும்
கொந்துலாமலர் விரிபொழிற்கோட்டூர்நற்
கொழுந்தினைச்செழும்பவளம்

வந்துலாவிய காழியுண்ஞானசம்
பந்தன்வாய்ந்துரைசெய்த
சந்துலாந்தமிழ் மாலைகள்வல்லவர்
தாங்குவர்புகழாலே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கொழுந்துநாதர்; இறைவி - மதுரவசனியம்மை.



## திருமாந்துறை                                                  பதிகம் ௨௪௫

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செம்பொனார்தரு வேங்கையுஞாழலுஞ் செருந்திசெண்பகமானைக்
கொம்புமாரமு மாதவிசுரபுனை குருந்தலர்பரந்துந்தி
அம்பொனேர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைகின்ற
எம்பிரானிமை யோர்தொழுபைங்கழ லேத்துதல்செய்வோமே. ௧

விளவுதேனொடு சாதியின்பலங்களும் வேய்மணிநிரந்துந்தி
அளவிநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைவானத்
தளவமான்மக னங்கணைக்காமனைச் சுடவிழித்தவனெற்றி
அளகவாணுத லரிவைதன்பங்கனை யன்றிமற்றறியோமே. ௨

கோடுதேன்சொரி குன்றிடைப்பூகமுங் கூந்தலின்குலைவாரி
ஓடுநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைநம்பன்
வாடினார்தலை யிற்பலிகொள்பவன் வானவர்மகிழ்ந்தேத்துங்
கேடிலாமணி யைத்தொழலல்லது கெழுமுதலறியோமே. ௩

இலவஞாழலு மீஞ்சொடுசுரபுன்னை யிளமருதிலவங்கம்
கலவிநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைகண்டன்
அலைகொள்வார்புன லம்புலிமத்தமு மாடரவுடன்வைத்த
மலையைவானவர் கொழுந்தினையல்லது வணங்குதலறியோமே. ௪

கோங்குசெண்பகங் குருந்தொடுபாதிரி குரவிடைமலருந்தி
ஓங்கிநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைவானைப்
பாங்கினாலிடுந் தூபமுந்தீபமும் பாட்டவிமலர்சேர்த்தித்
தாங்குவாரவர் நாமங்கணாவினிற் றலைப்படுந்தவத்தோரே. ௫

பெருகுசந்தனங் காரகில்பீலியும் பெருமரநிமிர்ந்துந்திப்
பொருதுகாவிரி வடகரைமாந்துறைப் புனிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந் திரவியுமதியமும் பார்மன்னர்பணிந்தேத்த
மருதவானவர் வழிபடுமலரடி வணங்குதல்செய்வோமே. ௬

நறவமல்லிகை முல்லையுமௌவலு நாண்மலரவைவாரி
இறவில்வந்தெறி காவிரிவடகரை மாந்துறையிறையன்றங்
கறவனாகிய கூற்றினைச்சாடிய வந்தணன்வரைவில்லால்
நிறையவாங்கி வலித்தெயிலெய்தவ னிரைகழல்பணிவோமே. ௭

மந்தமார்பொழின் மாங்கனிமாந்திட மந்திகண்மாணிக்கம்
உந்திநீர்வரு காவிரிவடகரை மாந்துறையுறைவானை
நிந்தியாவெடுத் தார்த்தவல்லரக்கனை நெரித்திடுவிரலானைச்
சிந்தியாமனத் தாரவர்சேர்வது தீநெறியதுதானே. ௮

நீலமாமணி நித்திலத்தொத்தொடு நிரைமலர்நிரந்துந்தி
ஆலியாவரு காவிரிவடகரை மாந்துறையமர்வானை
மாலுநான்முகன் றேடியுங்காண்கிலா மலரடியிணைநாளும்
கோலமேத்திநின் றாடுமின்பாடுமின் கூற்றுவனலியானே. ௯

நின்றுணுஞ்சமண் டேரருநிலையிலர் நெடுங்கழைநறவேலம்
நன்றுமாங்கனி கதலியின்பலங்களு நாணலினுரைவாரி
ஒன்றிநேர்வரு காவிரிவடகரை மாந்துறையொருகாலம்
அன்றியுள்ளழிந் தெழும்பரிசழகிது வதுவவர்க்கிடமாமே. ௰

வரைவளங்கவர் காவிரிவடகரை மாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதி யுடையவன்கவுணியன் செழுமறைநிறைநாவன்
அரவெனும்பணி வல்லவன்ஞானசம் பந்தனன்புறுமாலை
பரவிடுந்தொழில் வல்லவரல்லலும் பாவமுமிலர்தாமே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - ஆம்பிரவனநாதர்; இறைவி - அழகம்மை.

---

**பதிக வரலாறு:**

திருவன்பி லாலந்துறையை வணங்கித் திருமாந்துறைக்கு எழுந் தருளிய பிள்ளையார் திருக்கோயிலை யடைந்து இறைவனை வணங்கி யிப் பதிகமெடுத்து அதன் ஆறுந் திருப்பாட்டில் அங்கு சூரியனும் சந்திரனும் மருத்துக்களும் வழிபட்ட செய்தியைச் சிறப்பித்தருளினார்.



## திருவாய்மூர் பதிகம் உ௬எ

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

தளிரிளவளரென வுமைபாடத்
 தாளம்மிடவோர் கழல்வீசிக்
கிளரிளமணியர வரையார்த்
 தாடும்வேடக் கிறிமையார்
விளரிளமுலையவர்க் கருணல்கி
 வெண்ணீறணிந்தோர் சென்னியின்மேல்
வளரிளமதியமொ டிவராணீர்
 வாய்மூரடிகள் வருவாரே. க

வெந்தழல்வடிவினர் பொடிப்பூசி
 விரிதருகோவண வுடைமேலோர்
பந்தஞ்செய்தரவசைத் தொலிபாடிப்
 பலபலகடைதொறும் பலிதேர்வார்

சிந்தனைபுகுந்தெனக் கருணல்கிச்
செஞ்சுடர்வண்ணர்தம் மடிபரவ
வந்தனை பலசெய விவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே.

பண்ணிற்பொலிந்த வீணையர்
பதினெண்கணமு முணராநஞ்
சுண்ணப்பொலிந்த மிடற்றினு
ருள்ளமுருகி னுடனாவார்
சுண்ணப்பொடிநீ றணிமார்பர்
சுடர்பொற்சடைமேற் றிகழ்கின்ற
வண்ணப்பிறையோ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே.

எரிகிளர்மதியமொ டெழினுதன்மே
லெறிபொறியரவினொ டாறுமூழ்க
விரிகிளர்சடையினர் விடையேறி
வெருவவந்திடர்செய்த விகிர்தனார்
புரிகிளர்பொடியணி திருவகலம்
பொன்செய்தவாய்மையர் பொன்மிளிரும்
வரியரவரைக்கசைத் திவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே.

அஞ்சனமணிவண மெழினிறமா
வகமிடறணிகொள வுடறிமில
நஞ்சினையமரர்க ளமுதமென
நண்ணியநறுநுத லுமைநடுங்க
வெஞ்சினமால்களி யானையின்றோல்
வெருவுறப்போர்த்தத னிறமுமஃதே
வஞ்சனைவடிவினொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. ௫

அல்லியமலர்புல்கு விரிகுழலார்
கழலிணையடிநிழ லவைபரவ
வெல்லியம்போதுகொண் டெரியேந்தி
யெழிலொடுதொழிலவை யிசையவல்லார்.

சொல்லியவருமறை யிசைபாடிச்
சூடிளமதியினர் தோடுபெய்து
வல்லியந்தோ லுடுத் திவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. ௬

கடிபடுகொன்றைநன் மலர்திகழுங்
கண்ணியர்விண்ணவர் கனமணிசேர்
முடிபில்குமிறையவர் மறுகினல்லார்
முறைமுறைபலிபெய முறுவல்செய்வார்
பொடியணிவடிவொடு திருவகலம்
பொன்னெனமிளிர்வதொ ரரவினொடும்
வடிநுனைமழுவினொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. ௭

கட்டிணைபுதுமலர்க் கமழ்கொன்றைக்
கண்ணியர்வீணையர் தாமுமஃதே
எட்டுணைசாந்தமொ டுமைதுணையா
விறைவனுறைவதொ ரிடம்வினவில்
பட்டிணையகலல்குல் விரிகுழலார்
பாவையர்பலியெதிர் கொணர்ந்துபெய்ய
வட்டணையாடலொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. ௮

ஏனமருப்பினொ டெழிலாமை
யிசையப்பூண்டோ ரேறேறிக்
கானமதிடமா வுறைகின்ற
கள்வர்கனவிற் றுயர்செய்து
தேனுணமலர்க ளுந்திவிம்மித்
திகழ்பொற்சடைமேற் றிகழ்கின்ற
வானநன்மதியினொ டிவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. ௯

சூடல்வெண்பிறையினர் சுடர்முடியர்
சுண்ணவெண்ணீற்றினர் சுடர்மழுவர்
பாடல்வண்டிசைமுரல் கொன்றையந்தார்
பாம்பொடுநூலவை பசைந்திலங்கக்

கோடனன்முகிழ்விரல் கூப்பிநல்லார்
குறையுறுபலியெதிர் கொணர்ந்துபெய்ய
வாடல்வெண்டலைபிடித் திவராணீர்
வாய்மூரடிகள் வருவாரே. ம

திங்களொடருவரைப் பொழிற்சோலைத்
தேனலங்கானலந் திருவாய்மூர்
அங்கமொடருமறை யொலிபாட
லழனிறவண்ணர்தம் மடிபரவி
நங்கடம்வினைகெட மொழியவல்ல
ஞானசம்பந்தன் றமிழ்மாலை
தங்கியமனத்தினாற் றொழுதெழுவார்
தமர்நெறியுலகுக்கோர் தவநெறியே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வாய்மூர்நாதர்; இறைவி - பாலினுநன்மொழியம்மை.

---

**பதிக வரலாறு:**

திருமறைக்காட்டிலே ஆளுடையவரசும், ஆளுடைய பிள்ளையாரும் வேதங்கள் பூசித்தடைத்த திருக்கதவினைத் திறந்து மடைத்தும் இறைவனை வணங்கி யிருக்கும்போது வாக்கின்றனிமன்னர் தாம் திருக்கதவினை அரிதுவேண்டித் திறந்ததையும் பிள்ளையா ரெளிதில் அடைத்ததையுமெண்ணி வருந்தியிருந்தார். அப்போது திருமறைக்காட டீசரோர் சைவவேடத்தோடு அவர்முன் தோன்றி 'வாய்மூரி லிருப்போம் வா' என்றருளிப்போயினர். வாகீசரும் அவரைத் தரிசித்துக் கொண்டே பின்னேயெழுந்தருளிச் சென்றும் அவரைச் சமீபித்திலராகியே சென்றுகொண்டிருந்தார். அப்பமூர்த்திகள் திருவாய்மூருக் கெழுந்தருளுதலைக் கேள்வியுற்றுப் பிள்ளையார் இப்போதங்கே போதற்கென்ன அடைவு என ஐயுற்றுத் தாமும் பின்னே எழுந்தருளி வந்து திருவாய்மூரைச் சமீபித்தபோது இறைவன் இறைவியோடு தம்மாடலை அவருக்குக் காட்டியருளினர். அதனை இரண்டு நாயன்மார்களும் கண்டு வணங்கித் திருக்கோயிலையடைந்து வழிபட்டார்கள். இறைவன் தனது திருவோலக்கத்தைக் காட்டி யருளியபோது பிள்ளையார் 'தளிரிளவளர்' என இத் திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

## திருவாடானை பதிகம் உசஅ

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

மாதோர்கூறுகந் தேறதேறிய
ஆதியானுறை யாடானை
போதினாற்புனைந் தேத்துவார்தமை
வாதியாவினை மாயுமே. க

வாடல்வெண்டலை யங்கையேந்திநின்
றாடலானுறை யாடானை
தோடுலாமலர் தூவிக்கைதொழ
வீடுநுங்கள் வினைகளே. உ

மங்கைகூறினன் மான்மறியுடை
அங்கையானுறை யாடானை
தங்கையாற்றொழு தேத்தவல்லவர்
மங்குநோய்பிணி மாயுமே. ங

சுண்ணநீறணி மார்பிற்றோல்புனை
அண்ணலானுறை யாடானை
வண்ணமாமலர் தூவிக்கைதொழ
எண்ணுவாரிட ரேகுமே. ச

கொய்யணிம்மலர்க் கொன்றைசூடிய
ஐயன்மேவிய வாடானை
கையணிம்மல ரால்வணங்கிட
வெய்யவல்வினை வீடுமே. ரு

வானிளம்மதி மல்குவார்சடை
ஆனஞ்சாடல னாடானை
தேனணிம்மலர் சேர்த்தமுன்செய்த
ஊனமுள்ள வொழியுமே. சா

துலங்குவெண்மழு வேந்திச்சூழ்சடை
அலங்கலானுறை யாடானை
நலங்கொண்மாமலர் தூவிநாடொறும்
வலங்கொள்வார்வினை மாயுமே. எ

வெந்தநீறணி மார்பிற்றோல்புனை
அந்தமில்லவ னாடானை
கந்தமாமலர் தூவிக்கைதொழும்
சிந்தையார்வினை தேயுமே. அ

மறைவலாரொடு வானவர்தொழு
தறையுந்தண்புன லாடானை
உறையுமீசனை யேத்தத்தீவினை
பறையுநல்வினை பற்றுமே. கூ

மாயனும்மல ரானுங்கைதொழ
ஆயவந்தண னாடானை
தூயமாமலர் தூவிக்கைதொழத்
தீயவல்வினை தீருமே. ௰

வீடினார்மலி வெங்கடத்துநின்
றாடலானுறை யாடானை
நாடிஞானசம் பந்தன்செந்தமிழ்
பாடநோய்பிணி பாறுமே. கக

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - ஆதிரத்தினேச்சுவரர்; இறைவி - அம்பாயிரவல்லி.



சீகாழி பதிகம் உசக

## பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

பொடியிலங்குந் திருமேனி யாளர் புலியதளினர்
அடியிலங்குங் கழலார்க்க வாடும் மடிகளிடம்
இடியிலங்குங் குரலோத மல்கவ் வெறிவார்திரைக்
கடியிலங்கும் புனல்முத் தலைக்குங்கடற் காழியே. க

மயலிலங்குந் துயர்மா சறுப்பானருந் தொண்டர்கள்
அயலிலங்கப் பணிசெய்ய நின்றவ் வடிகளிடம்
புயலிலங்குங் கொடையாளர் வேதத்தொலி பொலியவே
கயலிலங்கும் வயற்கழனி சூழுங்கடற் காழியே. உ

கூர்விலங்குந் திரிசூல வேலர்குழைக் காதினர்
மார்விலங்கும் புரிநூலு கந்தம்மண வாளனூர்
நேர்விலங்கல் லனதிரை கண்மோதந் நெடுந்தாரைவாய்க்
கார்விலங்கல் லெனக்கலந் தொழுகுங்கடற் காழியே. ௩

குற்றமில்லார் குறைபாடு செய்வார் பழிதீர்ப்பவர்
பெற்றநல்ல கொடிமுன் னுயர்த்த பெருமானிடம்
மற்றுநல்லார் மனத்தா லினியார் மறைகலையெலாங்
கற்றுநல்லார் பிழைதெரிந் தளிக்குங்கடற் காழியே. ௪

விருதிலங்குஞ் சரிதைத் தொழிலார் விரிசடையினார்
எருதிலங்கப் பொலிந்தேறு மெந்தைக் கிடமாவது
பெரிதிலங்கும் மறைகிளைஞ ரோதப் பிழைகேட்டலாற்
கருதுகிள்ளைக் குலந்தெரிந்து தீர்க்குங்கடற் காழியே. ௫

தோடிலங்குங் குழைக்காதர் வேதர்சுரும் பார்மலர்ப்
பீடிலங்குஞ் சடைப்பெருமை யாளர்க் கிடமாவது
கோடிலங்கும் பெரும்பொழில் கண்மல்கப் பெருஞ்செந்நெலின்
காடிலங்கும் வயல்பயி லுமந்தண்கடற் காழியே. ௬

மலையிலங்குஞ் சிலையாக வேகம்மதின் மூன்றெரித்
தலையிலங்கும் புனற்கங்கை வைத்தவ்வடி கட்கிடம்
இலையிலங்கும் மலர்க்கைதை கண்டல்வெறி விரவலாற்
கலையிலங்குங் கணத்தினம் பொலியுங்கடற் காழியே. ௭

முழுதிலங்கும் பெரும்பாருள் வாழும்முர ணிலங்கைக்கோன்
அழுதிரங்கச் சிரமுர மொடுங்கவ் வடர்த்தாங்கவன்
றொழுதிரங்கத் துயர்தீர்த் துகந்தார்க் கிடமாவது
கழுதும்புள்ளு மதிற்புறம தாருங்கடற் காழியே. ௮

பூவினானும் விரிபோதின் மல்குந்திரு மகனை
மேவினானும் வியந்தேத்த நீண்டா ரழலாய்நிறைந்
தோவியங்கே யவர்க்கருள் புரிந்தவ் வொருவர்க்கிடங்
காவியங்கண் மடமங்கையர் சேர்கடற் காழியே. ௯

உடைநவின் றாருடைவிட் டுழல்வா ரிருந்தவத்தார்
முடைநவின் றம்மொழி யொழித்துகந்தம் முதல்வன்னிடம்
மடைநவின்ற புனற்கெண்டை பாயும்வயல் மலிதரக்
கடைநவின்றந் நெடுமாட மோங்குங்கடற் காழியே. ௰

கருகமுந்நீர் திரையோத மாருங்கடற் காழியுள்
உரகமாருஞ் சடையடி கடம்பா லுணர்ந்துறுதலாற்
பெருகமல்கும் புகழ்பேணுந் தொண்டர்க்கிசை யார்தமிழ்
விரகன்சொன்ன விவைபாடி யாடக்கெடும் வினைகளே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கேதாரம் — பதிகம் உ௱௪௭

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யு மிடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. ௧

பாதம்விண்ணோர் பலரும் பரவிப் பணிந்தேத்தவே
வேதநான்கும் பதினெட்டொ டாறும் விரித்தார்க்கிடம்
தாதுவிண்ட மதுவுண்டு மிண்டிவரு வண்டினம்
கீதம்பாட மடமந்தி கேட்டுகளுங் கேதாரமே. உ

முந்திவந்து புரோதாய மூழ்கி முனிகள்பலர்
எந்தைபெம்மா னெனநின்றி றைஞ்சும் மிடமென்பரால்
மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்கபூக்
கெந்தநாறக் கிளருஞ் சடையெந்தை கேதாரமே. ௩

உள்ளமிக்கார் குதிரைம் முகத்தா ரொருகாலர்கள்
எள்கலில்லா விமையோர்கள் சேரும் மிடமென்பரால்
பிள்ளைதுள்ளிக் கிளைபயில்வ கேட்டுப் பிரியாதுபோய்க்
கிள்ளையேனற் கதிர்கொணர்ந்து வாய்ப்பெய்யுங் கேதாரமே. ௪

ஊழியூழி யுணர்வார்கள் வேதத்தினொண் பொருள்களால்
வாழியெந்தை யெனவந்தி றைஞ்சும் மிடமென்பரால்
மேழிதாங்கி யுழுவார்கள் போலவ்விரை தேரிய
கேழல்பூழ்தி கிளைக்க மணிசிந்துங் கேதாரமே. ௫

நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கி நீள்வரைதன்மேல்
தேறுசிந்தை யுடையார்கள் சேரும் மிடமென்பரால்
ஏறிமாவின் கனியும்பல வின்னிருஞ் சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையொ டுண்டுகளுங் கேதாரமே. ௬

மடந்தைபாகத் தடக்கிம் மறையோதி வானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல் வினைதீர்க்க நின்றார்க் கிடமென்பரால்
உடைந்தகாற்றுக் குயர்வேங்கை பூத்துதிரக்கல் லறைகண்மேல்
கிடந்தவேங்கை சினமாமுகஞ் செய்யுங் கேதாரமே. ௭

அரவமுந்நீ ரணியிலங்கைக் கோனையரு வரைதனால்
வெருவவூன்றி விரலா லடர்த்தார்க் கிடமென்பரால்
குரவங்கோங்கங் குளிர்பிண்டி ஞாழல்சுர புன்னைமேல்
கிரமமாக வரிவண்டு பண்செய்யுங் கேதாரமே. ௮

ஆழ்ந்துகாணா ருயர்ந்தெய்த கில்லா ரலமந்தவர்
தாழ்ந்துதந்தம் முடிசாய நின்றார்க் கிடமென்பரால்
வீழ்ந்துசெற்று நிழற்கிறங்கும் வேழத்தின்வெண் மருப்பினைக்
கீழ்ந்துசிங்கங் குருகுண்ண முத்துதிருங் கேதாரமே. கூ

கடுக்கடின்று கழிமீன் கவர்வார்கண் மாசுடம்பினர்
இடுக்கணுய்ப்பா ரவரெய்த வொண்ணா விடமென்பரால்
அடுக்கநின்றவ் வறவுரைகள் கேட்டாங் கவர்வினைகளைக்
கெடுக்கநின்ற பெருமா னுறைகின்ற கேதாரமே. ௰

வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்கும்வயற் காழியான்
ஏய்ந்தநீர்க்கோட் டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன வருந்தமிழ்கள் பத்தும்மிசை வல்லவர்
வேந்தராகி யுலகாண்டு வீடுகதி பெறுவரே. கக

திருச்சிற்றம்பலம்

இது வடநாட்டிலுள்ளது.

இறைவன் - கேதாரேச்சுவரர்; இறைவி - கேதாரகௌரியம்மை.



## திருப்புகலூர் பதிகம் உருக

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

வெங்கள்விம்மு குழலிளைய ராடவ்வெறி விரவுநீர்ப்
பொங்குசெங்கட் கருங்கயல்கள் பாயும் புகலூர்தனுள்
திங்கள்சூடித் திரிபுர மொரம்பா லெரியூட்டிய
எங்கள்பெம்மா னடிபரவ நாளும்மிடர் கழியுமே. க

வாழ்ந்தநாளும் மினிவாழு நாளும்மிவை யறிதிரேல்
வீழ்ந்தநாளெம் பெருமானை யேத்தாவிதி யில்லீர்காள்
போழ்ந்ததிங்கட் புரிசடையி னன்றன் புகலூரையே
சூழ்ந்தவுள்ளம் முடையீர்க ளுங்கடுயர் தீருமே. உ

மடையினெய்தல் கருங்குவளை செய்யம் மலர்த்தாமரை
புடைகொள்செந்நெல் விளைகழனி மல்கும் புகலூர்தனுள்
தொடைகொள்கொன்றை புனைந்தானொர் பாகம் மதிசூடியை
அடையவல்லா ரமருலக மாளப் பெறுவார்களே. ௫

பூவுந்நீரும் பலியுஞ் சுமந்து புகலூரையே
நாவினாலே நவின்றேத்த லோவார்செவித் துளைகளால்
யாவுங்கேளா ரவன்பெருமை யல்லா லடியார்கடாம்
ஓவுநாளு முணர்வொழிந்த நாளென் றுள்ளங்கொள்ளவே. ௬

அன்னங்கன்னிப் பெடைபுல்கி யொல்கியணி நடையவாய்ப்
பொன்னங்காஞ்சி மலர்ச்சின்ன மாலும் புகலூர்தனுள்
முன்னம்மூன்று மதிலெரித்த மூர்த்திதிறங் கருதுங்கால்
இன்னரென்னப் பெரிதரிய ரேத்தச் சிறிதெளியரே. ௭

குலவராகக் குலமிலரு மாகக்குணம் புகழுங்கால்
உலகினல்ல கதிபெறுவ ரேனும்மல ரூறுதேன்
புலவமெல்லாம் வெறிகமழு மந்தண் புகலூர்தனுள்
நிலவமல்கு சடையடிகள் பாதந் நினைவார்களே. ௮

ஆணும்பெண்ணும் மெனநிற்ப ரேனும்மர வாரமாப்
பூணுமேனும் புகலூர்தனக் கொர்பொரு ளாயினான்
ஊணுமூரா ரிடுபிச்சை யேற்றுண்டுடை கோவணம்
பேணுமேனும் பிரானென்ப ராலெம் பெருமானையே. ௯

உய்யவேண்டி லெழுபோத நெஞ்சேயுய ரிலங்கைக்கோன்
கைகளொல்கக் கருவரை யெடுத்தானை யொர்விரலினால்
செய்கைதோன்றச் சிதைத்தருள வல்லசிவன் மேயபூம்
பொய்கைசூழ்ந்த புகலூர் புகழப் பொருளாகுமே. ௰

நேமியானு முகநான் குடையந்நெறி யண்ணலும்
ஆமிதென்று தகைந்தேத்தப் போயாரழ லாயினான்
சாமிதாதை சரணாகு மென்றுதலை சாய்மினோ
பூமியெல்லாம் புகழ்செல்வ மல்கும் புகலூரையே.. ௰௧

வேர்த்தமெய்ய ருருவத் துடைவிட் டுழல்வார்களும்
போர்த்தகூறைப் போதிநீழ லாரும் புகலூர்தனுள்
தீர்த்தமெல்லாஞ் சடைக்கரந்த தேவன்றிறங் கருதுங்கால்
ஓர்த்துமெய்யென் றுணராது பாதந் தொழுதுய்ம்மினே. ம

புந்தியார்ந்த பெரியோர்க ளேத்தும் புகலூர்தனுள்
வெந்தசாம்பற் பொடிப்பூச வல்லவிடை யூர்தியை
அந்தமில்லா வனலாட லானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாடி யாடக்கெடும் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்



## திருநாகைக்காரோணம் பதிகம் உருஉ

### பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

கூனற்றிங்கட் குறுங்கண்ணி கான்றநெடு வெண்ணிலா
ஏனற்பூத்தம் மராங்கோதை யோடும் விராவுஞ்சடை
வானநாடன் னமரர்பெரு மாற்கிட மாவது
கானல்வேலி கழிசூழ் கடனாகைக் காரோணமே. க

விலங்கலொன்று சிலையாமதின் மூன்றுடன் வீட்டினன்
இலங்குகண்டத் தெழிலாமை பூண்டாற் கிடமாவது
மலங்கியோங்கிவ் வருவெண்டிரை மல்கிய மால்கடல்
கலங்கலோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. உ

வெறிகொளாருங் கடற்கைதை நெய்தல்விரி பூம்பொழில்
முறிகொண்ஞாழன் முடப்புன்னை முல்லைம்முகை வெண்மலர்
நறைகொள்கொன்றைந் நயந்தோங்கு நாதற் கிடமாவது
கறைகொளோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. ந

வண்டுபாடவ் வளர்கொன்றை மாலைம்மதி யோடுடன்
கொண்டகோலங் குளிர்கங்கை தங்குங்குருள் குஞ்சியுள்
உண்டுபோலும் மெனவைத்து கந்தவ்வொரு வற்கிடம்
கண்டல்வேலி கழிசூழ் கடனாகைக் காரோணமே. ௪

வார்கொள்கோலம் முலைமங்கை நல்லார்மகிழ்ந் தேத்தவே
நீர்கொள்கோலச் சடைநெடு வெண்டிங்கண் ணிகழ்வெய்தவே
போர்கொள்சூலப் படைபுல்கு கையார்க் கிடமாவது
கார்கொளோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. ௫

விடையதேறிவ் விடவர வசைத்தவ் விகிர்தரவர்
படைகொள்பூதம் பலபாட வாடும்பர மாயவர்
உடைகொள்வேங்கை யுரிதோ லுடையார்க் கிடமாவது
கடைகொள்செல்வங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. ௬

பொய்துவாழ்வார் மனம்பாழ் படுக்கும் மலர்ப்பூசனை
செய்துவாழ்வார் சிவன்சேவடிக்கே செலுஞ் சிந்தையார்
எய்தவாழ்வா ரெழினக்க ரெம்மாற் கிடமாவது
கைதல்வேலி கழிசூழ் கடனாகைக் காரோணமே. ௭

பத்திரட்டி திரடோ ளுடையான் முடிபத்திற
அத்திரட்டி விரலா லடர்த்தார்க் கிடமாவது
மைத்திரட்டிவ் வருவெண்டிரை மல்கிய மாகடல்
கத்திரட்டுங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. ௮

நல்லபோதில் லுறைவானு மாலுந் நடுக்கத்தினால்
அல்லராவ ரெனநின்ற பெம்மாற் கிடமாவது
மல்லலோங்கிவ் வருவெண்டிரை மல்கிய மாகடல்
கல்லலோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே. ௯

உயர்ந்தபோதின் னுருவத் துடைவிட் டுழல்வார்களும்
பெயர்ந்தமண்டை யிடுபிண்ட மாவுண் டுழல்வார்களும்
நயந்துகாணா வகைநின்ற நாதர்க் கிடமாவது
கயங்கொளோதங் கழிசூழ் கடனாகைக் காரோணமே ௰

மல்குதண்பூம் புனல்வாய்ந் தொழுகும்வயற் காழியான்
நல்லகேள்வித் தமிழ்ஞான சம்பந்தனல்லார் கண்முன்
வல்லவாறே புனைந்தேத்துங் காரோணத்து வண்டமிழ்
சொல்லுவார்க்கும் மிவைகேட்ப வர்க்குந்துய ரில்லையே. கக

திருச்சிற்றம்பலம்



## திருவிரும்பைமாகாளம் பதிகம் உருரு

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

மண்டுகங்கை சடையிற் கரந்தும் மதிசூடிமான்
கொண்டகையாற் புரமூன் றெரித்த குழகன்னிடம்
எண்டிசையும் புகழ்போய் விளங்கும் மிரும்பைதனுள்
வண்டுகீதம் முரல்பொழில் சுலாய்நின்ற மாகாளமே. க

வேதவித்தாய் வெள்ளைநீறு பூசி வினையாயின
கோதுவித்தா நீறெழக் கொடிமா மதிலாயின
ஏதவித்தா யினதீர்க் குமிடம் மிரும்பைதனுள்
மாதவத்தோர் மறையோர் தொழநின்ற மாகாளமே. உ

வெந்தநீறும் மெலும்பும் மணிந்த விடையூர்தியான்
எந்தைபெம்மா னிடமெழில் கொள்சோலை யிரும்பைதனுள்
கந்தமாய பலவின் கனிகள் கமழும்பொழில்
மந்தியேறிக் கொணர்ந்துண் டுகள்கின்ற மாகாளமே. ௩

நஞ்சுகண்டத் தடக்கி நடுங்கும் மலையான்மகள்
அஞ்சவேழ முரித்த பெருமா னமரும்மிடம்
எஞ்சலில்லாப் புகழ்போய் விளங்கும் மிரும்பைதனுள்
மஞ்சிலோங்கும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. ச

பூசுமாசில் பொடியான் விடையான் பொருப்பான்மகள்
கூசவானை யுரித்தபெரு மான்குறை வெண்மதி
ஈசனெங்க ளிறைவன் னிடம்போ லிரும்பைதனுள்
மாசிலோர்கண் மலர்கொண் டணிகின்ற மாகாளமே. ரு

குறைவதாய குளிர்திங்கள் சூடிக் குனித்தான்வினை
பறைவதாக்கும் பரமன் பகவன் பரந்தசடை
இறைவனெங்கள் பெருமா னிடம்போ லிரும்பைதனுள்
மறைகள்வல்லார் வணங்கித் தொழுகின்ற மாகாளமே. ௬

பொங்குசெங்கண் ணரவும் மதியும் புரிபுன்சடைத்
தங்கவைத்த பெருமானென நின்றவர் தாழ்விடம்
எங்குமிச்சை யமர்ந்தா னிடம்போ லிரும்பைதனுள்
மங்குறோயும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. ௭

நட்டத்தோடு நரியாடு கானத்தெரி யாடுவான்
அட்டமூர்த்தி யழல்போ லுருவன் னழகாகவே
இட்டமாக விருக்கும் மிடம்போ லிரும்பைதனுள்
வட்டஞ்சூழ்ந்து பணிவார் பிணிதீர்க்கு மாகாளமே. ௮

அட்டகாலன் றனைவவ் வினனவ் வரக்கன்முடி
எட்டுமற்றும் மிருபத்திரண் டும்மிற வூன்றினன்
இட்டமாக விருப்பா னவன்போ லிரும்பைதனுள்
மட்டுவார்ந்த பொழில்சூழ்ந் தெழிலாரு மாகாளமே. ௯

அரவமார்த்தன் றனலங்கை யேந்தி யடியும்முடி
பிரமன்மாலும் மறியாமை நின்ற பெரியோனிடம்
குரவமாரும் பொழிற்குயில்கள் சேரும் மிரும்பைதனுள்
மருவிவானோர் மறையோர் தொழுகின்ற மாகாளமே. ௰

எந்தைபெம்மா னிடமெழில் கொள்சோலை யிரும்பைதனுள்
மந்தமாய பொழில்சூழ்ந் தழகாரு மாகாளத்தில்
அந்தமில்லா வனலாடு வானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாட வல்லார்பழி போகுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - மாகாளேச்சுவரர்; இறைவி - குயின்மொழிநாயகி.

## திருத்திலதைப்பதி

பதிகம் ௨௫௪

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

பொடிகள்பூசிப் பலதொண்டர் கூடிப் புலர்காலையே
அடிகளாரத் தொழுதேத்த நின்றவ் வழகன்னிடம்
கொடிகளோங்கிக் குலவும் விழவார் திலதைப்பதி
வடிகொள்சோலை மலர் மணங்கமழும் மதிமுத்தமே. ௧

தொண்டர்மிண்டிப் புகைவிம்மு சாந்துங்கமழ் துணையலும்
கொண்டுகண்டார் குறிப்புணர நின்ற குழகன்னிடம்
தெண்டிரைப்பூம் புனலரிசில் சூழ்ந்த திலதைப்பதி
வண்டுகெண்டுற் றிசைபயிலுஞ் சோலை மதிமுத்தமே. ௨

அடலுளேறுய்த் துகந்தா னடியா ரமரர்தொழக்
கடலுணஞ்ச மமுதாக வுண்ட கடவுள்ளிடம்
திடலடங்கச் செழுங்கழனி சூழ்ந்த திலதைப்பதி
மடலுள்வாழைக் கனிதேன் பிலிற்றும் மதிமுத்தமே. ௩

கங்கைதிங்கள் வன்னிதுன் னெருக்கின்னொடு கூவிளம்
வெங்கணாகம் விரிசடையில் வைத்த விகிர்தன்னிடம்
செங்கயல்பாய் புனலரிசில் சூழ்ந்த திலதைப்பதி
மங்குறோயும் பொழில்சூழ்ந் தழகார் மதிமுத்தமே. ௪

புரவியேழும் மணிபூண் டியங்குங்கொடித் தேரினான்
பரவிநின்று வழிபாடு செய்யும்பர மேட்டியூர்
விரவிஞாழல் விரிகோங்கு வேங்கைசுர புன்னைகள்
மரவமவ்வல் மலருந் திலதைம் மதிமுத்தமே. ௫

விண்ணர்வேதம் விரித்தோத வல்லா ரொருபாகமும்
பெண்ணரெண்ணா ரெயில் செற்றுகந்த பெருமானிடம்
தெண்ணிலாவின் னொளிதீண்டு சோலைத் திலதைப்பதி
மண்ணுளார்வந் தருள்பேண நின்றம் மதிமுத்தமே. ௬

ஆறுசூடி யடையார்புரஞ் செற்றவர் பொற்றொடி
கூறுசேரு முருவர்க் கிடமாவது கூறுங்கால்
தேறலாரும் பொழில் சூழ்ந்தழகார் தில்லைப்பதி
மாறிலாவண் புனலரிசில் சூழ்ந்தம் மதிமுத்தமே. ௭

கடுத்துவந்த கனன்மேனி யினான்கரு வரைதனை
எடுத்தவன்றன் முடிதோ ளடர்த்தார்க் கிடமாவது
புடைக்கொள்பூகத் திளம்பாளை புல்கும் மதுப்பாயவாய்
மடுத்துமந்தி யுகளுந் தில்லைதம் மதிமுத்தமே. ௮

படங்கொணாகத் தணையானும் பைந்தா மரையின்மிசை
இடங்கொணால்வே தனுமேத்த நின்ற விறைவன்னிடம்
திடங்கொணாவின் னிசைதொண்டர் பாடுந் தில்லைப்பதி
மடங்கல்வந்து வழிபாடு செய்யும் மதிமுத்தமே. ௯

புத்தர்தேரர் பொறியில் சமணர்களு வீறிலாப்
பித்தர்சொன்னம் மொழிகேட்கி லாத பெருமானிடம்
பத்தர்சித்தர் பணிவுற் றிறைஞ்சுந் தில்லைப்பதி
மத்தயானை வழிபாடு செய்யும் மதிமுத்தமே. ௰

மந்தமாரும் பொழில் சூழ்தில்லைதம் மதிமுத்தர்மேல்
கந்தமாருங் கடற்காழி யுள்ளான் றமிழ்ஞானசம்
பந்தன்மாலை பழிதீர நின்றேத்த வல்லார்கள்போய்ச்
சிந்தைசெய்வார் சிவன்சேவடி சேர்வது திண்ணமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மதிமுத்தேச்சுவரர்; இறைவி - பொற்கொடியம்மை.



## திருநாகேச்சரம் பதிகம் உருரு

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

தழைகொள்சந் தும்மகிலும் மயிற்பீலி யுஞ்சாதியின்
பழமுமுந்திப் புனல்பாய் பழங்காவிரித் தென்கரை
நழுவில்வானோர் தொழநல்கு சீர்மல்கு நாகேச்சரத்
தழகர்பாதந் தொழுதேத்த வல்லார்க் கழகாகுமே. க

பெண்ணோர்பாகம் மடையச் சடையிற் புனல்பேணிய
வண்ணமான பெருமான் மருவும்மிட மண்ணுளார்
நண்ணிநாளுந் தொழுதேத்தி நன்செய்து நாகேச்சரம்
கண்ணினாற் காணவல்லா ரவர்கண் ணுடையார்களே. உ

குறவர்கொல்லைப் புனங்கொள்ளை கொண்டும் மணிகுலவுநீர்
பறவையாலப் பரக்கும் பழங்காவிரித் தென்கரை
நறவநாறும் பொழில்சூழ்ந் தழகாய நாகேச்சரத்
திறைவர்பாதந் தொழுதேத்த வல்லார்க் கிடரில்லையே. ந

கூசநோக்காதுமுன் சொன்ன பொய்கொடு வினைகுற்றமும்
நாசமாக்கும் மனத்தார்கள் வந்தாடு நாகேச்சரம்
தேசமாக்குந் திருக்கோயி லாக்கொண்ட செல்வன்கழல்
நேசமாக்குந் திறத்தா ரறத்தார் நெறிப்பாலரே. ச

வம்புநாறும் மலரும்மலைப் பண்டமுங் கொண்டுநீர்
பைம்பொன்வாரிக் கொழிக்கும் பழங்காவிரித் தென்கரை
நம்பனூ மமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்
உம்பர்வானோர் தொழச் சென்றுடனாவது முண்மையே. ரு

காளமேகந் நிறக்கால னோடந்தகன் கருடனும்
நீளமாய்நின் றெய்தகாமனும் பட்டன நினைவுறின்
நாளுநாதன் னமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்
கோளுநாளுந் தீயவேனு நன்காங் குறிக்கொண்மினே. சு

வேயுதிர்முத் தொடுமெத்த யானை மருப்பும்விராய்ப்
பாய்புனல்வந் தலைக்கும் பழங்காவிரித் தென்கரை
நாயிறுந்திங் களுங்கூடி வந்தாடு நாகேச்சரம்
மேயவன்றன் னடிபோற்றி யென்பார் வினைவீடுமே. எ

இலங்கைவேந்தன் சிரம்பத்தி ரட்டியெழிற் றோள்களும்
மலங்கிவீழம் மலையா லடர்த்தா னிடமல்கிய
நலங்கொள்சிந்தை யவர்நாடொறு நண்ணு நாகேச்சரம்
வலங்கொள்சிந்தை யுடையா ரிடராயின மாயுமே. அ

கரியமாலும் மயனும் மடியும்முடி காண்பொணு
எரியதாகிந் நிமிர்ந்தா னமரும்மிட மீண்டுகா
விரியினீர்வந் தலைக்குங் கரைமேவு நாகேச்சரம்
பிரிவிலாதவ் வடியார்கள் வானிற் பிரியார்களே. கூ

தட்டிடுக்கி யுறிதூக்கி யகையினர் சாக்கியர்
கட்டுரைக்கும் மொழிகொள்ள லும்வெள்ளி லங்காட்டிடை
நட்டிருட்கண் ணடமாடிய நாத னுகேச்சரம்
மட்டிருக்கும் மலரிட் டடிவீழ்வது வாய்மையே. ய

கந்தநாறும் புனற்காவிரித் தென்கரைக் கண்ணுதல்
நந்திசேருந் திருநாகேச் சரத்தின் மேன்ஞானசம்
பந்தனுவிற் பனுவல் லிவைபத்தும் வல்லார்கள்போய்
எந்தையீசன் னிருக்கும் முலகெய்த வல்லார்களே. கக

திருச்சிற்றம்பலம்



## திருமூக்கீச்சரம் பதிகம் உடுக

பண் - சேவ்வழி

திருச்சிற்றம்பலம்

சாந்தம்வெண்ணீ றெனப்பூசி வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தளாரும் விரலேழை யொடாடிய காரணம்
ஆய்ந்துகொண்டாங் கறியந் நிறைந்தாரவ ரார்கொலோ
வேந்தன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் மெய்ம்மையே. க

வெண்டலையோர் கலனாப் பலிதேர்ந்து விரிசடைக்
கொண்டலாரும் புனல்சேர்த்து மையாளொடுங் கூட்டமா
விண்டவர்தம் மதிலெய்த பின்வேனில் வேள்வெந்தெழக்
கண்டவர்மூக் கீச்சரத்தெம் மடிகள் செய்கன்மமே. உ

மருவலார்தம் மதிலெய்த துவும்மான் மதலையை
உருவிலாரவ் வெரியூட்டி யதும்மூல குண்டதால்
செருவிலாரும் புலிசெங் கயலானை யினான்செய்த
பொருவின்மூக் கீச்சரத்தெம் மடிகள் செயும்பூசலே. ங

அன்னமன்னந் நடைச்சாய லாளோ டழகெய்தவே
மின்னையன்ன சடைக்கங்கை யாண்மேவிய காரணம்
தென்னன்கோழி யெழில்வஞ்சியு மோங்கு செங்கோலினான்
மன்னன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்மாயமே. ச

விடமுனாரவ் வழல்வாய தோர்பாம்பரை வீக்கியே
நடமுனாரவ் வழலாடுவர் பேயொடு நள்ளிருள்
வடமனீடு புகழ்ப்பூழி யன்றென்ன வன்கோழிமன்
அடன்மன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. ரு

வெந்தநீறு மெய்யிற் பூசுவராடுவர் வீங்கிருள்
வந்தெனாரவ் வளைகொள்வது மிங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன்னேரியன் செம்பிய னாக்கிய
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரேதமே. சா

அரையிலாருங் கலையில்ல வனாவொடு பெண்ணுமாய்
உரையிலாரவ் வழலாடு வரொன்றலர் காண்மினோ
விரவலார்தம் மதின்மூன் றுடன்வெவ்வழ லாக்கினான்
அரையன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. எ

ஈர்க்குநீர்செஞ் சடைக்கேற் றதுங்கூற்றை யுதைத்ததும்
கூர்க்குநன்மூ விலைவேல்வல னேந்திய கொள்கையும்
ஆர்க்கும்வாயா னரக்கன் னுரத்தைந் நெரித்தவ்வடல்
மூர்க்கன்மூக்கீச் சரத்தடிகள் செய்யாநின்ற மொய்ம்பதே. அ

நீருளாரும் மலர்மே லுறைவா னெடுமா லுமாய்ச்
சீருளாருங் கழறேட மெய்த்தீத் திரளாயினான்
சீரினாலங் கொளிர்தென்ன வன்செம்பி யன்வில்லவன்
சேருமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்செம்மையே. ௯

வெண்புலான்மார் பிடுதுகிலினர் வெற்றரை யுழல்பவர்
உண்பினாலே யுரைப்பார் மொழி யூனமதாக்கினான்
ஒண்புலால்வேன் மிகவல்லவ னோங்கெழிற் கிள்ளிசேர்
பண்பின்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்பச்சையே. ௰

மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச்சரத் தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய்வாழ் பவர்காழி யுண்ஞான சம்பந்தன
சொல்லவல்லா ரவர்வானுல காளவும் வல்லரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இறைவன் - பஞ்சவர்ணநாதர்; இறைவி - காந்திமதியம்மை.

இதுவே உறையூர் எனப்படும்.



## திருப்பாதிரிப்புலியூர் — பதிகம் உ௫௭

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

முன்னநின்ற முடக்கான் முயற்கருள் செய்துநீள்
புன்னைநின்று கமழ் பாதிரிப் புலியூருளான்
தன்னைநின்று வணங்குந் தனைத்தவ மில்லிகள்
பின்னைநின்ற பிணி யாக்கையைப் பெறுவார்களே. ௧

கொள்ளிநக்க பகுவாய பேய்கள் குழைந்தாடவே
முள்ளிலவம் முதுகாட் டுறையும் முதல்வன்னிடம்
புள்ளினங்கள் பயிலும் பாதிரிப் புலியூர்தனை
உள்ள நம்மேல் வினையாயின வொழியுங்களே. ௨

மருளினல்லார் வழிபாடு செய்யும் மழுவாளர்மேல்
பொருளினல்லார் பயில் பாதிரிப் புலியூருளான்
வெருளின்மானின் பிணை நோக்கல்செய்து வெறிசெய்தபின்
அருளியாகத் திடைவைத் ததுவும் மழகாகவே. ௩

போதினாலும் புகையாலு முய்த்தே யடியார்கடாம்
போதினாலே வழிபாடு செய்யப் புலியூர்தனுள்
ஆதிநாலு மவலம் மிலாதவடி கண்மறை
ஓதினாளும் மிடும்பிச்சை யேற்றுண் டுணப்பாலதே. ௪

ஆகநல்லா ரமுதாக்க வுண்டா னழலைந்தலை
நாகநல்லார் பரவந்நயந் தங்கரை யார்த்தவன்
போகநல்லார் பயிலும் பாதிரிப் புலியூர்தனுள்
பாகநல்லா ளொடுநின்ற வெம்பர மேட்டியே. ௫

மதியமொய்த்த கதிர்போ லொளிம்மணற் கானல்வாய்ப்
புதியமுத்தந் திகழ் பாதிரிப் புலியூரெனும்
பதியில்வைக்கப் படுமெந்தை தன்பழந் தொண்டர்கள்
குதியுங்கொள்வர் விதியுஞ் செய்வர் குழகாகவே. ௬

கொங்கரவப் படுவண் டறைகுளிர் கானல்வாய்ச்
சங்கரவப் பறையின் னொலியவை சார்ந்தெழப்
பொங்கரவம் முயர் பாதிரிப் புலியூர்தனுள்
அங்கரவம் மரையில் லசைத்தானை யடைமினே. ௭

வீக்கமெழும் மிலங்கைக் கிறை விலங்கல்லிடை
ஊக்கமொழிந் தலறவ் விரலாலிறை யூன்றினான்
பூக்கமழும் புனற் பாதிரிப் புலியூர்தனை
நோக்கமெலிந் தணுகா வினை நுணுகுங்களே. ௮

அன்னந்தாவும் மணியார் பொழின் மணியார்புன்னை
பொன்னந்தாது சொரி பாதிரிப் புலியூர்தனுள்
முன்னந்தாவி யடிமூன் றளந்தவன் னான்முகன்
தன்னந்தாளுற் றுணராத தோர் தவநீதியே. ௯

உரிந்தகூறை யுருவத் தொடுதெருவத் திடைத்
திரிந்துதின்னுஞ் சிறுநோன் பரும்பெருந் தேரரும்
எரிந்துசொன்னவ் வுரைகொள் ளாதேயெடுத் தேத்துமின்
புரிந்தவெண்ணீற் றண்ணல் பாதிரிப் புலியூரையே. ௰

அந்தணல்லா ரகன் காழியுண் ஞானசம்
பந்தனல்லார் பயில் பாதிரிப் புலியூர்தனுள்
சந்தமாலைத் தமிழ்பத்தி வைதரித் தார்கண்மேல்
வந்துதீயவ் வடையாமை யால்வினை மாயுமே. கக

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - தோன்றாத்துணைநாதர்; இறைவி - தோகைநாயகி.



## திருப்புகலி　　　　　　　　　　　　　　　　　　பதிகம் உ௱அ

பண் - செவ்வழி

திருச்சிற்றம்பலம்

விடையதேறி வெறியக் கரவார்த்த விமலனார்
படையதாகப் பரசு தரித்தார்க் கிடமாவது
கொடையிலோவார் குலமும் முயர்ந்தம் மறையோர்கடாம்
புடைகொள்வேள்விப் புகையும்ப ருலாவும் புகலியே. க

வேலைதன்னின் மிகுநஞ்சினை யுண்டிருள் கண்டனார்
ஞாலமெங்கும் பலிகொண் டுழல்வார் நகராவது
சாலநல்லார் பயிலும் மறைகேட்டுப் பதங்களைச்
சோலைமேவுங் கிளித்தான் சொற்பயிலும் புகலியே. உ

வண்டுவாழுங் குழன்மங்கை யோர்கூ றுகந்தார்மதித்
துண்டமேவுஞ் சுடர்த்தொல் சடையார்க் கிடமாவது
கெண்டைபாய மடுவில் லுயர்கேதகை மாதவி
புண்டரீகம் மலர்ப்பொய்கை நிலாவும் புகலியே. ௩

திரியுமூன்று புரமும் மெரித்துத் திகழ்வானவர்க்
கரியபெம்மா னரவக் குழையார்க் கிடமாவது
பெரியமாடத் துயருங் கொடியின் மிடைவால்வெயிற்
புரிவிலாத தடம்பூம் பொழில்சூழ் தண்புகலியே. ௪

ஏவிலாருஞ் சிலைப்பார்த் தனுக்கின் னருள்செய்தவர்
நாவினாண்மூக் கரிவித்த நம்பர்க் கிடமாவது
மாவிலாருங் கனிவார் கிடங்கில் விழவாளைபோய்ப்
பூவிலாரும் புனற்பொய்கை யில்வைகும் புகலியே. ௫

தக்கன்வேள்வி தகர்த்த தலைவன் றையலாளொடும்
ஒக்கவேயெம் முரவோ னுறையும் மிடமாவது
கொக்குவாழை பலவின் கொழுந்தண் கனிகொன்றைகள்
புக்கவாசப் புன்னை பொன்றிரள் காட்டும்புகலியே. ௬

*           *           *           *           *           ௭

தொலைவிலாத வரக்கன் னுரத்தைத் தொலைவித்தவன்
தலையுந்தோளு நெரித்த சதுரர்க் கிடமாவது
கலையின்மேவும் மனத்தோ ரிரப்போர்க் குக்கரப்பிலார்
பொலியுமந்தண் பொழில் சூழ்ந்தழ காரும்புகலியே. ௮

கீண்டுபுக்கார் பறந்தா ரயர்ந்தார் கேழலன்னமாய்க்
காண்டுமென்றார் கழல்பணிய நின்றார்க் கிடமாவது
நீண்டநாரை யிரையாரல் வாரநிறை செறுவினிற்
பூண்டுமிக்கவ் வயல்காட்டு மந்தண் புகலியதே. ௯

தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பா ரொடுசாக்கியர்
இடுக்கணுய்ப்பா ரிறைஞ்சாத வெம்மாற் கிடமாவது
மடுப்படுக்குஞ் சுருதிப் பொருள்வல் லவர்வானுளோர்
அடுத்தடுத்துப் புகுந்தீண்டு மந்தண் புகலியதே. ௰

எய்தவொண்ணா விறைவன் னுறைகின்ற புகலியைக்
கைதவமில்லாக் கவுணியன் ஞான சம்பந்தன்சீர்
செய்தபத்து மிவைசெப்ப வல்லார் சிவலோகத்தில்
எய்திநல்ல விமையோர்க ளேத்த விருப்பார்களே. ௧௧

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

திருஞான சம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

## மூன்றாந் திருமுறை

### கோயில்

பதிகம் ௨௫௯

பண் — காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஆடினாய்நறு நெய்யொடுபா றயி
ரந்தணர்பிரி யாதசிற்றம்பலம்
நாடினாயிட மா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயருளாய் சுருங்கவெம தொல்வினையே. ௧

கொட்டமேகம ழுங்குழலாளொடு
கூடினாயெரு தேறினாய்நுதற்
பட்டமேபுனை வாயிசைபாடுவ பாரிடமா
நட்டமேநவில்வாய் மறையோர்தில்லை
நல்லவர்பிரி யாதசிற்றம்பலம்
இட்டமாவுறைவா யிவைமேவிய தென்னைகொலோ. ௨

நீலத்தார்கரிய மிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடிநீறணி வார்சடையார்
சீலத்தார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழக்
கோலத்தாயரு ளாயுன காரணங்கூறுதுமே. ௩

கொம்பலைத்தழ கெய்தியநுண்ணிடைக்
கோலவாண்மதி போலமுகத்திரண்
டம்பலைத்தகண் ணாண் முலைமேவிய வார்சடையான்
கம்பலைத்தெழு காமுறுகாளையர்
காதலாற்கழற் சேவடிகைதொழ
அம்பலத்துறை வானடியார்க் கடையாவினையே. ௪

தொல்லையாரமு துண்ணநஞ்சுண்டதோர்
தூமணிமிட றாபகுவாயதோர்
பல்லையார்தலை யிற்பலியேற்றுழல் பண்டரங்கா
தில்லையார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழ
இல்லையாம்வினை தானெரியம்மதி லெய்தவனே. ௫

ஆகந்தோயணி கொன்றையாயன
லங்கையாயம ரர்க்கமராவுமை
பாகந்தோய்பகவா பலியேற்றுழல் பண்டரங்கா
மாகந்தோய்பொழின் மல்குசிற்றம்பல
மன்னினாய்மழு வாளினாயழல்
நாகந்தோயரையா யடியாரை நண்ணாவினையே. ௬

சாதியார்பளிங் கின்னொடுவெள்ளிய
சங்கவார்குழை யாய்திகழப்படும்
வேதியாவிகிர்தா விழவாரணி தில்லைதன்னுள்
ஆதியாய்க்கிட மாயசிற்றம்பல
மங்கையாற்றொழ வல்லடியார்களை
வாதியாதகலுந் நலியாமலி தீவினையே ௭

வேயினார்பணைத் தோளியொடாடலை
வேண்டினாய்விகிர் தாவுயிர்கட்கமு
தாயினாயிடு காட்டெரி யாடலமர்ந்தவனே
தீயினார்கணையாற் புரமூன்றெய்த
செம்மையாய்திகழ் கின்றசிற்றம்பலம்
மேயினாய்கழ லேதொழு தெய்துதுமேலுலகே. ௮

தாரினார்விரி கொன்றையாய்மதி
தாங்குநீள்சடை யாய்தலைவாநல்ல
தேரினார்மறுகிற் றிருவாரணி தில்லைதன்னுட்
சீரினால்வழிபா டொழியாததோர்
செம்மையாலழ காயசிற்றம்பலம்
ஏரினாலமர்ந்தா யுனசீரடி யேத்துதுமே. ௯

வெற்றரையுழல்வார் துவராடைய
வேடத்தாரவர்கள் ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின் னவலம்மவை மாற்றகில்லார்
கற்றவர்தொழு தேத்துசிற்றம்பலங்
காதலாற்கழற் சேவடிகைதொழ
உற்றவருலகின் னுறுதிகொள வல்லவரே. ௰

நாறுபூம்பொழி னண்ணியகாழியு
ணான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறுமின்றமிழா லுயர்ந்தாருறை தில்லைதன்னுள்
ஏறுதொல்புக ழேந்துசிற்றம்பலத்
தீசனையிசையாற் சொன்னபத்திவை
கூறுமாறுவல்லா ருயர்ந்தாரொடுங் கூடுவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

திருவளர் திருச்சிற்றம்பலம் தொழுது வணங்கிப் பாடிய பிள்ளையார் இரவிலே அத்தலத்தில் தங்கியிருத்தற்கஞ்சித் திருவேட்களத்தினெழுந்தருளி யிருந்து, அதனையும், திருநெல்வாயில் திருக்கழிப்பாலை

என்னுந் தலங்களையும் வழிபட்டு, திருவுடை யந்தணர் மூவாயிரவர் இறைவரது திருவடிக்கு மிகவணுக்கரா யிருக்கும் பேற்றினை யெண்ணி அதிசயித்து மீண்டும் எழுந்தருள்வாராயினர். அதனையறிந்த தில்லைவா ழந்தணரும் எதிரேவந்து அவர் வணங்குமுன் அவரைத் தாம் வணங்கி னர். இறைவனது திருவருளால் அவர் யாவரும் சிவகணநாதராய்த் தோன்றப் பிள்ளையார் அதனைக் கண்டு வணங்கி யதனைத் தம்முடன் வரும் திருப்பெரும்பாணருக்குங் காட்டியருளினர். பிறகு மன்றணி றைந்தாடும் மாணிக்கக் கூத்தரெதிர் சென்றணைந்து வணங்கிப் பாடுவார் 'ஆடினாய் நறுநெய்' என்றெடுத்து அதன் மூன்றாந் திருப்பாட்டில் "நீலத் தார் கரியமிடற்றார் நல்ல நெற்றிமேலுற்ற கண்ணினார் பற்றுசூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார் சீலத்தார்" என்று தாம் கண்டரு ளிய திருவடையாளங்களா லவரைச் சிறப்பித்து அவர் தொழுதேத்து சிற்றம்பலமென வைத்து வணங்கினர்.



## திருப்பூந்தராய் பதிகம் உசுரு

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பந்துசேர்விரலாள் பவளத்துவர்
 வாயினாள்பனி மாமதிபோன்முகத்
தந்தமில்புக ழாண்மலைமாதொடு மாதிப்பிரான்
வந்துசேர்விடம் வானவரெத்திசையுந்
 நிறைந்துவலஞ் செய்துமாமலர்
புந்திசெய் திறைஞ்சிப் பொழிபூந்தராய் போற்றுதுமே. க

காவியங்கருங் கண்ணினாள்கனித்
 தொண்டைவாய்க்கதிர் முத்தநல்வெண்ணகைத்
தூவியம்பெடை யன்னநடைச்சுரி மென்குழலாள்
தேவியுந்திரு மேனியோர்பாகமா
 யொன்றிரண்டொரு மூன்றொடுசேர்பதி
பூவிலந்தண னொப்பவர்பூந்தராய் போற்றுதுமே. உ

பையராவரு மல்குன்மெல்லியல்
　　பஞ்சின்னேரடி வஞ்சிகொணுண்ணிடைத்
தையலாளொரு பாலுடையெம்மிறை சாருமிடஞ்
செய்யெலாங்கழு நீர்கமலம்மலர்த்
　　தேறலூறலிற் சேறுலராதநற்
பொய்யிலாமறை யோர்பயில்பூந்தராய் போற்றுதுமே. ௩

முள்ளிநாண்முகை மொட்டியல்கோங்கி
　　னரும்புதேன்கொள் குரும்பைமூவாமருந்
துள்ளியன்றபைம்பொற் கலசத்திய லொத்தமுலை
வெள்ளிமால்வரை யன்னதோர்மேனியின்
　　மேவினார்பதி வீமருதண்பொழிற்
புள்ளினந்துயின் மல்கியபூந்தராய் போற்றுதுமே. ௪

பண்ணியன்றெழு மென்மொழியாள்பகர்
　　கோதையேர்திகழ் பைந்தளிர்மேனியோர்
பெண்ணியன்றமொய்ம்பிற் பெருமாற்கிடம் பெய்வளையார்
கண்ணியன்றெழு காவிச்செழுங்கரு
　　நீலமல்கிய காமருவாவிநற்
புண்ணியருறையும் பதிபூந்தராய் போற்றுதுமே. ௫

வாணிலாமதி போனுதலாண்மட
　　மாழையொண்கணாள் வண்டரளந்நகை
பாணிலாவிய வின்னிசையார்மொழிப் பாவையொடுஞ்
சேணிலாத்திகழ் செஞ்சடையெம்மண்ணல்
　　சேர்வதுசிகரப் பெருங்கோயில்சூழ்
போணிலாநுழையும் பொழிற்பூந்தராய் போற்றுதுமே. ௬

காருலாவிய வார்குழலாள்கயற்
　　கண்ணினாள்புயற் காலொளிமின்னிடை
வாருலாவிய மென்முலையாண்மலை மாதுடனாய்
நீருலாவிய சென்னியன்மன்னி
　　நிகருநாம முந்நான்குநிகழ்பதி;
போருலாவெயில் சூழ்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. ௭

காசைசேர்குழலாள் கயலேர்தடங்
கண்ணிகாம்பன தோட்கதிர்மென்முலைத்
தேசுசேர்மலை மாதமருந்திரு மார்பகலத்
தீசன்மேவு மிருங்கயிலையெடுத்தானை
யன்றடர்த்தா னிணைச்சேவடி
பூசைசெய்பவர் சேர்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. ௮

கொங்குசேர்குழ லாணிழல்வெண்ணகைக்
கொவ்வைவாய்க்கொடி யேரிடையாளுமை
பங்குசேர்திரு மார்புடையார்படர் தீயுருவாய்
மங்குல்வண்ணனு மாமலரோனு
மயங்கநீண்டவர் வான்மிசைவந்தெழு
பொங்குநீரின் மிதந்தநற்பூந்தராய் போற்றுதுமே. ௯

கலவமாமயி லாரியலாள்கரும்
பன்னமென்மொழி யாள்கதிர்வாணுதற்
குலவுபூங்குழ லாளுமைகூறனை வேறுரையால்
அலவைசொல்லுவார் தேரமணாதர்க
ளாக்கினன்றனை நண்ணலுநல்குநற்
புலவர்தாம்புகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமே. ௰

தேம்பனுண்ணிடை யாள்செழுஞ்சேலன
கண்ணியோடண்ணல் சேர்விடந்தேனமர்
பூம்பொழிறிகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமென்
றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை
ஞானசம்பந்த னொண்டமிழ்மாலைகொண்
டாம்படியிவை யேத்தவல்லார்க்கடை யாவினையே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருப்புகலி பதிகம் உசுக

நாலடிமேல்வைப்பு. பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இயலிசை யெனும்பொரு ளின்றிறமாம்
புயலன மிடறுடைப் புண்ணியனே
கயலன வரிநெடுங் கண்ணியொடும்
அயலுல கடிதொழ வமர்ந்தவனே
கலனாவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்
நிலனொடு மின்புற நிறைமதி யருளினனே. க

நிலையுறு மிடர்நிலை யாதவண்ணம்
இலையுறு மலர்கள்கொண் டேத்துதும்யாம்
மலையினி லரிவையை வெருவவன்றோல்
அலைவரு மதகரி யுரித்தவனே
இமையோர்களின் றொடொழு வெழிறிகழ் பொழிற்புகலி
உமையாளொடு மன்னினை யுயர்திரு வடியிணையே. உ

பாடினை யருமறை வரன்முறையால்
ஆடினை காணமுன் னருவனத்திற்
சாடினை காலனைத் தயங்கொளிசேர்
நீடுவெண் பிறைமுடி நின்மலனே
நினையேயடி யார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்
தனையேயிட மேவினை தவநெறி யருளெமக்கே. ங

நிழறிகழ் மழுவினை யானையின்றோல்
அழறிகழ் மேனியி லணிந்தவனே
கழறிகழ் சிலம்பொலி யலம்பநல்ல
முழவொடு மருநட முயற்றினனே
முடிமேன்மதி சூடினை முருகமர் பொழிற்புகலி
அடியாரவ ரேத்துற வழகொடு மிருந்தவனே. ச

கருமையி னொளிர்கட னஞ்சமுண்ட
உரிமையி னுலகுயி ரளித்தநின்றன்
பெருமையை நிலத்தவர் பேசினல்லால்
அருமையி லளப்பரி தாயவனே
அரவேரிடை யாளொடு மலைகடன் மலிபுகலிப்
பொருள்சேர்தர நாடொறும் புவிமிசைப் பொலிந்தவனே. ௫

அடையரி மாவொடு வேங்கையின்றோல்
புடைபட வரைமிசைப் புனைந்தவனே
படையுடை நெடுமதிற் பரிசழித்த
விடையுடைக் கொடிமல்கு வேதியனே
விகிர்தா பரமா நின்னை விண்ணவர் தொழப்புகலித்
தகுவாய்மட மாதொடுந் தாள்பணிந் தவர்தமக்கே. ௬

அடியவர் தொழுதெழ வமரரேத்தச்
செடியவல் வினைபல தீர்ப்பவனே
துடியிடை யகலல்குற் றூமொழியைப்
பொடியணி மார்புறப் புல்கினனே
புண்ணியா புனிதா புகரேற்றினை புகலிந்நகர்
நண்ணினாய் கழலேத்திட நண்ணகிலா வினையே. ௭

இரவொடு பகலதா மெம்மானுன்னைப்
பரவுத லொழிகிலேன் வழியடியேன்
குரவிரி நறுங்கொன்றை கொண்டணிந்த
அரவிரி சடைமுடி யாண்டகையே
அனமென்னடை யாளொடு மதிர்கட லிலங்கைமன்னை
இனமார்தரு தோளடர்த் திருந்தனை புகலியுளே. ௮

உருகிட வுவகைதந் துடலினுள்ளாற்
பருகிடு மமுதன பண்பினனே
பொருகடல் வண்ணனும் பூவுளானும்
பெருகிடு மருளெனப் பிறங்கெரியாய்
உயர்ந்தாயினி நீயெனை யொண்மலரடி யிணைக்கீழ்
வயந்தாங் குறநல் கிடுமதிற் புகலிமனே. ௯

கையினி லுண்பவர் கணிகைநோன்பர்
செய்வன தவமலாச் செதுமதியார்
பொய்யவ ருரைகளைப் பொருளெனாத
மெய்யவ ரடிதொழ விரும்பினனே
வியந்தாய்வெள் ளேற்றினை விண்ணவர் தொழுபுகலி
உயர்ந்தார்பெருங் கோயிலு ளொருங்குட னிருந்தவனே.

புண்ணியர் தொழுதெழு புகலிநகர்
விண்ணவ ரடிதொழ விளங்கினானை
நண்ணிய ஞானசம் பந்தன்வாய்மை
பண்ணிய வருந்தமிழ் பத்தும்வல்லார்
நடலையவை யின்றிப்போய் நண்ணுவர் சிவனுலகம்
இடராயின வின்றித்தா மெய்துவர் தவநெறியே. கக

திருச்சிற்றம்பலம்



## திருவாவடுதுறை　　　　　　　　　　பதிகம் உசுஉ

நாலடிமேல்வைப்பு. பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழ றொழுதெழுவேன்
கடறனி லமுதொடு கலந்தநஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. க

வாழினுஞ் சாவினும் வருந்தினும்போய்
வீழினு முனகழல் விடுவேனல்லேன்
தாழிளந் தடம்புன றயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. உ

நனவினுங் கனவினு நம்பாவுன்னை
மனவினும் வழிபடன் மறவேனம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி யனல்புல்கு கையவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௩

தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மல ரடியலா லரற்றாதென்னாக்
கைமல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதி ளெரியெழ முனிந்தவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௪

கையது வீழினுங் கழிவுறினும்
செய்கழ லடியலாற் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௫

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாயுன் னடியலா லேத்தாதென்னா
ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௬

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் னடியலா லரற்றாதென்னா
ஒப்புடை யொருவனை யுருவழிய
அப்படி யழலெழ விழித்தவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௭

பேரிடர் பெருகியோர் பிணிவரினுஞ்
சீருடைக் கழலலாற் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி யிராவணனை
ஆரிடர் படவரை யடர்த்தவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௮

உண்ணினும் பசிப்பினு முறங்கினுநின்
ஒண்மல ரடியலா லுரையாதென்னாக்
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலு மளப்பரி தாயவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௯

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் னடியலா லரற்றாதென்னாப்
புத்தருஞ் சமணரும் புறனுரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருளாவடுதுறை யரனே. ௰

அலைபுன லாவடு துறையமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்மிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர்நிலமிசை நிலையிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மாசிலாமணியீசர், செம்பொற்றியாகர்;

இறைவி - ஒப்பிலாமுலையம்மை.

---

**பதிக வரலாறு:**

திருத்தென்குரங்காடுதுறை முதலிய தலங்களை வணங்கிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாவடுதுறையை யடைந்து வழிபட் டெழுந்தருளியிருக்கு நாள்களில் பிள்ளையாரது தந்தையாராகிய சிவபாதவிருதயர் அவர்முன் னணைந்து, யாகஞ் செய்தற்குரிய காலம் வந்தமையால் தாம் சீகாழியை யடைந்து அதனைச் செய்தற்கு வேண்டிய பொன்னை விரும்பி விண்ணப்பித்தார். அதனைக் கேட்ட பிள்ளையார் அதனை யவர் தம்மிடத்தில் முன்னரே சொல்லி யிருப்பதையும் நினைந்து அந்தமில்லாத பொருளெனப் படுவது ஆவடுதுறையுள் எந்தையா ரிணையடித் தலங்களன்றோ என எழுந்து திருக்கோயிலை யடைந்து இறைவனைப்போற்றி, என்னை யடைந்து கேட்பாருக்குக் கொடுக்குஞ் செல்வப் பொருளொன்று மில்லேன் அஃது உன்னடி யல்லது வேறொன்றுவதையு மறியேன், என்று இறைவனது திருவருளை வினவிய "இடரினுந் தளரினும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி யருளினார். அவ்வாறு தந்தையார் பொருட்டுப் பொருளை நச்சி இன்றமிழ் பாடிய பிள்ளையாரது இச்சையை நிரப்பி யருள்கின்ற இறைவன தின்னருளால் ஓர் சிவபூதம் பலிபீடத்தின்கண் பசும்பொன் னிறைந்த உலவாக்கிழி யொன்றை வைத்துப் பிள்ளையாரை நோக்கி 'இவ்வுலவாக்கிழி யுமக்கிறைவன் நல்கியது' என்றுரைக்க அதன் முன்னர் பிள்ளையார் கைகூப்பி வணங்கி நிலமுறப் பணிந்தெழுந்தார். பணிந்தெழுந்த அவர் அக்கிழியைத் தமது தலைமீது தரித்தெடுத்துத் தமது தாதையார் கையில் கொடுத்து 'வேத முதல்வராகிய சிவபெருமானைப் பொருளாகக்கொண்டு தேவரீர் செய்யும் வேள்விக்கும் மற்றும் சீகாழியில் பிறர் செய்வனவற்றிற்கும் ஆகும். எவ்வள வெடுப்பினு முலவாது நிறைவுறுவதாகும்' என்றுசொல்லி விடை கொடுத்து அவரைச் சீகாழிக்கு அனுப்பித் தாம் சிலநாள் அங்கெழுந்தருளி யிருந்தார்.



## திருப்பூந்தராய் பதிகம் ௨௯௩

ஈரடிமேல்வைப்பு. பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்க செம்மை விமலன் வியன்கழல்
சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி
நன்ற தாகிய நம்பன் றானே. ௧

புள்ளி னம்புகழ் போற்றிய பூந்தராய்
வெள்ளந் தாங்கு விகிர்த னடிதொழ
ஞாலத் தில்லுயர் வாருள்கு நன்னெறி
மூல மாய முதலவன் றானே. ௨

வேந்த ராயுல காள விருப்புறிற்
பூந்த ராய்நகர் மேயவன் பொற்கழல்
நீதி யானினைந் தேத்தி யுள்கிடச்
சாதி யாவினை யான தானே. ௩

பூசு ரர்தொழு தேத்திய பூந்தராய்
ஈசன் சேவடி யேத்தி யிறைஞ்சிடச்
சிந்தை நோயவை தீர நல்கிடும்
இந்து வார்சடை யெம்மி றையே. ௪

பொலிந்த வெண்பணி மேனியன் பூந்தராய்
மலிந்த புந்திய ராகி வணங்கிட
நுந்த மேல்வினை யோட வீடுசெய்
எந்தை யாயவெம் மீசன் றானே. ௫

பூதஞ் சூழப் பொலிந்தவன் பூந்தராய்
நாதன் சேவடி நாளு நவின்றிட
நல்கு நாடொறு மின்ப நளிர்புனல்
பில்கு வார்சடைப் பிஞ்ஞ கனே. ௬

புற்றி னாக மணிந்தவன் பூந்தராய்
பற்றி வாழும் பரமனைப் பாடிடப்
பாவ மாயின தீரப் பணித்திடுஞ்
சேவ தேறிய செல்வன் றானே. ௭

போத கத்துரி போர்த்தவன் பூந்தராய்
காத லித்தான் கழல்விர லொன்றினால்
அரக்க னாற்ற லழித்தவ னுக்கருள்
பெருக்கி நின்றவெம் பிஞ்ஞ கனே. ௮

மத்த மான விருவர் மருவொணா
அத்த னானவன் மேவிய பூந்தராய்
ஆள தாக வடைந்துய்ம்மி னும்வினை
மாளு மாறருள் செய்யுந் தானே. ௯

பொருத்த மில்சமண் சாக்கியப் பொய்கடிந்
திருத்தல் செய்தபி ரானிமை யோர்தொழப்
பூந்த ராய்நகர் கோயில் கொண்டுகை
ஏந்து மான்மறி யெம்மி றையே. ௰

புந்தி யான்மிக நல்லவர் பூந்தராய்
அந்த மில்லெம் மடிகளை ஞானசம்
பந்தன் மாலைகொண் டேத்தி வாழுநும்
பந்த மார்வினை பாறி டுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கொள்ளம்பூதூர் — பதிகம் ௨௬௪

ஈரடிமேல்வைப்பு. பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கொட்ட மேகமழுங் கொள்ளம் பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௧

கோட்ட கக்கழனிக் கொள்ளம் பூதூர்
நாட்ட கத்துறை நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௨

குலையினார் தெங்குசூழ் கொள்ளம் பூதூர்
விலையி லாட்கொண்ட விகிர்தனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௩

குவளை கண்மலருங் கொள்ளம் பூதூர்த்
தவள நீறணி தலைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௪

கொன்றைபொன் சொரியுங் கொள்ளம் பூதூர்
நின்ற புன்சடை நிமலனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௫

ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஆடல் பேணிய வடிகளை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௬

ஆறுவந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஏறு தாங்கிய விறைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௭

குரக்கினம் பயிலுங் கொள்ளம் பூதூர்
அரக்கனைச் செற்ற வாதியை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௮

பருவரா லுகளுங் கொள்ளம் பூதூர்
இருவர் காண்பரி யான்கழ லுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௯

நீரகக் கழனிக் கொள்ளம் பூதூர்த்
தேரமண் செற்ற செல்வனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே. ௰

கொன்றைசேர் சடையான் கொள்ளம் பூதூர்
நன்று காழியுண் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வில்வவனநாதர்; இறைவி - சவுந்தரநாயகி.

---

**பதிக வரலாறு:**

தென்றமிழ் நாட்டில் திருநீற்றுநெறியை வளர்த்துத் திரும்பி யெழுந்தருளும் பிள்ளையார் சோழநாட்டை யடைந்து திருக்களர், திருப் பாதாளீச்சுரம் முதலிய திருப்பதிகளை வணங்கி முள்ளிவாய்க்கரையை யணைந்தார். அணைந்தபோது அவ் வாறு ஆளியங்கா வண்ணம் பெருகி யோடக் கோல் நிலை பெறாத தன்மையால் ஓடக்காரர்கள் ஓடங்களை நிறுத்திப் போய்விட்டார்கள். கரையினின்ற பிள்ளையார் அடுத்த கரை யிற் றமக்கு முன்பாகத் திருக்கொள்ளம்பூதூர் தோன்றுதலைக் கண்டு அதனை விரைந்து சென்று வணங்க விரும்பி ஓடத்தைக் கட்டவிழ்த்து ஆற்றில் விட்டுத் திருக்கூட்டத்தினை யேற்றி நாவலமேகோலாக அதன் மேற் றாமும் நின்று நம்பர்தமைக் கொட்டமென இப்பதிகத்தை நவின்று பாடி யாற்றைக் கடந்து திருக்கூட்டத்துடன் இறைவனை யணைந்து வழி பட்டுத் 'தாணுவே, ஆற்றின்கண் ஓட முய்க்குந் தன்மையா லருள்தந்த தலைவா, நாகப்பூணினாய், களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே' என்று துதித் தாண்டெழுந்தருளி யிருந்தார்.



## திருப்புகலி　　　　　　　　பதிகம் ௨௯௫

### பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கண்ணுத லானும்வெண் ணீற்றி னுங்கழ லார்க்கவே
பண்ணிசை பாடநின் றாடி னும்பரஞ் சோதியும்
புண்ணிய நான்மறை யோர்களேத் தும்புக லிந்நகர்ப்
பெண்ணினல் லாளொடும் வீற்றிருந் தபெரு மானன்றே. ௧

சாம்பலோ டுந்தழ லாடி னுஞ்சடை யின்மிசைப்
பாம்பினோ டும்மதி சூடி னும்பசு வேறியும்
பூம்படு கல்லிள வாளைபா யும்புக லிந்நகர்க்
காம்பன தோளியொ டும்மிருந் தகட வுளன்றே. ௨

கருப்புநல் வார்சிலைக் காமன்வே வக்கடைக் கண்டானும்
மருப்புநல் லானையி னீருரி போர்த்தம ணாளனும்
பொருப்பன மாமணி மாடமோங் கும்புக லிந்நகர்
விருப்பினல் லாளொடும் வீற்றிருந் தவிம லனன்றே. ௩

அங்கையி லங்கழ லேந்தி னும்மழ காகவே
கங்கையைச் செஞ்சடை சூடி னுங்கட லின்னிடைப்
பொங்கிய நஞ்சமு துண்டவ னும்புக லிந்நகர்
மங்கைநல் லாளொடும் வீற்றிருந் தமண வாளனே. ௪

சாமநல் வேதனுந் தக்கன்றன் வேள்வித கர்த்தானும்
நாமநூ றாயிரஞ் சொல்லிவா னோர்தொழு நாதனும்
பூமல்கு தண்பொழின் மன்னுமந் தண்புக லிந்நகர்க்
கோமள மாதொடும் வீற்றிருந் தகுழ கனன்றே. ௫

இரவிடை யொள்ளெரி யாடி னும்மிமை யோர்தொழச்
செருவிடை முப்புரந் தீயெரித் தசிவ லோகனும்
பொருவிடை யொன்றுகந் தேறி னும்புக லிந்நகர்
அரவிடை மாதொடும் வீற்றிருந் தவழ கனன்றே. ௬

சேர்ப்பது திண்சிலை மேவினா னுந்திகழ் பாலன்மேல்
வேர்ப்பது செய்தவெங் கூற்றுதைத் தானும்வேள் விப்புகை
போர்ப்பது செய்தணி மாடமோங் கும்புக லிந்நகர்ப்
பார்ப்பதி யோடுடன் வீற்றிருந் தபர மனன்றே. ௭

கன்னெடு மால்வரைக் கீழரக் கன்னிடர் கண்டானும்
வின்னெடும் போர்விறல் வேடனா கிவிச யற்கொரு
பொன்னெடுங் கோல்கொடுத் தானுமந் தண்புக லிந்நகர்
அன்னமன் னந்நடை மங்கையொ டும்மமர்ந் தானன்றே. ௮

பொன்னிற நான்முகன் பச்சையா னென்றிவர் புக்குழித்
தன்னையின் னானெனக் காண்பரி யதழற் சோதியும்
புன்னைபொன் றூதிர் மல்குமந் தண்புக லிந்நகர்
மின்னிடை மாதொடும் வீற்றிருந் தவிம லனன்றே. ௯

பிண்டியும் போதியும் பேணுவார் பேச்சினைப் பேணாதேதார்
தொண்டருங் காதல்செய் சோதியா யசுடர்ச் சோதியான்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுக லிந்நகர்
வண்டமர் கோதையோ டும்மிருந் தமண வாளனே. ௰

பூங்கமழ் கோதையோ டும்மிருந் தான்புக லிந்நகர்ப்
பாங்கனை ஞானசம் பந்தன்சொன் னதமிழ் பத்திவை
ஆங்கமர் வெய்திய வாதியா கவிசை வல்லவர்
ஓங்கம ராவதி யோர்தொழச் செல்வது முண்மையே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கடவூர்வீரட்டம் பதிகம் ௨௯௯

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

சடையுடை யானுநெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடை யானுமை யார்ந்தவொண் கண்ணுமை கேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே. ௧

எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே. உ

நாதனுந் நள்ளிரு ளாடினா னுந்நளிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு வேறியும்
காதலர் தண்கட வூரினா னுங்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே. ௩

மழுவமர் செல்வனு மாசிலா தபல பூதமுன்
முழவொலி யாழ்குழன் மொந்தைகொட் டமுது காட்டிடைக்
கழல்வளர் கால்குஞ்சித் தாடினா னுங்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா னத்தர னல்லனே. ௪

சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினா னுஞ்சுழல் வாயதோர்
படமணி நாகம ரைக்கசைத் தபர மேட்டியும்
கடமணி மாவுரித் தோலினா னுங்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே. ௫

பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னொளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லனே. ௬

செவ்வழ லாய்நில னாகிநின் றசிவ மூர்த்தியும்
முவ்வழ னான்மறை யைந்துமா யமுனி கேள்வனும்
கவ்வழல் வாய்க்கத நாகமார்த் தான்கட வூர்தனுள்
வெவ்வழ லேந்துகை வீரட்டா னத்தர னல்லனே. ௭

அடியிரண் டோருடம் பைஞ்ஞான்கி ருபது தோடச
முடியுடை வேந்தனை மூர்க்கழித் தமுதன் மூர்த்தியும்
கடிகம ழும்பொழில் சூழுமந் தண்கட வூர்தனுள்
வெடிதலை யேந்தியும் வீரட்டா னத்தர னல்லனே. ௮

வரைகுடை யாமழை தாங்கினு னும்வளர் போதின்கண்
புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே
கரைகடல் சூழ்வையங் காக்கின்ற ுனுங்கட வூர்தனுள்
விரைகமழ் பூம்பொழில் வீரட்டா னத்தர னல்லனே. ௯

தேரரு மாசுகொண் மேனியா ருந்தெளி யாததோர்
ஆரருஞ் சொற்பொரு ளாகினின் றவெம தாதியான்
காரிளங் கொன்றைவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வீரமுஞ் சேர்கழல் வீரட்டா னத்தர னல்லனே. ௰

வெந்தவெண் ணீறணி வீரட்டா னத்துறை வேந்தனை
அந்தணர் தங்கட வூருளா னையணி காழியான்
சந்தமெல் லாமடிச் சாத்தவல் லமறை ஞானசம்
பந்தன செந்தமிழ் பாடியா டக்கெடும் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அமிர்தகடேசர்; இறைவி - அபிராமி.



## திருவீழிமிழலை பதிகம் ௨௬௫

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கேள்வியர் நாடொறு மோதுநல் வேதத்தர் கேடிலா
வேள்விசெ யந்தணர் வேதியர் வீழிமி ழலையார்
வாழியர் தோற்றமுங் கேடும்வைப் பாருயிர் கட்கெலாம்
ஆழியர் தம்மடி போற்றியென் பார்கட்க ணியரே. ௧

கல்வினற் பாவையொர் பாகத்தர் காதலித் தேத்திய
மெல்வினத் தார்பக்கன் மேவினர் வீழிமி ழலையார்
நல்வினத் தார்செய்த வேள்விசெ குத்தெழு ஞாயிற்றின்
பல்லினைத் துந்தகர்த் தாரடி யார்பாவ நாசரே. ௨

நஞ்சினை யுண்டிருள் கண்டர்பண் டந்தக னைச்செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழிமி ழலையார்
அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங் காடிய
மஞ்சனச் செஞ்சடை யாரென வல்வினை மாயுமே. ௩

கலையிலங் கும்மழு கட்டங்கங் கண்டிகை குண்டலம்
விலையிலங் கும்மணி மாடத்தர் வீழிமி ழலையார்
தலையிலங் கும்பிறை தாழ்வடஞ் சூலந்த மருகம்
அலையிலங் கும்புன லேற்றவர்க் கும்மடி யார்க்குமே. ௪

பிறையுறு செஞ்சடை யார்விடை யார்பிச்சை நச்சியே
வெறியுறு நாட்பலி தேர்ந்துழல் வீழிமி ழலையார்
முறைமுறை யாலிசை பாடுவா ராடிமுன் றொண்டர்கள்
இறையுறை வாஞ்சிய மல்லதெப் போதுமென் னுள்ளமே. ௫

வசையறு மாதவங் கண்டுவ ரிசிலை வேடனாய்
விசையனுக் கன்றருள் செய்தவர் வீழிமி ழலையார்
இசைவர விட்டியல் கேட்பித்துக் கல்லவ டமிட்டுத்
திசைதொழு தாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே. ௬

சேடர்விண் ணோர்கட்குத் தேவர்நன் மூவிரு தொன்னூலர்
வீடர்முத் தியர்நால் வேதத்தர் வீழிமி ழலையார்
காடரங் காவுமை காணவண் டத்திமை யோர்தொழ
நாடக மாடியை யேத்தவல் லார்வினை நாசமே. ௭

எடுத்தவன் மாமலைக் கீழவி ராவணன் வீழ்தர
விடுத்தருள் செய்திசை கேட்டவர் வீழிமி ழலையார்
படுத்துவெங் காலனைப் பால்வழி பாடுசெய் பாலற்குக்
கொடுத்தன ரின்பங்கொ டுப்பர் தொழக்குறை வில்லையே. ௮

திக்கமர் நான்முகன் மாலண்ட மண்டலந் தேடிட
மிக்கமர் தீத்திர ளாயவர் வீழிமி ழலையார்
சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரும்
நக்கர்தந் நாமந மச்சிவா யவ்வென்பார் நல்லரே. ௯

துற்றரை யார்துவ ராடையர் துப்புர வொன்றிலா
வெற்றரை யாரறி யாநெறி வீழிமி ழலையார்
சொற்றெரி யாப்பொருள் சோதிக்கப் பானின்ற சோதிதான்
மற்றறி யாவடி யார்கடஞ் சிந்தையுண் மன்னுமே. ௰

வேதியர் கைதொழு வீழிமி ழலைவி ரும்பிய
ஆதியை வாழ்பொழிற் காழியுண் ஞானசம் பந்தனுய்ந்
தோதிய வொண்டமிழ் பத்திவை யுற்றுரை செய்பவர்
மாதியல் பங்கன்ம லரடி சேரவும் வல்லரே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருவிராமேச்சுரம் பதிகம் ௨௯௮

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

அலைவளர் தண்மதி யோடய லேயடக் கியுமை
முலைவளர் பாகமு யங்கவல் லமுதல் வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகா னலிரா மேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன் றானிருந் தாட்சியே. ௧

தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கடம் மேல்வினை வீடுமே. ௨

மானன நோக்கியை தேவிதன் னையொரு மாயையால்
கானதில் வவ்விய காரரக் கன்னுயிர் செற்றவன்
ஈனமி லாப்புக ழண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஞானமு நன்பொரு ளாகிநின் றதொரு நன்மையே. ௩

உரையுணா ராதவன் காமமென் னும்முறு வேட்கையான்
வரைபொரு தோளிறச் செற்றவில் லிமகிழ்ந் தேத்திய
விரைமரு வுங்கட லோதமல் குமிரா மேச்சுரத்
தரையரா வாடநின் றாடல்பே ணுமம்மா னல்லனே. ௬

ஊறுடை வெண்டலை கையிலேந் திப்பல வூர்தொறும்
வீறுடை மங்கைய ரையம்பெய் யவிற லார்ந்ததோர்
ஏறுடை வெல்கொடி யெந்தைமே யவிரா மேச்சுரம்
பேறுடை யான்பெய ரேத்துமாந் தர்பிணி பேருமே. ௭

அணையலை சூழ்கட லன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யிலிரா மேச்சுரம்
துணையிலி தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே. ௮

சனிபுதன் ஞாயிறு வெள்ளிதிங் கட்பல தீயன
முனிவது செய்துகந் தானைவென் றவ்வினை மூடிட
இனியரு ளல்கிடென் றண்ணல்செய் தவிரா மேச்சுரம்
பனிமதி சூடிநின் றாடவல் லபர மேட்டியே. ௭

பெருவரை யன்றெடுத் தேந்தினான் றன்பெயர் சாய்கெட
அருவரை யாடலர்த் தன்றுநல் கியயன் மாலெனும்
இருவரு நாடிநின் றேத்துகோ யிலிரா மேச்சுரத்
தொருவனு மேபல வாகிநின் றதொரு வண்ணமே. ௮

* * * * ௯

சாக்கியர் வன்சமண் கையர்மெய் யிற்றடு மாற்றத்தார்
வாக்கிய லும்முரை பற்றுவிட் டுமதி யொண்மையால்
ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஆக்கிய செல்வனை யேத்திவாழ் மின்னரு ளாகவே. ௰

பகலவன் மீதியங் காமைக்காத் தபதி யோன்றனை
இகலழி வித்தவ னேத்துகோ யிலிரா மேச்சுரம்
புகலியுண் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கில்லை யல்லலே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - இராமநாதர்; இறைவி - பருவதவர்த்தனி.

---

**பதிக வரலாறு:**

சந்தனப் பொதியச் செந்தமிழ் நாட்டில் நின்றசீர் நெடுமாறர், பாண்டி மாதேவியார், குலச்சிறையார் என்னு மிவர்களோடு திருநெல் வேலி முதலாகிய திருப்பதிகளை வணங்கிய சிரபுரச்செல்வர், விண்ண வரைச் செற்றுகந்தான் இலங்கைசெற்ற மிக்க பெரும் பாதகத்தை நீக்க வேண்டி, திண்ணிய பொற் சிலைத்தடக்கை யிராமன் செய்த திருவிரா மேச்சுரத்தை யடைந்து திருக்கோயிலிற் சென்று இறைவனை வணங்கி இப்பதிக மெடுத்துப் பல திருப்பாட்டுக்களில் சேதுவின்கண் செங்கண் மால் செய்த பூசையினைச் சிறப்பித்துப் பாடி யாண்டெழுந்தருளி யிருந்தே ஈழநாட்டின்க ணுள்ளனவாய திருக்கோணமாமலை, திருக்கே தீச்சரம் என்னுந் திருப்பதிகளைப் பாடித் திருக்கூட்டத்துடன் அள வளாவி யிருந்தார்.



## திருப்புனவாயில் பதிகம் ௨௱௧

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மின்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்
பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
அன்னமன் னந்நடை யாளொ டும்மம ரும்மிடம்
புன்னைநன் மாமலர் பொன்னுதிர்க் கும்புன வாயிலே. ௧

விண்டவர் தம்புர மூன்றெரித் துவிடை யேறிப்போய்
வண்ட மருங்குழன் மங்கையொ டும்மகிழ்ந் தானிடம்
கண்டலு ஞாழலு நின்றுபெ ருங்கடற் கானல்வாய்ப்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுன வாயிலே. ௨

விடையுடை வெல்கொடி யேந்தினு னும்விறற் பாரிடம்
புடைபட வாடிய வேடத்தா னும்புன வாயிலில்
தொடைநவில் கொன்றையந் தாரினு னுஞ்சுடர் வெண்மழுப்
படைவல னேந்திய பானெய்யா டும்பர மனன்றே. ௩

சங்கவெண் டோடணி காதினு னுஞ்சடை தாழவே
அங்கையி லங்கழ லேந்தினு னும்மழ காகவே
பொங்கர வம்மணி மார்பினு னும்புன வாயிலில்
பைங்கண்வெள் ளேற்றண்ண லாகிநின் றபர மேட்டியே. ௪

கலிபடு தண்கட னஞ்சமுண் டகறைக் கண்டனும்
புலியதள் பாம்பரைச் சுற்றினு னும்புன வாயிலில்
ஒலிதரு தண்புன லோடெருக் கும்மத மத்தமும்
மெலிதரு வெண்பிறை சூடிநின் றவிடை யூர்தியே. ௫

வாருறு மென்முலை மங்கைபா டநட மாடிப்போய்க்
காருறு கொன்றைவெண் டிங்களா னுங்கனல் வாயதோர்
போருறு வெண்மழு வேந்தினு னும்புன வாயிலில்
சீருறு செல்வமல் கவ்விருந் தசிவ லோகனே. ௬

பெருங்கட னஞ்சமு துண்டுகந் துபெருங் காட்டிடைத்
திருந்திள மென்முலைத் தேவிபா டந்நட மாடிப்போய்ப்
பொருந்தலர் தம்புர மூன்றுமெய் துபுன வாயிலில்
இருந்தவன் றன்கழ லேத்துவார் கட்கிட ரில்லையே. ௭

மனமிகு வேலனவ் வாளரக் கன்வலி யொல்கிட
வனமிகு மால்வரை யாலடர்த் தானிட மன்னிய
இனமிகு தொல்புகழ் பாடலா டல்லெழின் மல்கிய
புனமிகு கொன்றையந் தென்றலார்ந் தபுன வாயிலே. ௮

திருவளர் தாமரை மேவினு னுந்திகழ் பாற்கடற்
கருநிற வண்ணனுங் காண்பரி யகட வுள்ளிடம்
நரல்சுரி சங்கொடு மிப்பியுந் திந்நல மல்கிய
பொருகடல் வெண்டிரை வந்தெறி யும்புன வாயிலே. ௯

போதியெ னப்பெய ராயினு ரும்பொறி யில்சமண்
சாதியு ரைப்பன கொண்டயர்ந் துதளர் வெய்தன்மின்
போதவிழ் தண்பொழின் மல்குமந் தண்புன வாயிலில்
வேதனை நாடொறு மேத்துவார் மேல்வினை வீடுமே. ௰

பொற்றொடி யாளுமை பங்கன்மே வும்புன வாயிலைக்
கற்றவர் தாந்தொழு தேத்தநின் றகடற் காழியான்
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் நன்மையால்
அற்றமில் பாடல்பத் தேத்தவல் லாரருள் சேர்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - புனவாயிலீச்சுவரர்; இறைவி - கருணைநாயகி.



## திருக்கோட்டாறு

பதிகம் ௨௭௰

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

வேதியன் விண்ணவ ரேத்தநின் றான்விளங் கும்மறை
ஓதிய வொண்பொரு ளாகிநின் றானொளி யார்கிளி
கோதிய தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
ஆதியை யேநினைந் தேத்தவல் லார்க்கல்லல் இல்லையே. ௧

ஏலம லர்க்குழன் மங்கைநல் லாளிம வான்மகள்
பாலம ருந்திரு மேனியெங் கள்பர மேட்டியும்
கோலம லர்ப்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆலநீ ழற்கீ ழிருந்தறஞ் சொன்னவ ழகனே. ௨

இலைமல்கு சூலமொன் றேந்தினு னுமிமை யோர்தொழ
மலைமல்கு மங்கையோர் பங்கனு யம்மணி கண்டனும்
குலைமல்கு தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அலைமல்கு வார்சடை யேற்றுகந் தவழ கனன்றே. ௩

ஊனம ரும்முட லுள்ளிருந் தவ்வுமை பங்கனும்
வானம ரும்மதி சென்னிவைத் தமறை யோதியும்
தேனம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
தானம ரும்விடை யானுமெங் கடலை வனன்றே. ௪

வம்பல ரும்மலர்க் கோதைபா கம்மகிழ் மைந்தனும்
செம்பவ ளத்திரு மேனிவெண் ணீறணி செல்வனும்
கொம்பம ரும்மலர் வண்டுகெண் டுந்திருக் கோட்டாற்றுள்
நம்பனெ னப்பணி வார்க்கருள் செய்யெங்க ணாதனே. ௫

பந்தம ரும்விரன் மங்கைநல் லாளொரு பாகமா
வெந்தம ரும்பொடிப் பூசவல் லவிகிர் தன்மிகும்
கொந்தம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அந்தண னைநினைந் தேத்தவல் லார்க்கில்லை யல்லலே. ௬

துண்டம ரும்பிறை சூடிநீ டுசுடர் வண்ணனும்
வண்டம ருங்குழன் மங்கைநல் லாளொரு பங்கனும்
தெண்டிரை நீர்வயல் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அண்டமு மெண்டிசை யாகிநின் றவழ கனன்றே. ௭

இரவம ருந்நிறம் பெற்றுடை யவிலங் கைக்கிறை
கரவம ரக்கயி லையெடுத் தான்வலி செற்றவன்
குரவம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அரவம ருஞ்சடை யானடி யார்க்கருள் செய்யுமே. ௮

ஓங்கிய நாரண னான்முக னும்முண ராவகை
நீங்கிய தீயுரு வாகிநின் றநிம லன்னிழற்
கோங்கம ரும்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆங்கம ரும்பெரு மானம ரர்க்கம ரனன்றே. ௯

கடுக்கொடுத் ததுவ ராடையர் காட்சியில் லாததோர்
தடுக்கிடுக் கிச்சம ணேதிரி வார்கட்குத் தன்னருள்
கொடுக்ககில் லாக்குழ கன்னம ருந்திருக் கோட்டாற்றுள்
இடுக்கணின் றித்தொழு வாரம ரர்க்கிறை யாவரே. ௰

கொடியுயர் மால்விடை யூர்தியி னான்றிருக் கோட்டாற்றுள்
அடிகழ லார்க்கநின் றாடவல் லவரு ளாளனைக்
கடிகம ழும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
படியிவை பாடிநின் றாடவல் லார்க்கில்லை பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருப்பூந்தராய்   பதிகம் ௨௭௧

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மின்னன வெயிறுடை விரவ லோர்கடந்
துன்னிய புரமுகச் சுளிந்த தொன்மையர்
புன்னையம் பொழிலணி பூந்த ராய்நகர்
அன்னமன் னந்நடை யரிவை பங்கரே. ௧

மூதணி முப்புரத் தெண்ணி லோர்களை
வேதணி சரத்தினால் வீட்டி னாரவர்
போதணி பொழிலமர் பூந்த ராய்நகர்த்
தாதணி குழலுமை தலைவர் காண்மினே. ௨

தருக்கிய திரிபுரத் தவர்க டாமுகப்
பெருக்கிய சிலைதனைப் பிடித்த பெற்றியர்
பொருக்கடல் புடைதரு பூந்த ராய்நகர்க்
கருக்கிய குழலுமை கணவர் காண்மினே. ௩

நாகமும் வரையுமே நாணும் வில்லுமா
மாகமார் புரங்களை மறித்த மாண்பினர்
பூகமார் பொழிலணி பூந்த ராய்நகர்ப்
பாகமர் மொழியுமை பங்கர் காண்மினே. ௪

வெள்ளெயி றுடையவவ் விரவ லார்களூர்
ஒள்ளெரி யூட்டிய வொருவ னூரொளிர்
புள்ளணி புறவினிற் பூந்த ராய்நகர்க்
கள்ளணி குழலுமை கணவர் காண்மினே. ௫

துங்கிய ருனவர் தோற்ற மாநகர்
அங்கியில் வீழ்தர வாய்ந்த வம்பினர்
பொங்கிய கடலணி பூந்த ராய்நகர்
அங்கய லனகணி யரிவை பங்கரே. ௬

அண்டர்க ளுய்ந்திட வவுணர் மாய்தரக்
கண்டவர் கடல்விட முண்ட கண்டனூர்
புண்டரீ கவ்வயற் பூந்த ராய்நகர்
வண்டமர் குழலிதன் மணாளர் காண்மினே. ௭

மாசின வரக்கனை வரையின் வாட்டிய
காய்சின வெயில்களைக் கறுத்த கண்டனூர்
பூசுரர் பொலிதரு பூந்த ராய்நகர்க்
காசைசெய் குழலுமை கணவர் காண்மினே. ௮

தாமுக மாக்கிய வசுரர் தம்பதி
வேமுக மாக்கிய விகிர்தர் கண்ணனும்
பூமக னறிகிலாப் பூந்த ராய்நகர்க்
கோமக னெழில்பெறு மரிவை கூறரே. ௯

முத்தர வசுரர்கண் மொய்த்த முப்புரம்
அத்தகு மழலிடை வீட்டி னாரமண்
புத்தரு மறிவொணாப் பூந்த ராய்நகர்க்
கொத்தணி குழலுமை கூறர் காண்மினே. ௰

புரமெரி செய்தவர் பூந்த ராய்நகர்ப்
பரமலி குழலுமை நங்கை பங்கரைப்
பரவிய பந்தன்மெய்ப் பாடல் வல்லவர்
சிரமலி சிவகதி சேர்த றிண்ணமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருப்பைஞ்ஞீலி பதிகம் ௨௭௨

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஆரிடம் பாடில ரடிகள் காடலால்
ஓரிடங் குறைவில ருடையர் கோவணம்
நீரிடஞ் சடைவிடை யூர்தி நித்தலும்
பாரிடம் பணிசெயும் பயில்பைஞ் ஞீலியே. ௧

மருவிலார் திரிபுர மெரிய மால்வரை
பருவிலாக் குனித்தபைஞ் ஞீலி மேவலான்
உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத்
திருவிலா ரவர்களைத் தெருட்ட லாகுமே. ௨

அஞ்சுரும் பணிமல ரமுத மாந்தித்தேன்
பஞ்சுரம் பயிற்றுபைஞ் ஞீலி மேவலான்
வெஞ்சுரந் தனிலுமை வெருவ வந்ததோர்
குஞ்சரம் படவுரி போர்த்த கொள்கையே. ௩

கோடல்கள் புறவணி கொல்லை முல்லைமேல்
பாடல்வண் டிசைமுரல் பயில்பைஞ் ஞீலியார்
பேடல ராணலர் பெண்ணு மல்லதோர்
ஆடலை யுகந்தவெம் மடிக ளல்லரே. ௪

விழியிலா நகுதலை விளங்கி ளம்பிறை
சுழியிலார் வருபுனற் சூழ லுங்கினான்
பழியிலார் பரவுபைஞ் ஞீலி பாடலான்
கிழியிலார் கேண்மையைக் கெடுக்க லாகுமே. ௫

விடையுடைக் கொடிவல னேந்தி வெண்மழுப்
படையுடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவலான்
துடியிடைக் கலையல்கு லாளொர் பாகமாச்
சடையிடைப் புனல்வைத்த சதுர னல்லனே. ௬

தூயவன் றூயவெண் ணீறு மேனிமேல்
பாயவன் பாயபைஞ் ஞீலி கோயிலா
மேயவன் வேய்புரை தோளி பாகமா
ஏயவ னெனைச்செயுந் தன்மை யென்கொலோ. எ

தொத்தின தோண்முடி யுடைய வன்றலை
பத்தினை நெரித்தபைஞ் ஞீலி மேவலான்
முத்தினை முறுவல்செய் தாளோர் பாகமாப்
பொத்தினன் றிருந்தடி பொருந்தி வாழ்மினே. அ

நீருடைப் போதுறை வானு மாலுமாய்ச்
சீருடைக் கழலடி சென்னி காண்கிலர்
பாருடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவிய
தாருடைக் கொன்றையந் தலைவர் தன்மையே. கூ

பீலியார் பெருமையும் பிடகர் நூன்மையும்
சாலியா தவர்களைச் சாதி யாததோர்
கோலியா வருவரை கூட்டி யெய்தபைஞ்
ஞீலியான் கழலடி நினைந்து வாழ்மினே. ώ

கண்புனல் விளைவயற் காழிக் கற்பகம்
நண்புணா ரருமறை ஞானசம் பந்தன்
பண்பினர் பரவுபைஞ் ஞீலி பாடுவார்
உண்பின வுலகினி லோங்கி வாழ்வரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - நீலகண்டர்; இறைவி - விசாலாட்சி.



## திருவெண்காடு பதிகம் ௨௭௩

### பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மந்திர மறையவை வான வரொடும்
இந்திரன் வழிபட நின்ற வெம்மிறை
வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய
அந்தமு முதலுடை யடிக ளல்லரே. ௧

படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்
உடைவிரி கோவண முகந்த கொள்கையர்
விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய
சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே. ௨

பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்
தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்
மேலவர் பரவுவெண் காடு மேவிய
ஆலம தமர்ந்தவெம் மடிக ளல்லரே. ௩

ஞாழலுஞ் செருந்தியு நறுமலர்ப் புன்னையுந்
தாழைவெண் குருகய றயங்கு கானலில்
வேழம துரித்தவெண் காடு மேவிய
யாழின திசையுடை யிறைவ ரல்லரே. ௪

பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்
ஏதங்கள் பலவிடர் தீர்க்கு மெம்மிறை
வேதங்கண் முதல்வர்வெண் காடு மேவிய
பாதங்க டொழநின்ற பரம ரல்லரே. ௫

மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்
எண்ணிய தேவர்க ளிறைஞ்சு மெம்மிறை
விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய
அண்ணலை யடிதொழ வல்ல லில்லையே. ௬

நயந்தவர்க் கருள்பல நல்கி யிந்திரன்
கயந்திரம் வழிபட நின்ற கண்ணுதல்
வியந்தவர் பரவுவெண் காடு மேவிய
பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. எ

மலையுட னெடுத்தவல் லரக்க னீண்முடி
தலையுட னெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய
அலையுடைப் புனல்வைத்த வடிக ளல்லரே. அ

ஏடவிழ் நறுமல ரயனு மாலுமாய்த்
தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்
வேடம துடையவெண் காடு மேவிய
ஆடலை யமர்ந்தவெம் மடிக ளல்லரே. கூ

போதியர் பிண்டியர் பொருத்த மில்லிகள்
நீதிகள் சொல்லியு நினைய கிற்கிலார்
வேதியர் பரவுவெண் காடு மேவிய
ஆதியை யடிதொழ வல்ல லில்லையே. ω

நல்லவர் புகலியுண் ஞானசம் பந்தன்
செல்வனெஞ் சிவனுறை திருவெண் காட்டின்மேற்
சொல்லிய வருந்தமிழ் பத்தும் வல்லவர்
அல்லலோ டருவினை யறுத லாணையே. கக

திருச்சிற்றம்பலம்



## திருக்கொள்ளிக்காடு பதிகம் உஎச

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

நிணம்படு சுடலையி னீறு பூசிநின்
றிணங்குவர் பேய்களோ டிடுவர் மாநடம்
உணங்கல்வெண் டலைதனி லுண்ப ராயினும்
குணம்பெரி துடையர்நங் கொள்ளிக் காடரே. க

ஆற்றநல் லடியிணை யலர்கொண் டேத்துவான்
சாற்றிய வந்தணன் றகுதி கண்டநாள்
மாற்றல னாகிமுன் னடர்த்து வந்தணை
கூற்றினை யுதைத்தனர் கொள்ளிக் காடரே. ௨

அத்தகு வானவர்க் காக மால்விடம்
வைத்தவர் மணிபுரை கண்டத் தின்னுளே
மத்தமும் வன்னியு மலிந்த சென்னிமேல்
கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே. ௩

பாவண மேவுசொன் மாலை யிற்பல
நாவணங் கொள்கையி னவின்ற செய்கையர்
ஆவணங் கொண்டெமை யாள்வ ராயினும்
கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே. ௪

வாரணி வனமுலை மங்கை யாளொடும்
சீரணி திருவுருத் திகழ்ந்த சென்னியர்
நாரணி சிலைதனா னணுக லாரெயில்
கூரெரி கொளுவினர் கொள்ளிக் காடரே. ௫

பஞ்சுதோய் மெல்லடிப் பாவை யாளொடும்
மஞ்சுதோய் கயிலையுண் மகிழ்வர் நாடொறும்
வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை
குஞ்சர முரித்தனர் கொள்ளிக் காடரே. ௬

இறையுறு வரிவளை யிசைகள் பாடிட
அறையுறு கழலடி யார்க்க வாடுவர்
சிறையுறு விரிபுனல் சென்னி யின்மிசைக்
குறையுறு மதியினர் கொள்ளிக் காடரே. ௭

எடுத்தனன் கயிலையை யியல் வலியினால்
அடர்த்தனர் திருவிர லால லறிடப்
படுத்தன ரென்றவன் பாடல் பாடலும்
கொடுத்தனர் கொற்றவாள் கொள்ளிக் காடரே. ௮

தேடினு ரயன்முடி மாலுஞ் சேவடி
நாடினு ரவரென்று நணுக கிற்றிலர்
பாடினர் பரிவொடு பத்தர் சித்தமும்
கூடினார்க் கருள்செய்வர் கொள்ளிக் காடரே. கூ

நாடிநின் றறிவிலு ணிலிகள் சாக்கியர்
ஓடிமுன் னேதிய வுரைகண் மெய்யல
பாடுவர் நான்மறை பயின்ற மாதொடும்
கூடுவர் திருவுருக் கொள்ளிக் காடரே. W

நற்றவர் காழியுண் ஞானசம் பந்தன்
குற்றமில் பெரும்புகழ்க் கொள்ளிக் காடரைச்
சொற்றமி ழின்னிசை மாலை சோர்வின்றிக்
கற்றவர் கழலடி காண வல்லரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அக்கினீச்சுவரர்; இறைவி - பஞ்சினுமெல்லடியம்மை.



## திருவிசயமங்கை பதிகம் உஎரு

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
அரவமர் கொள்கையெம் மடிகள் கோயிலாம்
குரவமர் சுரபுன்னை கோங்கு வேங்கைகள்
விரவிய பொழிலணி விசய மங்கையே. க

கீதமுன் னிசைதரக் கிளரும் வீணையர்
பூதமுன் னியல்புடைப் புனிதர் பொன்னகர்
கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விசய மங்கையே. உ

அக்கர வரையின ரரிவை பாகமாத்
தொக்கநல் விடையுடைச் சோதி தொன்னகர்
தக்கநல் வானவர் தலைவர் நாடொறும்
மிக்கவர் தொழுதெழு விசய மங்கையே. ௩

தொடைமலி யிதழியுந் துன்னெ ருக்கொடு
புடைமலி சடைமுடி யடிகள் பொன்னகர்
படைமலி மழுவினர் பைங்கண் மூரிவெள்
விடைமலி கொடியணல் விசய மங்கையே. ௪

தோடமர் காதினன் றுதைந்த நீற்றினன்
ஏடமர் கோதையோ டினித மர்விடம்
காடமர் மாகரி கதறப் போர்த்ததோர்
வேடம துடையணல் விசய மங்கையே. ௫

மைப்புரை கண்ணுமை பங்கன் வண்டழல்
ஒப்புரை மேனியெம் முடைய வன்னகர்
அப்பொடு மலர்கொடங் கிறைஞ்சி வானவர்
மெய்ப்பட வருள்புரி விசய மங்கையே. ௬

இரும்பொனின் மலைவிலி னெரிச ரத்தினால்
வரும்புரங் களைப்பொடி செய்த மைந்தனூர்
சுரும்பமர் கொன்றையுந் தூய மத்தமும்
விரும்பிய சடையணல் விசய மங்கையே. ௭

உளங்கைய விருபதோ* டொருபதுங் கொடாங்
களந்தரும் வரையெடுத் திடும ரக்கனைத்
தளர்ந்துட னெரிதர வடர்த்த தன்மையன்
விளங்கிழை யொடும்புகும் விசய மங்கையே. ௮

மண்ணினை யுண்டவன் மலரின் மேலுறை
அண்ணல்க டமக்களப் பரிய வத்தனூர்
தண்ணறுஞ் சாந்தமும் பூவு நீர்கொடு
விண்ணவர் தொழுதெழு விசய மங்கையே. ௯

(பா - ம்.) *உளங்கையி விருபதோ.

கஞ்சியுங் கவளமுண் கவணர் கட்டுரை
நஞ்சினுங் கொடியன நமர்க ளேர்கிலார்
செஞ்சடை முடியுடைத் தேவ னன்னகர்
விஞ்சையர் தொழுதெழு விசய மங்கையே. ௰

விண்ணவர் தொழுதெழு விசய மங்கையை
நண்ணிய புகலியுண் ஞானசம் பந்தன்
பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர்
புண்ணியர் சிவகதி புகுத றிண்ணமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - விசயநாதர்; இறைவி - மங்கைநாயகி.

---

**பதிக வரலாறு:**

திருநெல்வாயிலரத்துறையில் முத்துச் சிவிகை முதலியவற்றைப் பெற்றுச் சீகாழிக்குத் திரும்பி யெழுந்தருள்கின்ற பிள்ளையார் இடையில் திருப்பழுவூரை வழிபட்டுத் திருவிசயமங்கையை யடைந்தார். அது கோதனம் பூசித்து வழிபட்ட திருப்பதியாதலால் அங்கு இறைவனை வழிபட்டுப் பாடிய பிள்ளையார் தமது திருப்பதிகத்தில் இரண்டாந்திருப் பாட்டில் 'கோதனம் வழிபடக்குலவு நான்மறை வேதியர் தொழுதெழு விசய மங்கையே' என அச் செய்தியைச் சிறப்பித்தருளினர்.



## திருவைகன்மாடக்கோயில் பதிகம் உ௭௪

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

துளமதி யுடைமறி தோன்று கையினர்
இளமதி யணிசடை யெந்தை யாரிடம்
உளமதி யுடையவர் வைக லோங்கிய
வளமதி தடவிய மாடக் கோயிலே. ௧

மெய்யக மிளிரும்வெண் ணூலர் வேதியர்
மையகண் மலைமக ளோடும் வைகிடம்
வையக மகிழ்தர வைகன் மேற்றிசைச்
செய்யகண் வளவன்முன் செய்த கோயிலே. ௨

கணியணி மலர்கொடு காலை மாலையும்
பணியணி பவர்க்கருள் செய்த பான்மையர்
தணியணி யுமையொடு தாமுந் தங்கிடம்
மணியணி கிளர்வைகன் மாடக் கோயிலே. ௩

கொம்பியல் கோதைமுன் னஞ்சக் குஞ்சரத்
தும்பிய துரிசெய்த துங்கர் தங்கிடம்
வம்பியல் சோலைசூழ் வைகன் மேற்றிசைச்
செம்பியன் கோச்செங்க ணான்செய் கோயிலே. ௪

விடமடை மிடற்றினர் வேத நாவினர்
மடமொழி மலைமக ளோடும் வைகிடம்
மடவன நடைபயில் வைகன் மாநகர்க்
குடதிசை நிலவிய மாடக் கோயிலே. ௫

நிறைபுனல் பிறையொடு நிலவு நீள்சடை
இறையவ ருறைவிட மிலங்கு மூவெரி
மறையொடு வளர்வுசெய் வாணர் வைகலில்
திறையுடை நிறைசெல்வன் செய்த கோயிலே. ௬

எரிசரம் வரிசிலை வளைய வேவிமுன்
திரிபுர மெரிசெய்த செல்வர் சேர்விடம்
வரிவளை யவர்பயில் வைகன் மேற்றிசை
வருமுகி லணவிய மாடக் கோயிலே. ௭

மலையன விருபது தோளி னான்வலி
தொலைவுசெய் தருள்செய்த சோதி யாரிடம்
மலர்மலி பொழிலணி வைகல் வாழ்வர்கள்
வலம்வரு மலையன மாடக் கோயிலே. ௮

மாலவன் மலரவ னேடி மால்கொள
மாலெரி யாகிய வரதர் வைகிடம்
மாலைகொ டணிமறை வாணர் வைகலில்
மாலன மணியணி மாடக் கோயிலே. ௧௦

கடுவுடை வாயினர் கஞ்சி வாயினர்
பிடகுரை பேணிலார் பேணு கோயிலாம்
மடமுடை யவர்பயில் வைகன் மாநகர்
வடமலை யனையநன் மாடக் கோயிலே. ௰

மைந்தன திடம்வைகன் மாடக் கோயிலைச்
சந்தமர் பொழிலணி சண்பை ஞானசம்
பந்தன தமிழ்கெழு பாடல் பத்திவை
சிந்தைசெய் பவர்சிவ லோகஞ் சேர்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வைகநாதர்; இறைவி - கொம்பிளங்கோதை.



## திருவம்பர்ப்பெருந்திருக்கோயில்    பதிகம் உஎஅ

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

எரிதர வனல்கையி லேந்தி யெல்லியில்
நரிதிரி கானிடை நட்ட மாடுவர்
அரிசிலம் பொருபுன லம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே. ௧

மையகண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல வாடுவர்
ஐயநன் பொருபுன லம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே. ௨

மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர வாடுவர்
அறைபுன னிறைவய லம்பர் மாநகர்
இறைபுனை யெழில்வள ரிடம தென்பரே. ௩

இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவர்
அரவமோ டுயர்செம்ம லம்பர்க் கொம்பலர்
மரவமல் கெழினகர் மருவி வாழ்வரே. ௪

சங்கணி குழையினர் சாமம் பாடுவர்
வெங்கனல் கனறர வீசி யாடுவர்
அங்கணி விழவம ரம்பர் மாநகர்ச்
செங்கண லிறைசெய்த கோயில் சேர்வரே. ௫

கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்
சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவர்
அழல்வளர் மறையவ ரம்பர்ப் பைம்பொழில்
நிழல்வளர் நெடுநக ரிடம தென்பரே. ௬

இகலுறு சுடரெரி யிலங்க வீசியே
பகலிடம் பலிகொளப் பாடி யாடுவர்
அகலிட மலிபுக ழம்பர் வம்பவிழ்
புகலிட நெடுநகர் புகுவர் போலுமே. ௭

எரியன மணிமுடி யிலங்கைக் கோன்றன
கரியன தடக்கைக ளடர்த்த காலினர்
அரியவர் வளநக ரம்ப ரின்பொடு
புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே. ௮

வெறிகிளர் மலர்மிசை யவனும் வெந்தொழிற்
பொறிகிள ரரவணைப் புல்கு செல்வனும்
அறிகில வரியவ ரம்பர்ச் செம்பியர்
செறிகழ லிறைசெய்த கோயில் சேர்வரே. ௯

வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுன லம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துள ருமையுந் தாமுமே. ய

அழகரை யடிகளை யம்பர் மேவிய
நிழறிகழ் சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினி லோதுவீர் கொண்மின்
தமிழ்கெழு விரகினன் றமிழ்செய் மாலையே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பிரமபுரிநாதர்; இறைவி - பூங்குழலம்மை.

---

திருநாவுக்கரசு நாயனாரோடு திருவம்பர் மாகாளத்தை வணங்கி வழிபட்ட பிள்ளையார் திருவம்பர்ப் பெருந் திருக்கோயிலை யடைந்து வழிபாடாற்றி 'எரிதரவனல்கை' யென்னுமித் திருப்பதிகத்தை யெடுத்து அதில் பல திருப்பாட்டுக்களில் அத்தலம் கோச்செங்கட்சோழ நாயனரால் திருப்பணி செய்யப் பெற்றமையைச் சிறப்பித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தித் திருக்கடவூருக் கெழுந்தருளினார்.



## திருப்பூவணம் பதிகம் உஎஅ

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலா ரரண மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே. க

வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை
ஆனநல் லருமறை யங்க மோதிய
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே. ௨

வெந்துய ருறுபிணி வினைக டீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே. ௩

வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழிறிகழ் பூவ ணத்துறை
ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை யடிதொழ நன்மை யாகுமே. ௪

குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழிற்றிருப் பூவ ணத்துறை
அருந்திற லவுணர்த மரண மூன்றெய்த
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே. ௫

வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்
நறுமல ரடிதொழ நன்மை யாகுமே. ௬

பறைமல்கு முழவொடு பாட லாடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதோர் கூறினன்
அறைமல்கு கழறொழ வல்ல லில்லையே. ௭

வரைதனை யெடுத்தவல் லரக்க னீண்முடி
விரறனி லடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்
பரவிய வடியவர்க் கில்லை பாவமே. ௮

நீர்மல்கு மலருறை வானு மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவணம்
ஏர்மல்கு மலர்புனைந் தேத்த வின்பமே. ௯

மண்டைகொண் டுழிதரு மதியி றேரரும்
குண்டருங் குணமல* பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணம்
கண்டவ ரடிதொழு தேத்தல் கன்மமே. ௰

புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்
நண்ணிய வருமறை ஞானசம் பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கருக்குடி　　　　　　　　பதிகம் ௨௭௯

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

நனவிலுங் கனவிலு நாளுந் தன்னொளி
நினைவிலு மெனக்குவந் தெய்து நின்மலன்
கனைகடல் வையகந் தொழுக ருக்குடி
அனலெரி யாடுமெம் மடிகள் காண்மினே. ௧

வேதியன் விடையுடை விமல னொன்னலர்
மூதெயி லெரியெழ முனிந்த முக்கணன்
காதியல் குழையினன் கருக்கு டியமர்
ஆதியை யடிதொழ வல்ல வில்லையே. ௨

(பா - ம்.) *குணம்பல.

மஞ்சுறு பொழில்வளம் மலிக ருக்குடி
நஞ்சுறு திருமிட றுடைய நாதனார்
அஞ்சுரும் பார்குழ லரிவை யஞ்சவே
வெஞ்சுரந் தனில்விளை யாட லென்கொலோ. ௩

ஊனுடைப் பிறவியை யறுக்க வுன்னுவீர்
கானிடை யாடலான் பயில்க ருக்குடிக்
கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்
வானவர் தொழுகழல் வாழ்த்தி வாழ்மினே. ௪

சூடுவர் சடையிடைக் கங்கை நங்கையைக்
கூடுவ ருலகிடை யையங் கொண்டொலி
பாடுவ ரிசைபறை கொட்ட நட்டிருள்
ஆடுவர் கருக்குடி யண்ணல் வண்ணமே. ௫

இன்புடை யாரிசை வீணை பூணரா
என்புடை யாரெழின் மேனி மேலெரி
முன்புடை யார்முத லேத்து மன்பருக்
கன்புடை யார்கருக் குடியெம் மண்ணலே. ௬

காலமு ஞாயிறுந் தீயு மாயவர்
கோலமு முடியர வணிந்த கொள்கையர்
சீலமு முடையவர் திருக்க ருக்குடிச்
சாலவு மினிதவ ருடைய தன்மையே. ௭

எறிகடல் புடைதழு விலங்கை மன்னனை
முறிபட வரையிடை யடர்த்த மூர்த்தியார்
கறைபடு பொழின்மதி தவழ்க ருக்குடி
அறிவொடு தொழுமவ ராள்வர் நன்மையே. ௮

பூமனுந் திசைமுகன் றானும் பொற்பமர்
வாமன னறிகிலா வண்ண மோங்கெரி
ஆமென வுயர்ந்தவ னணிக ருக்குடி
நாமன னினில்வர நினைத னன்மையே. ௯

சாக்கியர் சமண்படு கையர் பொய்ம்மொழி
ஆக்கிய வுரைகொளே லருந்தி ருந்நமக்
காக்கிய வரனுறை யணிக ருக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே. ம

கானலில் விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் றன்னெளி
ஆனமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய
ஊனமின் மொழிவலார்க் குயரு மின்பமே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சற்குணநாதர்; இறைவி - சருவாலங்கிருதமின்னம்மை.



## பொது பதிகம் உஅ௯

பஞ்சாக்கரத்திருப்பதிகம்

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன வஞ்செ ழுத்துமே. க

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திர மஞ்செ ழுத்துமே. உ

ஊனிலு யிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞானவி ளக்கினை யேற்றி நன்புலத்
தேனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன வஞ்செ ழுத்துமே. ௩

நல்லவர் தீயரெ னாது நச்சினர்
செல்லல்கெ டச்சிவ முத்தி காட்டுவ
கொல்லந மன்றமர் கொண்டு போமிடத்
தல்லல்கெ டுப்பன வஞ்செ ழுத்துமே. ௪

கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமு மஞ்ச வைம்பொழில்
தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை
அங்கையி லைவிர லஞ்செ ழுத்துமே. ௫

தும்ம லிரும றொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே. ௬

வீடுபி றப்பை யறுத்து மெச்சினர்
பீடைகெ டுப்பன பின்னை நாடொறும்
மாடுகொ டுப்பன மன்னு மாநடம்
ஆடியு கப்பன வஞ்செ ழுத்துமே. ௭

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டையி ராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்டம ளிப்பன வஞ்செ ழுத்துமே. ௮

கார்வண னான்முகன் காணு தற்கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வண மாவன வஞ்செ ழுத்துமே. ௯

புத்தர்ச மண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செ ழுத்துமே. ௰

நற்றமிழ் ஞானசம் பந்த னான்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

*சீகாழியிலே யெழுந்தருளி யிருக்கும் நாட்களில் உபநயனஞ் செய்யும் பருவம் வந்தடைய ஆளுடைய பிள்ளையார் உலகிறந்த சிவஞான முணரப் பெற்றாரேனும் பண்டைய முறைமைப்படிச் செய்யப்பெறும் உபநயனச் சடங்கினை மறையோர்கள் செய்ய மான்றோலோடு கூடிய உபவீதத்தைத் தரித்தருளினார். ஒரு பிறப்பு மெய்தாதவராகிய இவர் இச் சடங்கினால் சாத்திர முறைப்படி யிரு பிறப்பையு மடைந்தாராய்ச் சடங்கினைச் செய்யும் மறையவர்களால் மறை நான்கினையும், அச்சடங்கினுக்குரிய மந்திரத்தையுந் தரப்பெற்றார். தந்தவர்களாய வவர் யாவரும் பிள்ளையாரைத் தமது தியானப் பொருளாகக் கருதி வணங்கித் துதித்து வழிபட்டு அவ் வேதங்களில் தமக்குள்ளனவாய ஐயங்களை யெல்லாங் கேட்டுத் தெளிந்தார்கள். அம் மறையவர்க்கும், உலகவர்க்கும் ஆன்மாக்களை உய்விக்கும் உண்மைப் பொருளைத் தெரிவிக்க விரும்பிய பிள்ளையார் பஞ்சாக்கரத் திருப்பதிக மென்னு மித்திருப்பதிகத்தை யோதி யதில் இரண்டாந் திருப்பாட்டில் வேதியர் யாவரும் தமது சந்திகளிலும் சிறப்பாக அந்தியிலும் ஓதவேண்டிய திருமந்திரம் திருவைந்தெழுத்தே என்று தெரிவிக்குமாறு, 'செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுண் மந்திரம் அஞ்செழுத்துமே' என்று திருவாய் மலர்ந்தருளினார். இப்பதிகமே போதிமங்கையில் திருமுறை யெழுது மன்பர் புத்தநந்தியின் தலையில் இடிவிழுமாறு ஓதியருளியது.*



## திருவிற்கோலம் பதிகம் ௨௮௨

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

உருவினா ருமையொடு மொன்றி நின்றதோர்
திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்
வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய
செருவினா னுறைவிடந் திருவிற் கோலமே. ௧

சிற்றிடை யுமையொரு பங்க னங்கையில்
உற்றதோ ரெரியின னொருச ரத்தினால்
வெற்றிகொ ளவுணர்கள் புரங்கள் வெந்தறச்
செற்றவ னுறைவிடந் திருவிற் கோலமே. உ

ஐயனல் லதிசய னயன்விண் ணோர்தொழும்
மையணி கண்டனார் வண்ண வண்ணம்வான்
பையர வல்குலாள் பாக மாகவும்
செய்யவ னுறைவிடந் திருவிற் கோலமே. ௩

விதைத்தவன் முனிவருக் கறமுன் காலனை
உதைத்தவ னுயிரிழந் துருண்டு வீழ்தரப்
புதைத்தவ னெடுநகர்ப் புரங்கண் மூன்றையும்
சிதைத்தவ னுறைவிடந் திருவிற் கோலமே. ௪

முந்தினான் மூவருண் முதல்வ னாயினான்
கொந்துலா மலர்ப்பொழிற் கூக மேவினான்
அந்திவான் பிறையினா னடியர் மேல்வினை
சிந்துவா னுறைவிடந் திருவிற் கோலமே. ௫

தொகுத்தவ னருமறை யங்க மாகமம்
வகுத்தவன் வளர்பொழிற் கூக மேவினான்
மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்தவ னுறைவிடந் திருவிற் கோலமே.

விரித்தவ னருமறை விரிச டைவெள்ளம்
தரித்தவன் றரியலர் புரங்க ளாசற
எரித்தவ னிலங்கையர் கோனி டர்படச்
சிரித்தவ னுறைவிடந் திருவிற் கோலமே. ௭

* * * * *

திரிதரு புரமெரி செய்த சேவகன்
வரியர வொடுமதி சடையில் வைத்தவன்
அரியொடு பிரமன தாற்ற லானுருத்
தெரியல னுறைவிடந் திருவிற் கோலமே. ௯

சீர்மையில் சமணொடு சீவ ரக்கையர்
நீர்மையி லுரைகள்கொள் ளாத நேசர்க்குப்
பார்மலி பெருஞ்செல்வம் பரிந்து நல்கிடும்
சீர்மையி னானிடந் திருவிற் கோலமே. ௰

கோடல்வெண் பிறையனைக் கூடு மேவிய
சேடனை செழுமதிற் றிருவிற் கோலத்தை
நாடவல் லதமிழ் ஞான சம்பந்தன
பாடல்வல் லார்களுக் கில்லை பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - திரிபுராந்தகர்; இறைவி - திரிபுராந்தகி.

இதுவே கூவமென வழங்குகின்றது.



## திருக்கழுமலம் பதிகம் உ௮உ

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே. ௧

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. ௨

தொண்டணை செய்தொழிற் றுயரறுத் துய்யலாம்
வண்டணை கொன்றையான் மதுமலர்ச் சடைமுடிக்
கண்டுணை நெற்றியான் கழுமல வளநகர்ப்
பெண்டுணை யாகவோர் பெருந்தகை யிருந்ததே. ௩

அயர்வுளோ மென்றுநீ யசைவொழி நெஞ்சமே
நியர்வளை முன்கையா ணேரிழை யவளொடுங்
கயல்வயல் குதிகொளுங் கழுமல வளநகர்ப்
பெயர்பல துதிசெயப் பெருந்தகை யிருந்ததே. ௪

அடைவிலோ மென்றுநீ யயர்வொழி நெஞ்சமே
விடையமர் கொடியினன் விண்ணவர் தொழுதெழுங்
கடையுயர் மாடமார் கழுமல வளநகர்ப்
பெடைநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. ௫

மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல்குற் றிருந்திழை யவளொடும்
பெற்றெனை யாளுடைப் பெருந்தகை யிருந்ததே. ௬

குறைவளை வதுமொழி குறைவொழி நெஞ்சமே
நிறைவளை முன்கையா ணேரிழை யவளொடுங்
கறைவளர் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிறைவளர் சடைமுடிப் பெருந்தகை யிருந்ததே. ௭

அரக்கனை யருவரை யெடுத்தவ னலறிட
நெருக்கினர் விரலினு னீடியாழ் பாடவே
கருக்குவா ளருள்செய்தான் கழுமல வளநகர்ப்
பெருக்குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே. ௮

நெடியவன் பிரமனு நினைப்பரி தாயவர்
அடியொடு முடியறி யாவழ லுருவினன்
கடிகமழ் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிடிநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. ௯

தாருறு தட்டுடைச் சமணர்சாக் கியர்கடம்
ஆருறு சொற்களைந் தடியிணை யடைந்துய்ம்மின்
காருறு பொழில்வளர் கழுமல வளநகர்ப்
பேரறத் தாளொடும் பெருந்தகை யிருந்ததே. ௰

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தவெம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. கக

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு:

ஆளுடைய பிள்ளையார் திருவாலவாயில் பாண்டியரைச் சமண சமயப் படுகுழியினின்றுங் கரையேற்றி உய்வித்துத் திருநீற்று நெறியினை வளர்த்து எழுந்தருளியிருக்கும் நாட்களில், சிவபாத விருதயரும் மற்றும் காழியிலுள்ள அந்தணர்களும் தம் தலைவராய பிள்ளையாரது பிரிவினையாற்றாது வருந்தி மதுரையை யடைந்து அவரை அளவளாவினார்கள். ஆளுடைய பிள்ளையார் அவர்களைக் கண்டபோதே திருத்தோணியின்கண் ணெழுந்தருளித் தமது ஐவகைப் பாசத்தையும் அறுத்தாட்கொண்ட பெருமானது திருவடிகளைச் சிந்தித்துத் தளிர்போன்ற தமது திருக்கைகளைத் தலையின்மீது குவித்து, "அருந்தவத்தீர், எனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட பெருந்தகை யெம்பெருமாட்டி யுடனிருந்ததே" என்று அவர்களை நோக்கி வினவி இத் திருப்பதிகம் பாடி யருளினார்.



## திருந்துதேவன்குடி பதிகம் உஅரு

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழு மடிகள்வே டங்களே. க

வீதிபோக் காவன வினையைவீட் டுவ்வன
ஓதியோர்க் கப்படாப் பொருளையோர் விப்பன
தீதிறே வன்குடித் தேவர்தே வெய்திய
ஆதியந் தம்மிலா வடிகள்வே டங்களே. உ

மானமாக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானையுள் கச்செலும் வழிகள்காட் டுவ்வன
தேனும்வண் டும்மிசை பாடுந்தே வன்குடி
ஆனஞ்சா டும்முடி யடிகள்வே டங்களே. ௩

செவிகளார் விப்பன சிந்தையுட் சேர்வன
கவிகள்பா டுவ்வன கண்குளிர் விப்பன
புவிகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அவிகளுய்க் கப்படு மடிகள்வே டங்களே. ௪

விண்ணுலா வுந்நெறி வீடுகாட் டுந்நெறி
மண்ணுலா வுந்நெறி மயக்கந்தீர்க் குந்நெறி
தெண்ணிலா வெண்மதி தீண்டுதே வன்குடி
அண்ணலா னேறுடை யடிகள்வே டங்களே. ௫

பங்கமென் னப்படர் பழிகளென் னப்படா
புங்கமென் னப்படர் புகழ்களென் னப்படும்
திங்கடோ யும்பொழி றீண்டுதே வன்குடி
அங்கமா றுஞ்சொன்ன வடிகள்வே டங்களே. ௬

கரைதலொன் றும்மிலை கருதவல் லார்தமக்
குரையிலூ னம்மிலை யுலகினின் மன்னுவர்
திரைகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அரையில்வெண் கோவணத் தடிகள்வே டங்களே. ௭

உலகமுட் குந்திறல் லுடையரக் கன்வலி
விலகுபூ தக்கணம் வெருட்டும்வே டத்தின
திலகமா ரும்பொழில் சூழ்ந்ததே வன்குடி
அலர்தயங் கும்முடி யடிகள்வே டங்களே. ௮

துளக்கமில் லாதன தூயதோற் றத்தன
விளக்கமாக் குவ்வன வெறிவண்டா ரும்பொழில்
திளைக்குந்தே வன்குடித் திசைமுக னோடுமால்
அளக்கவொண் ணாவண்ணத் தடிகள்வே டங்களே. ௯

செருமரு தண்டுவர்த் தேரம ணாதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்த மூரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன வடிகள்வே டங்களே. ௰

சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடமோங் கும்பொழின் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கர்க்கடகேச்சுவரர்; இறைவி - அருமருந்தம்மை.



## திருக்கானப்பேர்  பதிகம் ௨௮௪

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பூம்பொழிற் கானப்பே ரண்ணலின்
அடியலா லடைசர ணுடையரோ வடியரே. ௧

நுண்ணிடைப் பேரல்கு னூபுர மெல்லடிப்
பெண்ணினல் லாளையோர் பாகமாப் பேணினான்
கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்
விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே. ௨

வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம்
காவிவாய்ப் பண்செயுங் கானப்பே ரண்ணலை
நாவிவாய்ச் சாந்துளும் பூவுளு ஞானநீர்
தூவிவாய்ப் பெய்துநின் றூட்டுவார் தொண்டரே. ௩

நிறையுடை நெஞ்சுளு நீருளும் பூவுளும்
பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்
கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்
குறையுடை யவர்க்கலாற் களைகிலார் குற்றமே. ௪

ஏனப்பூண் மார்பின்மே லென்புபூண் டீறிலா
ஞானப்பே ராயிரம் பேரினா னண்ணிய
கானப்பே ரூர்தொழுங் காதலார் தீதிலர்
வானப்பே ரூர்புகும் வண்ணமும் வல்லரே. ௫

பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்
வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்
கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்
உள்ளமே கோயிலா வுள்குமென் னுள்ளமே. ௬

மானமா மடப்பிடி வன்கையா லலகிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்
ஊனமா முடம்பினி லுறுபிணி கெடவெண்ணில்
ஞானமா மலர்கொடு நணுகுத னன்மையே. ௭

வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண்
தோளினா னெடுமுடி தொலையவே யூன்றிய
தாளினான் கானப்பேர் தலையினால் வணங்குவார்
நாளுநா ளுயர்வதோர் நன்மையைப் பெறுவரே. ௮

சிலையினான் முப்புரந் தீயெழச் செற்றவன்
நிலையிலா விருவரை நிலைமைகண் டோங்கினான்
கலையினார் புறவிற்றேன் கமழ்தரு கானப்பேர்
தலையினால் வணங்குவார் தவமுடை யார்களே. ௯

உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி
பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்
மறித்தலை மடப்பிடி வளரிளங் கொழுங்கொடி
கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே. ௰

காட்டகத் தாடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளுங் காழியான்
நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - காளையப்பர்; இறைவி - மகமாயி.

இதுவே காளையார்கோயில்.



## திருச்சக்கரப்பள்ளி　　　　　　　　　　　　　பதிகம் உ௪௬

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

படையினார் வெண்மழுப் பாய்புலித் தோலரை
உடையினா ருமையொரு கூறனா ரூர்வதோர்
விடையினார் வெண்பொடிப் பூசியார் விரிபுனல்
சடையினா ருறைவிடஞ் சக்கரப் பள்ளியே. ௧

பாடினா ரருமறை பனிமதி சடைமிசைச்
சூடினார் படுதலை துன்னெருக் கதனொடும்
நாடினா ரிடுபலி நண்ணியோர் காலனைச்
சாடினார் வளநகர் சக்கரப் பள்ளியே. ௨

மின்னினார் சடைமிசை விரிகதிர் மதியமும்
பொன்னினார் கொன்றையும் பொறிகிள ரரவமும்
துன்னினா ருலகெலாந் தொழுதெழ நான்மறை
தன்னினார் வளநகர் சக்கரப் பள்ளியே. ௩

நலமலி கொள்கையார் நான்மறை பாடலார்
வலமலி மழுவினர் மகிழுமூர் வண்டறை
மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழி சக்கரப் பள்ளியே. ௪

வெந்தவெண் பொடியணி வேதியர் விரிபுனல்
அந்தமி லணிமலை மங்கையோ டமருமூர்
கந்தமார் மலரொடு காரகில் பன்மணி
சந்திரே டணைபுனற் சக்கரப் பள்ளியே. ௫

பாங்கினன் முப்புரம் பாழ்பட வெஞ்சிலை
வாங்கினர் வானவர் தானவர் வணங்கிட
ஓங்கினா ருமையொரு கூறொடு மொலிபுனல்
தாங்கினா ருறைவிடஞ் சக்கரப் பள்ளியே. ௬

பாரினர் தொழுதெழு பரவுபல் லாயிரம்
பேரினர் பெண்ணொரு கூறனர் பேரொலி
நீரினர் சடைமுடி நிரைமலர்க் கொன்றையந்
தாரினர் வளநகர் சக்கரப் பள்ளியே. ௭

முதிரிலா வெண்பிறை சூடினர் முன்னநாள்
எதிரிலா முப்புர மெரிசெய்தார் வரைதனால்
அதிரிலா வல்லரக் கன்வலி வாட்டிய
சதிரினர் வளநகர் சக்கரப் பள்ளியே. ௮

துணிபடு கோவணஞ் சுண்ணவெண் பொடியினர்
பணிபடு மார்பினர் பனிமதிச் சடையினர்
மணிவண னவனொடு மலர்மிசை யானையுந்
தணிவினர் வளநகர் சக்கரப் பள்ளியே. ௯

உடம்புபோர் சீவர ருண்டொழிற் சமணர்கள்
விடம்படு முரையவை மெய்யல விரிபுனல்
வடம்படு மலர்கொடு வணங்குமின் வைகலும்
தடம்புனல் சூழ்தரு சக்கரப் பள்ளியே. ௰

தண்வயல் புடையணி சக்கரப் பள்ளியெம்
கண்ணுத லவனடிக் கழுமல வளநகர்
நண்ணிய செந்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
பண்ணிய விவைசொலப் பறையுமெய்ப் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - ஆலந்துறைநாதர்; இறைவி - அல்லியங்கோதை.



## திருமழபாடி பதிகம் உ அ சு

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

காலையார் வண்டினங் கிண்டிய காருறும்
சோலையார் பைங்கிளி சொற்பொருள் பயிலவே
வேலையார் விடமணி வேதியன் விரும்பிடம்
மாலையார் மதிதவழ் மாமழ பாடியே. க

கறையணி மிடறுடைக் கண்ணுத லண்ணிய
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுமூர்
துறையணி குருகினந் தூமலர் துதையவே
மறையணி நாவினன் மாமழ பாடியே. உ

அந்தணர் வேள்வியு மருமறைத் துழனியும்
செந்தமிழ்க் கீதமுஞ் சீரினால் வளர்தரப்
பந்தணை மெல்விர லாளொடும் பயில்விடம்
மந்தம்வந் துலவுசீர் மாமழ பாடியே. ௩

அத்தியி னுரிதனை யழகுறப் போர்த்தவன்
முத்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்
பத்தியாற் பாடிடப் பரிந்தவர்க் கருள்செயும்
அத்தனு ருறைவிடம் மணிமழ பாடியே. ச

கங்கையார் சடையிடைக் கதிர்மதி யணிந்தவன்
வெங்கண்வா ளரவுடை வேதியன் றீதிலாச்
செங்கயற் கண்ணுமை யாளொடுஞ் சேர்விடம்
மங்கைமார் நடம்பயின் மாமழ பாடியே. ரு

பாலனா ராருயிர் பாங்கினா லுணவரும்
காலனா ருயிர்செகக் காலினாற் சாடினான்
சேலினார் கண்ணினா டன்னொடுஞ் சேர்விடம்
மாலினார் வழிபடு மாமழ பாடியே. சு

விண்ணிலா ரிமையவர் மெய்ம்மகிழ்ந் தேத்தவே
எண்ணிலார் முப்புர மெரியுண நகைசெய்தார்
கண்ணினாற் காமனைக் கனலெழக் காய்ந்தவெம்
அண்ணலா ருறைவிட மணிமழ பாடியே. எ

கரத்தினாற் கயிலையை யெடுத்தகா ரரக்கன
சிரத்தினை யூன்றலுஞ் சிவனடி சரணெனா
இரத்தினாற் கைந்நரம் பெடுத்திசை பாடலும்
வரத்தினான் மருவிட மாமழ பாடியே. அ

ஏடுலா மலர்மிசை யயனெழின் மாலுமாய்
நாடினார்க் கரியசீர் நாதனா ருறைவிடம்
பாடெலாம் பெண்ணையின் பழம்விழப் பைம்பொழில்
மாடெலா மல்குசீர் மாமழ பாடியே. கூ

உறிபிடித் தூத்தைவாய்ச் சமணொடு சாக்கியர்
நெறிபிடித் தறிவிலா நீசர்சொற் கொள்ளன்மின்
பொறிபிடித் தரவினம் பூணெனக் கொண்டுமான்
மறிபிடித் தானிட மாமழ பாடியே. ௰

ஞாலத்தா ராதிரை நாளினா னொடொறும்
சீலத்தான் மேவிய திருமழ பாடியை
ஞாலத்தான் மிக்கசீர் ஞானசம் பந்தன்சொல்
கோலத்தாற் பாடுவார் குற்றமற் றார்களே. கக

திருச்சிற்றம்பலம்

## மேலைத்திருக்காட்டுப்பள்ளி                    பதிகம் உஅள

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி யுண்பதும் வெண்டலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தந் நீர்மையே. க

நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனா ரழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனார் கழலிணை போற்றுதல் பொருளதே. உ

பண்ணினா ரருமறை பாடினார் நெற்றியோர்
கண்ணினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
விண்ணினார் விரிபுனன் மேவினார் சடைமுடி
அண்ணலா ரெம்மையா ளுடையவெம் மடிகளே. ௩

பணங்கொணா கம்மரைக் கார்ப்பது பல்பலி
உணங்கலோ டுண்கல னுறைவது காட்டிடைக்
கணங்கள்கூ டித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தந் நீர்மையே. ச

வரையுலாஞ் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலா மிடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாங் கங்கையுந் திங்களுஞ் சூடியங்
கரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே. ரு

வேதனார் வெண்மழு வேந்தினா ரங்கமுன்
ஓதினா ருமையொரு கூறனா ரொண்குழைக்
காதினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதனார் திருவடி நாளுநின் றேத்துமே. சு

மையினார் மிடறனார் மான்மழு வேந்திய
கையினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
தையலோர் பாகமாத் தண்மதி சூடிய
ஐயனா ரடிதொழ வல்லலொன் றில்லையே. ௭

சிலைதனான் முப்புரஞ் செற்றவன் சீரினார்
மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்
கலைதனார் புறவணி மல்குகாட் டுப்பள்ளி
தலைதனால் வணங்கிடத் தவமது வாகுமே. ௮

செங்கண்மா றிகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையாற் றொழுதெழத் தழலுரு வாயினான்
கங்கையார் சடையினான் கருதுகாட் டுப்பள்ளி
அங்கையாற் றொழுமவர்க் கல்லலொன் றில்லையே. ௯

போதியார் பிண்டியா ரென்றவப் பொய்யர்கள்
வாதினா லுரையவை மெய்யல வைகலும்
காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
ஏரினாற் றொழுதெழ வின்பம்வந் தெய்துமே. ௰

பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை யவைவல்ல வணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொல்லப் பறையுமெய்ப் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - தீயாடியப்பர்; இறைவி - வார்கொண்டமுலையம்மை.



## திருவரதைப்பெரும்பாழி பதிகம் உ அ அ

### பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

பைத்தபாம் போடரைக் கோவணம் பாய்புலி
மொய்த்தபேய் கண்முழக் கம்முது காட்டிடை
நித்தமா கந்நட மாடிவெண் ணீறணி
பித்தர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. க

கயலசே லகருங் கண்ணியர் நாடொறும்
பயலைகொள் ளப்பலி தேர்ந்துழல் பான்மையார்
இயலைவா னோர்நினைந் தோர்களுக் கெண்ணரும்
பெயரர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. உ

கோடல்சா லவ்வுடை யார்கொலை யானையின்
மூடல்சா லவ்வுடை யார்முனி கானிடை
ஆடல்சா லவ்வுடை யாரழ காகிய
பீடர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. ங

மண்ணர்நீ ராரழ லார்மலி காலினர்
விண்ணர்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணர்பா டலுடை யாரொரு பாகமும்
பெண்ணர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. ச

மறையர்வா யின்மொழி மானொடு வெண்மழுக்
கறைகொள்சூ லம்முடைக் கையர்கா ரார்தரும்
நறைகொள்கொன் றைநயந் தார்தருஞ் சென்னிமேல்
பிறையர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. ரு

புற்றர வம்புலித் தோலரைக் கோவணம்
தற்றிர வின்னட மாடுவர் தாழ்தரு
சுற்றமர் பாரிடந் தொல்கொடி யின்மிசைப்
பெற்றர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. சா

துணையிறுத் தஞ்சுரி சங்கமர் வெண்பொடி
இணையிலேற் றையுகந் தேறுவ ரும்மெரி
கணையினன் முப்புரஞ் செற்றவர் கையினில்
பிணையர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. ௭

சரிவிலா வல்லரக் கன்றடந் தோடலை
நெரிவிலா ரவ்வடர்த் தார்நெறி மென்குழல்
அரிவைபா கம்மமர்ந் தாரடி யாரொடும்
பிரிவில்கோ யில்லர தைப்பெரும் பாழியே. ௮

வரியரா வென்பணி மார்பினர் நீர்மல்கும்
எரியரா வுஞ்சடை மேற்பிறை யேற்றவர்
கரியமா லோடயன் காண்பரி தாகிய
பெரியர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. ௯

நாணிலா தசமண் சாக்கியர் நாடொறும்
ஏணிலா தம்மொழி யவ்வெழி லாயவர்
சேணுலா மும்மதி றீயெழச் செற்றவர்
பேணுகோ யில்லர தைப்பெரும் பாழியே. ௰

நீரினார் புன்சடை நிமலனுக் கிடமெனப்
பாரினார் பரவர தைப்பெரும் பாழியைச்
சீரினார் காழியுண் ஞானசம் பந்தன்செய்
ஏரினார் தமிழ்வல்லார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பாதாளவரதர்; இறைவி - அலங்காரவம்மை.



## திருமயேந்திரப்பள்ளி

பதிகம் உ௮௬

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

திரைதரு பவளமுஞ் சீர்திகழ் வயிரமுங்
கரைதரு மகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலா லெயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
அரவரை யழகனை யடியிணை பணிமினே. ௧

கொண்டல்சேர் கோபுரங் கோலமார் மாளிகை
கண்டலுங் கைதையுங் கமலமார் வாவியும்
வண்டுலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியிற்
செண்டுசேர் விடையினான் றிருந்தடி பணிமினே. உ

கோங்கிள வேங்கையுங் கொழுமலர்ப் புன்னையுந்
தாங்குதேன் கொன்றையுந் தகுமலர்க் குரவமு
மாங்கரும் பும்வயன் மயேந்திரப் பள்ளியுள்
ஆங்கிருந் தவன்கழ லடியிணை பணிமினே. ௩

வங்கமார் சேணுயர் வருகுறி யான்மிகு
சங்கமா ரொலியகி றருபுகை கமழ்தரு
மங்கையோர் பங்கினன் மயேந்திரப் பள்ளியுள்
எங்கணு யகன்றன திணையடி பணிமினே. ௪

நித்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்
மைத்திகழ் கண்டனன் மயேந்திரப் பள்ளியுட்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே. ௫

சந்திரன் கதிரவன் றகுபுக ழயனொடும்
இந்திரன் வழிபட விருந்தவெம் மிறையவன்
மந்திர மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்
அந்தமி லழகனை யடிபணிந் துய்ம்மினே. ௬

சடைமுடி முனிவர்கள் சமைவொடும் வழிபட
நடநவில் புரிவின னறவணி மலரொடு
படர்சடை மதியினன் மயேந்திரப் பள்ளியுள்
அடல்விடை யுடையவ னடிபணிந் துய்ம்மினே. ௭

சிரமொரு பதுமுடைச் செருவலி யரக்கனைக்
கரமிரு பதுமிறக் கனவரை யடர்த்தவன்
மரவமர் பூம்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
அரவமர் சடையனை யடிபணிந் துய்ம்மினே. ௮

நாகணைத் துயில்பவ னலமிகு மலரவன்
ஆகணைந் தவர்கழ லணையவும் பெறுகிலர்
மாகணைந் தலர்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
யோகணைந் தவன்கழ லுணர்ந்திருந் துய்ம்மினே. ௯

உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்
மடைவளர் வயலணி மயேந்திரப் பள்ளியுள்
இடமுடை யீசனை யிணையடி பணிமினே. ௰

வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியுள்
நம்பனார் கழலடி ஞானசம் பந்தன்சொல்
நம்பர மிதுவென நாவினு னவில்பவர்
உம்பரா ரெதிர்கொள வுயர்பதி யணைவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - திருமேனியழகர்; இறைவி - வடிவம்மை.



## திருவேடகம்                                                                 பதிகம் உகூ0

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னிய றிருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட வடியவர்
இன்னிசை பாடல ரேடகத் தொருவனே. க

கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி
வடிவுற வமைதர மருவிய வேடகத்
தடிகளை யடிபணிந் தரற்றுமி னன்பினால்
இடிபடும் வினைகள்போ யில்லைய தாகுமே. உ

குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை
வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி
செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்
கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே. ங

ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறும்
கோலமார் தருவிடைக் குழகனு றுறைவிடம்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்
சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே.

வரியணி நயனிநன் மலைமகண் மறுகிடக்
கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்
பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய
எரியவ னுறைவிட மேடகக் கோயிலே. ரு

பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய வேடகத்
தையனை யடிபணிந் தரற்றுமின் னடர்தரும்
வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே. சு

*          *          *          *          *          எ

தடவரை யெடுத்தவன் றருக்கிறத் தோளடர்
படவிர லூன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவர லெருக்கொடு வன்னியு மத்தமும்
இடமுடைச் சடையின னேடகத் திறைவனே. ௮

பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்
தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற
அன்னமா மயனுமா லடிமுடி தேடியும்
இன்னவா றெனவொணா னேடகத் தொருவனே. ௯

குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்
பண்டியைப் பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்
வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்
இண்டைசேர்க் குஞ்சடை யேடகத் தெந்தையே. ௰

கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை
நாடுதென் புகலியுண் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - ஏடகநாதர்; இறைவி - உமாதேவி.

---

**பதிக வரலாறு:**

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாலவாயில் சமணர்களோடு செய்த புனல் வாதத்தில் 'வாழ்க வந்தண' ரெனும் திருப்பாசுரத்தை யெழுதிய திருவேட்டை வைகையாற்றில் தமது திருக்கரத்தா லிட்டருளினர். அத்திருவேடு தன்கண் ணெழுதியதே பொருளென உலகத்தவர்களுக்குக் காட்டி நீரைக்கிழித்து அதிவேகமாக எதிரேறிச் சென்றது. அப்போது அவ்வேட்டினை யெடுக்கும் பொருட்டுக் காற்றினும் கடுகச் செல்லும் கடும்பரி ஏறிக்கொண்டு கோற்றொழில் திருத்தவல்ல குலச்சிறையார் அதன்பின் சென்றார். அதனை யறிந்த பிள்ளையார் அவ்வேடு தங்கும்பொருட்டு இத்திருப்பதிகத்தைப் பாடியருளப் பின்சென்ற குலச்சிறைநாயனார் திருவேடகக் கோயிலின் மாடு மிக்க



சமணரைக் கழுவிலேற்றியது

நீர் நடுவுட் சென்று அதனை எடுத்துக் கொணர்ந்து பிள்ளையாரது திருவடிகளில் வணங்கி அவரிடத்துக் கொடுத்தருளினார். அவரும் சபையோரெல்லோருக்குங் காட்டியருள அதனைக்கண்ட திருக்கூட்டத்தினரெல்லோரும் கடலொலியினு மிகுமாறு அரவொலி செய்தார்கள்.



## திருவுசாத்தானம் பதிகம் உகக

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்னநு மான்றொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. க

கொல்லையே றுடையவன் கோவண வாடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுபதி நறைகமழ்
தில்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே. உ

தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
ஊமனார் தங்கனா வாக்கினா னொருநொடிக்
காமனா ருடல்கெடக் காய்ந்தவெங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே. ௩

மறிதரு கரத்தினான் மால்விடை யேறியான்
குறிதரு கோலநற் குணத்தினா ரடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலு நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. ௪

*        *        *        *        *        ௫

*        *        *        *        *        ௬

பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினி னல்லினம்
தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே. ௭

மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
சடசட வெடுத்தவன் றலைபத்து நெரிதர
அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. ௮

ஆணலார் பெண்ணலா ரயனொடு மாலுக்கும்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடம்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. ௯

கானமார் வாழ்க்கையான் காரமண் டேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீ ருரைமினுய் யவெனில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்
தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே. ௰

வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண் டமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மந்திரபுரீச்சுவரர்; இறைவி - பெரியநாயகி.



## திருமுதுகுன்றம்　　　　　　　　　　　　　　　　பதிகம் உ௲உ

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

வண்ணமா மலர்கொடு வானவர் வழிபட
அண்ணலா ராயிழை யாளொடு மமர்விடம்
விண்ணின்மா மழைபொழிந் திழியவெள் ளருவிசேர்
திண்ணிலார் புறவணி திருமுது குன்றமே. க

வெறியுலாங் கொன்றையந் தாரினன் மேதகு
பொறியுலா மரவசைத் தாடியோர் புண்ணியன்
மறியுலாங் கையினன் மங்கையோ டமர்விடம்
செறியுளார் புறவணி திருமுது குன்றமே. உ

ஏறினார் விடைமிசை யிமையவர் தொழவுமை
கூறனார் கொல்புலித் தோலினார் மேனிமேல்
நீறனார் நிறைபுனற் சடையனார் நிகழ்விடம்
தேறலார் பொழிலணி திருமுது குன்றமே. ௩

உரையினா ருறுபொரு ளாயினா னுமையொடும்
விரையினார் கொன்றைசேர் சடையினார் மேவிடம்
உரையினா லொலியென வோங்குமுத் தாறுமெய்த்
திரையினா லெறிபுனற் றிருமுது குன்றமே. ௪

கடியவா யினகுரற் களிற்றினைப் பிளிறவோர்
இடியவெங் குரலினோ டாளிசென் றிடுநெறி
வடியவாய் மழுவினன் மங்கையோ டமர்விடம்
செடியதார் புறவணி திருமுது குன்றமே. ரு

கானமார் கரியினீ ருரிவையார் பெரியதோர்
வானமார் மதியினோ டரவர்தா மருவிடம்
ஊனமா யினபிணி யவைகெடுத் துமையொடும்
தேனமார் பொழிலணி திருமுது குன்றமே. சா

மஞ்சர்தா மலர்கொடு வானவர் வணங்கிட
வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே
அஞ்சொலா ளுமையொடும் மமர்விட மணிகலைச்
செஞ்சொலார் பயிறருந் திருமுது குன்றமே. ௭

காரினா ரமர்தருங் கயிலைநன் மலையினை
ஏரினார் முடியிரா வணனெடுத் தானிற
வாரினார் முலையொடும் மன்னினார் மருவிடம்
சீரினார் திகழ்தருந் திருமுது குன்றமே. ௮

ஆடினார் கானகத் தருமறை யின்பொருள்
பாடினார் பலபுகழ்ப் பரமனா ரிணையடி
ஏடினார் மலர்மிசை யயனுமா லிருவரும்
தேடினா ரறிவொணார் திருமுது குன்றமே. ௯

மாசுமெய் தூசுகொண் டுழல்சமண் சாக்கியர்
பேசுமெய் யுளவல்ல பேணுவீர் காணுமின்
வாசமார் தருபொழில் வண்டினம் மிசைசெயத்
தேசமார் புகழ்மிகுந் திருமுது குன்றமே. ௰

திண்ணினார் புறவணி திருமுது குன்றரை
நண்ணினான் காழியுண் ஞானசம் பந்தன்சொல்
எண்ணினா னீரைந்து மாலையு மியலுமாப்
பண்ணினாற் பாடுவார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருத்தென்குடித்திட்டை — பதிகம் ௨௱௫

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

முன்னைநான் மறையவை முறைமுறை குறையொடும்
தன்னதா டொழுதெழ நின்றவன் றன்னிடம்
மன்னுமா காவிரி வந்தடி வருடநல்
செந்நெலார் வளவயற் றென்குடித் திட்டையே. ௧

மகரமா டுங்கொடி மன்மத வேடனை
நிகரலா காநெருப் பெழவிழித் தானிடம்
பகரபா ணித்திலம் பன்மக ரத்தொடும்
சிகரமா ளிகைதொகுந் தென்குடித் திட்டையே. உ

கருவினா லன்றியே கருவெலா மாயவன்
உருவினா லன்றியே யுருவுசெய் தானிடம்
பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்
திருவினான் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே. ௩

உண்ணிலா வாவியா யோங்குதன் றன்மையை
விண்ணிலா ரறிகிலா வேதவே தாந்தனூர்
எண்ணிலா ரெழின்மணிக் கனகமா ளிகையிளந்
தெண்ணிலா விரிதருந் தென்குடித் திட்டையே. ௪

வருந்திவா னோர்கள்வந் தடையமா நஞ்சுதான்
அருந்தியா ரமுதவர்க் கருள்செய்தா னமருமூர்
செருந்திபூ மாதவிப் பந்தர்வண் செண்பகம்
திருந்துநீள் வளர்பொழிற் றென்குடித் திட்டையே. ரு

ஊறினா ரோசையுள் ளொன்றினா ரொன்றிமால்
கூறினா ரமர்தருங் குமரவே டாதையூர்
ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே. சா

கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்
வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயற் றென்குடித் திட்டையே. எ

மாலொடும் பொருதிறல் வாளரக் கன்னெரிந்
தோலிடும் படிவிர லொன்றுவைத் தானிடம்
காலொடுங் கனகமூக் குடன்வரக் கயல்வரால்
சேலொடும் பாய்வயற் றென்குடித் திட்டையே. அ

நாரணன் றன்னொடு நான்முகன் றானுமாய்க்
காரணன் னடிமுடி காணவொண் ணானிடம்
ஆரணங் கொண்டுபூ சுரர்கள்வந் தடிதொழச்
சீரணங் கும்புகழ்த் தென்குடித் திட்டையே. ௯

குண்டிகைக் கையுடைக் குண்டரும் புத்தரும்
பண்டுரைத் தேயிடும் பற்றுவிட் டீர்தொழும்
வண்டிரைக் கும்பொழிற் றண்டலைக் கொண்டலார்
தெண்டிரைத் தண்புனற் றென்குடித் திட்டையே. ௰

தேனலார் சோலைசூழ் தென்குடித் திட்டையைக்
கானலார் கடிபொழில் சூழ்தருங் காழியுள்
ஞானமார் ஞானசம் பந்தன செந்தமிழ்
பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பசுபதிநாதர்; இறைவி - உலகநாயகி.



## திருக்காளத்தி பதிகம் ௨௯௪

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. ௧

ஆலமா மரவமோ டமைந்தசீர்ச் சந்தனம்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே
காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. ௨

கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினில்
ஆங்கமர் காளத்தி யடிகளை யடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. ௩

கரும்புதேன் கட்டியுங் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
ஒருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவா ரவர்கடாம் விண்ணுல காள்வரே. ௪

வரைதரு மகிலொடு மாமுத்த முந்தியே
திரைதரு முகலியின் கரையினிற் றேமலர்
விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவன்
நிரைதரு கழலிணை நித்தலு நினைமினே. ௫

* * * * * ௬

* * * * * ௭

முத்துமா மணிகளு முழுமலர்த் திரள்களும்
எத்துமா முகலியின் கரையினி லெழில்பெறக்
கத்திட வரக்கனைக் கால்விர லூன்றிய
அத்தன்றன் காளத்தி யணைவது கருமமே. ௮

மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி
நண்ணுமா முகலியின் கரையினி னன்மைசேர்
வண்ணமா மலரவன் மாலவன் காண்கிலா
அண்ணலார் காளத்தி யாங்கணைந் துய்ம்மினே. ௯

வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்
பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்
ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர
வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. ௰

அட்டமா சித்திக ளணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - காளத்திநாதர்; இறைவி - ஞானப்பூங்கோதை.



## திருப்பிரமபுரம் பதிகம் ௨௯௫

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

கரமுனம்மல ராற்புனன்மலர் தூவியேகலந் தேத்துமின்
பரமனூர்பல பேரினாற்பொலி பத்தர்சித்தர்க டாம்பயில்
வரமுன்னவ்வருள் செய்யவல்லவெம் மையனாடொறு மேயசீர்ப்
பிரமனூர்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்னருள் பேணியே. க

விண்ணிலார்மதி சூடினான்விரும் பும்மறையவன் றன்றலை
உண்ணநன்பலி பேணினானுல கத்துளூனுயி ரான்மலைப்
பெண்ணினார்திரு மேனியான்பிர மாபுரத்துறை கோயிலுள்
அண்ணலாரரு ளாளனாயமர் கின்றவெம்முடை யாதியே. உ

எல்லையில்புக ழாளனும்மிமை யோர்கணத்துடன் கூடியும்
பல்லையார்தலை யிற்பலியது கொண்டுகந்த படிறனூந்
தொல்லைவையகத் தேறுதொண்டர்க ளேமலர்சொரிந் தேத்தவே
மல்லையம்பொழி றேன்பில்கும்பிர மாபுரத்துறை மைந்தனே. ௩

அடையலார்புரஞ் சீறியந்தண ரேத்தமாமட மாதொடும்
பெடையெலாங்கடற் கானல்புல்கும்*பிர மாபுரத்துறை கோயிலான்
றொடையலார்நறுங் கொன்றையான்றொழி லேபரவிநின் றேத்தினால்
இடையிலார்சிவ லோகமெய்துதற் கீதுகாரணங் காண்மினே. ச



(பா - ம்.) * கடற்கான்புகும்.

அன்று முப்புரஞ் செற்ற வழகநின்
துன்று பொற்கழல் பேணா வருகரைத்
தென்ற வாதுசெ யத்திரு வுள்ளமே
கன்று சாக்கியர் காணாத் தலைவனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. ௰

கூட லாலவாய்க் கோனை விடைகொண்டு
வாடன் மேனி யமணரை வாட்டிட
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தவிப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு :**

பாண்டிமாதேவியார் குலச்சிறையார் என்னும் இவர்கள் வேண்டு கோளினுக் கியைந்து பாண்டியர் சுரம் தீர்க்கவும், சமணரை வாதில் வெல்லவும் எழுந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருக்கோயிலை யடைந்து இறைவனைக் 'காட்டுமாவதுரி' என்னும் பதிகம்பாடி வேண்டி இறைவன் திருவுளத்தை யறிந்த பின்னர்ச் சமணரை வாதில் வென்றழிக்க வும் இறைவன் புகழ் உலகெங்கும் பரவவும் இப்பதிகம் பாடித் துதித் தருளினர்.



## திருக்கயிலாயமுந் திருவானைக்காவுந் திருமயேந்திரமுந் திருவாரூரும் - பதிகம் ௩௱௪௭

கூடற்சதுக்கம்

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மண்ணது வுண்டரி மலரோன்காணா
வெண்ணாவல் விரும்புமயேந்திரரும்
கண்ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணலா ரூராதி யானைக்காவே. ௧

வந்துமா லயனவர் காண்பரியார்
வெந்தவெண் ணீறணி மயேந்திரரும்
கந்தவார் சடையுடைக் கயிலையாரும்
அந்தண ரூராதி யானைக்காவே. ௨

மாலயன் றேடிய மயேந்திரரும்
காலனை யுயிர்கொண்ட கயிலையாரும்
வேலைய தோங்கும்வெண் ணாவலாரும்
ஆலையா ரூராதி யானைக்காவே. ௩

கருடனை யேறரி யயனோர்காணார்
வெருள்விடை யேறிய மயேந்திரரும்
கருடரு கண்டத்தெங் கயிலையாரும்
அருளண ரூராதி யானைக்காவே. ௪

மதிசூதன னான்முகன் வணங்கரியார்
மதியது சொல்லிய மயேந்திரரும்
கதிர்முலை புல்கிய கயிலையாரும்
அதியண ரூராதி யானைக்காவே. ௫

சக்கரம் வேண்டுமால் பிரமன்காண
மிக்கவர் கயிலை மயேந்திரரும்
தக்கனைத் தலையரி தழலுருவர்
அக்கணி யவராரூ ரானைக்காவே. ௬

கண்ணனு நான்முகன் காண்பரியார்
வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்
அண்ணலா ரூராதி யானைக்காவே. ௭

கடல்வண்ண னான்முகன் காண்பரியார்
தடவரை யரக்கனைத் தலைநெரித்தார்
விடமது வுண்டவெம் மயேந்திரரும்
அடல்விடையாரா ரூராதி யானைக்காவே. ௮

ஆதிமா லயனவர் காண்பரியார்
வேதங்க டுதிசெயு மயேந்திரரும்
காதிலொர் குழையுடைக் கயிலையாரும்
ஆதியா ரூரெந்தை யானைக்காவே. ௯

அறிவி லமண்புத்த ரறிவுகொள்ளேல்
வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்
மறிகட லோனயன் றேடத்தானும்
அறிவரு கயிலையோ னானைக்காவே. ௰

ஏனமா லயனவர் காண்பரியார்
கானமார் கயிலைநன் மயேந்திரரும்
ஆனவா ரூராதி யானைக்காவை
ஞானசம் பந்தன் றமிழ்சொல்லுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருப்பிரமபுரம் பதிகம் ௩௬௮

ஈரடி

### பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வரமதேகொளா வுரமதேசெயும்
புரமெரித்தவன் பிரமநற்புரத்
தரனனாமமே பரவுவார்கள்சீர்
விரவுநீள் புவியே. ௧

சேணுலாமதில் வேணுமண்ணுளோர்
காணமன்றலார் வேணுநற்புரத்
தாணுவின்கழல் பேணுகின்றவ
ராணியொத் தவரே. ௨

அகலமார்தரைப் புகலுநான்மறைக்
கிகலியோர்கள்வாழ் புகலிமாநகர்ப்
பகல்செய்வோனெதிர்ச் சகலசேகர
னகிலநா யகனே. ௩

துங்கமாகரி பங்கமாவடுஞ்
செங்கையானிகழ் வெங்குருத்திகழ்
அங்கணனடி தங்கையாற்றொழத்
தங்குமோ வினையே. ௪

காணியொண்பொருட் கற்றவர்க்கீகை
யுடைமையோரவர் காதல்செய்யுநற்
சேணிவண்புரத் தாணியென்பவர்
தூமதி யினரே. ௫

ஏந்தராவெதிர் வாய்ந்தநுண்ணிடைப்
பூந்தணோதியாள் சேர்ந்தபங்கினன்
பூந்தராய்தொழு மாந்தர்மேனிமேற்
சேர்ந்திரா வினையே. ௬

சுரபுரத்தினைத் துயர்செய்தாரகன்
றுஞ்சவெஞ்சினக் காளியைத்தருஞ்
சிரபுரத்துளா னென்னவல்லவர்
சித்திபெற் றவரே. ௭

உறவுமாகியற் றவர்களுக்குமா
நெதிகொடுத்துநீள் புவியிலங்குசீர்ப்
புறவமாநகர்க் கிறைவனேயெனத்
தெறகிலா வினையே. ௮

பண்புசேரிலங் கைக்குநாதனன்
முடிகள்பத்தையுங் கெடநெரித்தவன்
சண்பையாதியைத் தொழுமவர்களைச்
சாதியா வினையே. ௯

ஆழியங்கையிற் கொண்டமாலய
னறிவொணாததோர் வடிவுகொண்டவன்
காழிமாநகர்க் கடவுணாமமே
கற்றனற் றவமே. ௰

விச்சையொன்றிலாச் சமணர்சாக்கியப்
பிச்சர்தங்களைக் கரிசறுத்தவன்
கொச்சைமாநகர்க் கன்புசெய்பவர்
குணங்கள் கூறுமினே. ௧௧

கழுமலத்தினுட் கடவுள்பாதமே
கருதுஞானசம் பந்தனின்றமிழ்
முழுதும்வல்லவர்க் கின்பமேதரு
முக்கணெம் மிறையே. ௧௨

திருச்சிற்றம்பலம்



## திருவீழிமிழலை பதிகம் ௩௬௧

௩௰௮

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

வேலினேர்தரு கண்ணினாளுமை
பங்கனங்கணன் மிழலைமாநகர்
ஆலநீழலின் மேவினானடிக்
கன்பர்துன் பிலரே. ௧

விளங்குநான்மறை வல்லவேதியர்
மல்குசீர்வளர் மிழலையானடி
உளங்கொள்வார்தமை யுளங்கொள்வார்வினை
யொல்லையா சறுமே. ௨

விசையினொடெழு பசையுநஞ்சினை
யசைவுசெய்தவன் மிழலைமாநகர்
இசையுமீசனை நசையின்மேவினான்
மிசைசெயா வினையே. ௩

வென்றிசேர்கொடி மூடுமாமதிண்
மிழலைமாநகர் மேவிநாடொறும்
நின்றவாதிதன் னடிநினைப்பவர்
துன்பமொன் றிலரே. ௪

போதகந்தனை யுரிசெய்தோன்புய
னேர்வரும்பொழின் மிழலைமாநகர்
ஆதரஞ்செய்த வடிகள்பாதம
லாலொர்பற் றிலமே. ௫

தக்கன்வேள்வியைச் சாடினார்மணி
தொக்கமாளிகை மிழலைமேவிய
நக்கனாரடி தொழுவர்மேல்வினை
நாடொறுங் கெடுமே. ௬

போரணாவுமுப் புரமெரித்தவன்
பொழில்கள்சூழ்தரு மிழலைமாநகர்ச்
சேருமீசனைச் சிந்தைசெய்பவர்
தீவினை கெடுமே. ௭

இரக்கமிஃறொழி லரக்கனாருட
னெருக்கினான்மிகு மிழலையானடி
சிரக்கொள்பூவென வொருக்கினார்புகழ்
பரக்குநீள் புவியே. ௮

துன்றுபூமகன் பன்றியானவ
னொன்றுமோர்கிலா மிழலையானடி
சென்றுபூம்புன னின்றுதூவினார்
நன்றுசேர் பவரே. ௯

புத்தர்கைச்சமண் பித்தர்பொய்க்குவை
வைத்தவித்தகன் மிழலைமாநகர்
சித்தம்வைத்தவ ரித்தலத்தினுண்
மெய்த்தவத் தவரே. ௰

சந்தமார்பொழின் மிழலையீசனைச்
சண்பைஞானசம் பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழ் பத்தும்வல்லவர்
பத்தரா குவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருப்பல்லவனீச்சரம் பதிகம் ௨௭௰

௩௭டி

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பரசுபாணியர் பாடல்வீணையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தரசுபேணி நின்று
ரிவர்தன்மை யறிவாரார். ௧

பட்டநெற்றியர் நட்டமாடுவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திட்டமா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௨

பவளமேனியர் திகழுநீற்றினர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தழகரா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௩

பண்ணில்யாழினர் பயிலுமொந்தையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தண்ணலா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௪

பல்லிலோட்டினர் பலிகொண்டுண்பவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தெல்லியாட் டுகந்தா
ரிவர்தன்மை யறிவாரார். ௫

பச்சைமேனியர் பிச்சைகொள்பவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திச்சையா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௬

பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தெங்குமா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௭

பாதங்கைதொழ வேதமோதுவர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தாதியா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௮

படிகொண்மேனியர் கடிகொள்கொன்றையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தடிகளா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௯

பறைகொள்பாணியர் பிறைகொள்சென்னியர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திறைவரா யிருப்பா
ரிவர்தன்மை யறிவாரார். ௰

வானமாள்வதற் கூனமொன்றிலை
மாதர்பல்லவ னீச்சரத்தானை
ஞானசம்பந்த னற்றமிழ்
சொல்லவல்லவர் நல்லவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## திருக்கழுமலம் பதிகம் ௩எக

திருவியமகம்

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

உற்றுமை சேர்வது மெய்யினையே
யுணர்வது நின்னருண் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே
கனல்விழி காய்வது காமனையே
அற்ற மறைப்பது முன்பணியே
யமரர்கள் செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே
பிரம புரத்தை யுகந்தனையே. க

சதிமிக வந்த சலந்தரனே
தடிசிர நேர்கொள் சலந்தரனே
அதிரொளி சேர்திகி ரிப்படையா
லமர்ந்தன ரும்பர்து திப்படையால்
மதிதவழ் வெற்பது கைச்சிலையே
மருவிட மேற்பது கைச்சிலையே
விதியினி லிட்டவி ரும்பரனே
வேணு புரத்தைவி ரும்பரனே. உ

காதம ரத்திகழ் தோடினனே
கானவ னாய்க்கடி தோடினனே
பாதம தாற்கூற் றுதைத்தனனே
பார்த்த னுடலம் புதைத்தனனே
தாதவிழ் கொன்றை தரித்தனனே
சார்ந்தவி னையத ரித்தனனே
போத மமரு முரைப்பொருளே
புகலிய மர்ந்த பரம்பொருளே. ௩

மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே
　　மகிழ்ந்தரை சேர்வது மாசுணமே
மெய்த்துடல் பூசுவர் மேன்மதியே
　　வேதம தோதுவர் மேன்மதியே
பொய்த்தலை யோடுறு மத்தமதே
　　புரிசடை வைத்தது மத்தமதே
வித்தக ராகிய வெங்குருவே
　　விரும்பிய மர்ந்தனர் வெங்குருவே. ௪

உடன்பயில் கின்றனன் மாதவனே
　　யுறுபொறி காய்ந்திசை மாதவனே
திடம்பட மாமறை கண்டனனே
　　திரிகுண மேவிய கண்டனனே
படங்கொ ளரவரை செய்தனனே
　　பகடுரி கொண்டரை செய்தனனே
தொடர்ந்த துயர்க்கொரு நஞ்சிவனே
　　தோணிபு ரத்துறை நஞ்சிவனே. ௫

திகழ்கைய தும்புகை தங்கழலே
　　தேவர் தொழுவதுந் தங்கழலே
இகழ்பவர் தாமொரு மானிடமே
　　யிருந்தனு வோமெழின் மானிடமே
மிகவரு நீர்கொளு மஞ்சடையே
　　மின்னிகர் கின்றது மஞ்சடையே
தகவிர தங்கொள்வர் சுந்தரரே
　　தக்கத ராயுறை சுந்தரரே. ௬

ஓர்வரு கண்களி ணைக்கயலே
　　யுமையவள் கண்களி ணைக்கயலே
ஏர்மரு வுங்கழ ணாகமதே
　　யெழில்கொளு தாசன ணாகமதே
நீர்வரு கொந்தள கங்கையதே
　　நெடுஞ்சடை மேவிய கங்கையதே
சேர்வரு யோகதி யம்பகனே
　　சிரபுர மேயதி யம்பகனே. ௭

ஈண்டு துயிலம ரப்பினனே
யிருங்கணி டந்தடி யப்பினனே
தீண்டல ரும்பரி சக்கரமே
திகழ்ந்தொளி சேர்வது சக்கரமே
வேண்டிவ ருந்தந கைத்தலையே
மிகைத்தவ ரோடுந கைத்தலையே
பூண்டனர் சேரலு மாபதியே
புறவம மர்ந்தவு மாபதியே. ௯

நின்மணி வாயது நீழலையே
நேசம தானவர் நீழலையே
உன்னிம னத்தெழு சங்கமதே
யொளியத னோடுறு சங்கமதே
கன்னிய ரைக்கவ ருங்களனே
கடல்விட முண்டக ருங்களனே
மன்னிவ ரைப்பதி சண்பையதே
வாரிவ யன்மலி சண்பையதே. ௰

இலங்கை யரக்கர் தமக்கிறையே
யிடந்து கயிலை யெடுக்கிறையே
புலன்கள் கெடவுடன் பாடினனே
பொறிகள் கெடவுடன் பாடினனே
இலங்கிய மேனி யிராவணனே
யெய்து பெயரு மிராவணனே
கலந்தருள் பெற்றது மாவசியே
காழி யரனடி மாவசியே. ௰

கண்ணிகழ் புண்டரி கத்தினனே
கலந்திரி புண்டரி கத்தினனே
மண்ணிக ழும்பரி சேனமதே
வானக மேய்வகை சேனமதே
நண்ணி யடிமுடி யெய்தலரே
நளிர்மலி சோலையி லெய்தலரே
பண்ணியல் கொச்சை பசுபதியே
பசுமிக வூர்வர் பசுபதியே. ௧௧

பருமதின் மதுரைமன் னவையெதிரே
பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே
வசையொடு மலர்கெட வருகரனே
கருதலி லிசைமுர றருமருளே
கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே
வல்லவர் தம்மிடர் திடமொழியே. ௧௨

திருச்சிற்றம்பலம்



## திருக்கச்சியேகம்பம் பதிகம் ௩௭௨

திருவியமகம்

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பாயுமால்விடை மேலொரு பாகனே
பாவைதன்னுரு மேலொரு பாகனே
தூயவானவர் வேதத் துவனியே
சோதிமாலெரி வேதத் துவனியே
ஆயுநன்பொரு ளுண்பொரு ளாதியே
யாலநீழ லரும்பொரு ளாதியே
காயவின்மதன் பட்டது கம்பமே
கண்ணுதற்பர மற்கிடங் கம்பமே ௧

சடையணிந்ததும் வெண்டலை மாலையே
தம்முடம்பிலும் வெண்டலை மாலையே
படையிலங்கையிற் சூலம தென்பதே
பரந்திலங்கையிற் சூலம தென்பதே
புடைபரப்பன பூதக ணங்களே
போற்றிசைப்பன பூதக ணங்களே
கடைகடோறு மிரப்பது மிச்சையே
கம்பமேவி யிருப்பது மிச்சையே. ௨

வெள்ளெருக்கொடு தும்பை மிலைச்சியே
வேறுமுன்செலத் தும்பை மிலைச்சியே
அள்ளிநீறது பூசுவ தாகமே
யானமாசுண மூசுவ தாகமே
புள்ளியாடை யுடுப்ப துகத்துமே
போனவூழி யுடுப்ப துகத்துமே
கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௩

முற்றலாமை யணிந்த முதல்வரே
மூரியாமை யணிந்த முதல்வரே
பற்றிவாளர வாட்டும் பரிசரே
பாலுநெய்யுகந் தாட்டும் பரிசரே
வற்றலோடு கலம்பலி தேர்வதே
வானினோடு கலம்பலி தேர்வதே
கற்றிலாமனங் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௪

வேடனாகி விசையற் கருளியே
வேலைநஞ்ச மிசையற் கருளியே
ஆடுபாம்பரை யார்த்த துடையதே
யஞ்சுபூதமு மார்த்த துடையதே
கோடுவான்மதிக் கண்ணி யழகிதே
குற்றமின்மதிக் கண்ணி யழகிதே
காடுவாழ்பதி யாவது மும்மதே
கம்பமாபதி யாவது மும்மதே. ௫

இரும்புகைக்கொடி தங்கழல் கையதே
யிமயமாமக டங்கழல் கையதே
அரும்புமொய்த்த மலர்ப்பொறை தாங்கியே
யாழியான்றன் மலர்ப்பொறை தாங்கியே
பெரும்பகனட மாடுதல் செய்துமே
பேதைமார்மனம் வாடுதல் செய்துமே
கரும்புமொய்த்தெழு கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௬

முதிரமங்கை தவஞ்செய்த காலமே
முன்புமங்கை தவஞ்செய்த காலமே
வெதிர்களோடகில் சந்தமு ருட்டியே
வேழமோடகில் சந்த முருட்டியே
அதிரவாறு வரத்தழு வத்தொடே
யானையாடு வரத்தழு வத்தொடே
கதிர்கொள்பூண்முலைக் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. ௭

பண்டரக்க னெடுத்த பலத்தையே
பாய்ந்தரக்க னெடுத்த பலத்தையே
கொண்டரக்கிய துங்கால் விரலையே
கோளரக்கிய துங்கால் விரலையே
உண்டுழன்றது முண்டத் தலையிலே
யுடுபதிக்கிட முண்டத் தலையிலே
கண்டநஞ்ச மடக்கினை கம்பமே
கடவுணீயிடங் கொண்டது கம்பமே. ௮

தூணியான சுடர்விடு சோதியே
சுத்தமான சுடர்விடு சோதியே
பேணியோடு பிரமப் பறவையே
பித்தனை பிரமப் பறவையே
சேணினோடு கீழூழி திரிந்துமே
சித்தமோடு கீழூழி திரிந்துமே
காணகின்றன ருற்றது கம்பமே
கடவுணீயிட முற்றது கம்பமே. ௯

ஒருடம்பினை யீருரு வாகவே
யுன்பொருட்டிற மீருரு வாகவே
ஆருமெய்தற் கரிது பெரிதுமே
யாற்றவெய்தற் கரிது பெரிதுமே
தேரரும்மறி யாது திகைப்பரே
சித்தமும்மறி யாது திகைப்பரே
கார்நிறத்தம ணர்க்கொரு கம்பமே
கடவுணீயிடங் கொண்டது கம்பமே. ௰

கந்தமார்பொழில் சூழ்தரு கம்பமே
காதல்செய்பவர் தீர்த்திடு கம்பமே
புந்திசெய்து விரும்பிப் புகலியே
பூசுரன்றன் விரும்பிப் புகலியே
அந்தமில்பொரு ளாயின கொண்டுமே
யண்ணலின்பொரு ளாயின கொண்டுமே
பந்தனின்னியல் பாடிய பத்துமே
பாடவல்லவ ராயின பத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருவாலவாய் பதிகம் ௩௭௩

திருவியமகம்

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

ஆலநீழ லுகந்த திருக்கையே
யானபாட லுகந்த திருக்கையே
பாலினேர்மொழி யாளொரு பங்கனே
பாதமோதலர் சேர்புர பங்கனே
கோலநீறணி மேதகு பூதனே
கோதிலார்மன மேவிய பூதனே
ஆலநஞ்சமு துண்டக ளத்தனே
யாலவாயுறை யண்டர்க ளத்தனே.

பாதியாவுடன் கொண்டது மாலையே
பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலையே
கோதினீறது பூசிடு மாகனே
கொண்டநற்கையின் மானிட மாகனே
நாதனுமொடு மாடுவ தானையே
நாடியன்றுரி செய்தது மானையே
வேதநூல்பயில் கின்றது வாயிலே
விகிர்தனூர்திரு வாலநல் வாயிலே. ௨

காடுநீட துறப்பல கத்தனே
　　காதலானினை வார்தம கத்தனே
பாடுபேயொடு பூதம சிக்கவே
　　பல்பிணத்தசை நாடிய சிக்கவே
நீடுமாநட மாடவி ருப்பனே
　　நின்னடித்தொழ நாளுமி ருப்பனே
ஆடனீள்சடை மேவிய வப்பனே
　　யாலவாயினின் மேவிய வப்பனே. ௩

பண்டயன்றலை யொன்று மறுத்தியே
　　பாதமோதினர் பாவம றுத்தியே
துண்டவெண்பிறை சென்னியி ருத்தியே
　　தூயவெள்ளெரு தேறியி ருத்தியே
கண்டுகாமனை வேவ விழித்தியே
　　காதலில்லவர் தம்மை யிழித்தியே
அண்டநாயக னேமிகு கண்டனே
　　யாலவாயினின் மேவிய கண்டனே. ௪

சென்று தாதை யுகுத்தனன் பாலையே
　　சிறியன்பு செகுத்தனன் பாலையே
வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலையே
　　வீடவெட்டிடக் கண்டுமுன் காலையே
நின்றமாணியை யோடின கங்கையா
　　னிலவமல்கி யுதித்தன கங்கையால்
அன்றுநின்னுரு வாகத் தடவியே
　　யாலவாயர னுகத் தடவியே. ௫

நக்கமேகுவர் நாடுமோ ரூருமே
　　நாதன்மேனியின் மாசுண மூருமே
தக்கபூமனைச் சுற்றக் கருளொடே
　　தாரமுய்த்தது பாணற் கருளொடே
மிக்கதென்னவன் றேவிக் கணியையே
　　மெல்லநல்கிய தொண்டர்க் கணியையே
அக்கினொரமு துண்கல னோடுமே
　　யாலவாயர னுருமை யோடுமே. ௬

வெய்யவன்பல் லுகுத்தது குட்டியே
வெங்கண்மாசுணங் கையது குட்டியே
ஐயனேயன லாடிய மெய்யனே
யன்பினானினை வார்க்கருண் மெய்யனே
வையமுய்யவன் றுண்டது காளமே
வள்ளல்கையது மேவுகங் காளமே
ஐயமேற்ப துரைப்பது வீணையே
யாலவாயரன் கையது வீணையே. ௭

தோள்கள்பத்தொடு பத்து மயக்கியே
தொக்கதேவர் செருக்கை மயக்கியே
வாளரக்க னிலத்துக் களித்துமே
வந்தமால்வரை கண்டு களித்துமே
நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே
நின்விரற்றலை யான்மத மத்தனே
ஆளுமாதி முறித்தது மெய்கொலோ
வாலவாயர னுய்த்தது மெய்கொலோ. ௮

பங்கயத்துள நான்முகன் மாலொடே
பாதநீண்முடி நேடிட மாலொடே
துங்கநற்றழ லின்னுரு வாயுமே
தூயபாடல் பயின்றது வாயுமே
செங்கயற்கணி னாரிடு பிச்சையே
சென்றுகொண்டுரை செய்வது பிச்சையே
அங்கியைத்திகழ் விப்ப திடக்கையே
யாலவாயர னாரிடக் கையே. ௯

தேரரோடம ணர்க்குநல் காணையே
தேவர்நாடொறுஞ் சேர்வது காணையே
கோரமட்டது புண்ட ரிகத்தையே
கொண்டநீள்கழல் புண்ட ரிகத்தையே
நேரிலூர்க ளழித்தது நாகமே
நீள்சடைத்திகழ் கின்றது நாகமே
ஆரமாக வுகந்தது மென்பதே
யாலவாயர னாரிட மென்பதே. ௰

ஈனஞானிக டம்மொடு விரகனே
யேறுபல்பொருண் முத்தமிழ் விரகனே
ஆனகாழியுண் ஞானசம் பந்தனே
யாலவாயினின் மேயசம் பந்தனே
ஆனவானவர் வாயினு ளத்தனே
யன்பரானவர் வாயினு ளத்தனே
நானுரைத்தன செந்தமிழ் பத்துமே
வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

இருள்கெட மண்ணில்வந்த இன்றமிழ்ப் பிள்ளையார் சமணரைத் தொலைத்து மாறர் பெருமானுக்கும் மாதேவியார்க்கும் விடைகொடுத்து மாளிகைக்குச் செல்ல அனுப்பிவிட்டுத் தாம் இறைவனை வணங்கி அப் பதியி லினிதிருக்கு நாள்களில் இத் திருவியமகத் திருப்பதிகமெடுத்துப் பாடி யதில் 'தார முய்த்தது பாணற் கருளொடே' என்று திருநீல கண்டப் பாணருக் கருளிய திறத்தை வைத்துப் போற்றி அவரொடள வளாவி யருளினர்.



## திருவீழிமிழலை பதிகம் ௩௭௫

திருவியமகம்

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

துன்று கொன்றைநஞ் சடையதே தூய கண்டநஞ் சடையதே
கன்றின் மானிடக் கையதே கல்லின் மானிடக் கையதே
என்று மேறுவ திடவமே யென்னி டைப்பலி யிடவமே
நின்ற தும்மிழலை யுள்ளுமே நீரெனைச் சிறிது முள்ளுமே. ௧

ஓதி வாயதும் மறைகளே யுரைப்ப தும்பல மறைகளே
பாதி கொண்டதும் மாதையே பணிகின் றேன்மிகு மாதையே
காது சேர்கனங் குழையரே காத லார்கனங் குழையரே
வீதி வாய்மிகும் வேதியா மிழலை மேவிய வேதியா. ௨

பாடு கின்றபண் டாரமே பத்த ரன்னபண் டாரமே
சூடு கின்றது மத்தமே தொழுத வென்னையுன் மத்தமே
நீடு செய்வதுந் தக்கதே நின்ன ரைத்திகழ்ந் தக்கதே
நாடு சேர்மிழலை யூருமே நாக நஞ்சழலை யூருமே. ௩

கட்டு கின்ற கழ னாகமே காய்ந்ததும் மதன னாகமே
இட்ட மாவ திசை பாடலே யிசைந்த நூலினமர் பாடலே
கொட்டுவான் முழவம் வாணனே குலாயசீர் மிழலை வாணனே
நட்ட மாடுவது சந்தியே நானுய்தற் கிரவு சந்தியே.

ஓவி லாதிடுங் கரணமே யுன்னு மென்னுடைக் கரணமே
ஏவு சேர்வுநின் னாணையே யருளி னின்னபொற் றாணையே
பாவி யாதுரை மெய்யிலே பயின்ற நின்னடி மெய்யிலே
மேவி னன்விறற் கண்ணனே மிழலை மேயமுக் கண்ணனே. ௫

வாய்ந்த மேனியெரி வண்ணமே மகிழ்ந்து பாடுவது வண்ணமே
காய்ந்து வீழ்ந்தவன் காலனே கடுநடஞ் செயுங் காலனே
போந்த தெம்மிடை யிரவிலே யும்மிடைக் கள்வ மிரவிலே
யேய்ந்ததும் மிழலை யென்பதே விரும்பியே யணிவ தென்பதே. ௬

அப்பி யன்றகண் ணயனுமே யமரர் கோமக னயனுமே
ஒப்பி லின்றமரர் தருவதே யொண்கையா லமரர் தருவதே
மெய்ப்ப யின்றவ ரிருக்கையே மிழலை யூரும திருக்கையே
செப்புமின் னெருது மேயுமே சேர்வுமக் கெருது மேயுமே. ௭

தான வக்குலம் விளக்கியே தாரகைச் செல விளக்கியே
வான டர்த்த கயிலாயமே வந்து மேவு கயிலாயமே
தானெ டுத்தவல் லரக்கனே தடமுடித் திரள ரக்கனே
மேன டைச்செல விருப்பனே மிழலை நற்பதி விருப்பனே. ௮

காய மிக்கதொரு பன்றியே கலந்த நின்னவுரு பன்றியே
ஏய விப்புவி மயங்கவே யிருவர் தாமன மயங்கவே
தூய மெய்த்திர ளகண்டனே தோன்றி நின்றமணி கண்டனே
மேய வித்துயில் விலக்கணா மிழலை மேவிய விலக்கணா. ௯

கஞ்சியைக் குலவு கையரே கலக்கமா ரமணர் கையரே
அஞ்ச வாதிலருள் செய்யநீ யணைந்திடும் பரிசு செய்யநீ
வஞ்சனே வரவும் வல்லையே மதித்தெ னைச்சிறிதும் வல்லையே
வெஞ்ச லின்றிவரு வித்தகா மிழலைசே ரும்விறல் வித்தகா. ௰

மேய செஞ்சடையி னப்பனே மிழலைமே வியவெ னப்பனே
ஏயு மாசெய விருப்பனே யிசைந்த வாசெய விருப்பனே
காய வர்க்கசம் பந்தனே காழி ஞானசம் பந்தனே
வாயுரைத்த தமிழ் பத்துமே வல்லவர்க்கு மிவை பத்துமே. ௧௧

திருச்சிற்றம்பலம்



சீகாழி பதிகம் ௩௭௬

திருமாலைமாற்று

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா. ௧

யாகாயாழீ காயாகா தாயாராரா தாயாயா
யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா. ௨

தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா. ௩

நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ. ௪

யாகாலாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயாமே லாகாயா. ௫

மேலேபோகா மேதேழீ காலாலேகா லானையே
யேனைலாகா லேலாகா ழீதேமேகா போலேமே. ௬

நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ. ௭

நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி ராவணனே. ௮

காலேமேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேமேகா. ௯

வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட ளோகரதே
தேரகளோடம ணேநினையே யேயொழிகாவண மேயுரிவே. ௰

நேரகழாமித யாசழிதா யேனனியேனனி ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயாமித ழாகரனே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருக்கழுமலம் பதிகம் ௩௭௬

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

மடன்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும்
வன்னியு மத்தமுஞ் சடைமேற்
படலொலி திரைகண் மோதிய கங்கைத்
தலைவனார் தம்மிடம் பகரில்
விடலொலி பரந்த வெண்டிரை முத்த
மிப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக்
கடலொலி யோத மோதவந் தலைக்குங்
கழுமல நகரென லாமே. ௧

மின்னிய வரவும் வெறிமலர் பலவும்
விரும்பிய திங்களுந் தங்கு
சென்னிய துடையான் றேவர்தம் பெருமான்
சேயிழை யொடுமுறை விடமாம்
பொன்னியன் மணியு முரிகரி மருப்புஞ்
சந்தமு முந்துவன் றிரைகள்
கன்னிய ராடக் கடலொலி மலியுங்
கழுமல நகரென லாமே. ௨

சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபந்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனார் தங்கிட மெங்கும்
ஊருறு பதிக ளுலகுடன் பொங்கி
யொலிபுனல் கொளவுடன் மிதந்த
காருறு செம்மை நன்மையான் மிக்க
கழுமல நகரென லாமே. ௩

மண்ணினா ரேத்த வானுளார் பரச
வந்தரத் தமரர்கள் போற்றப்
பண்ணினா ரெல்லாம் பலபல வேட
முடையவர் பயில்விட மெங்கும்
எண்ணினான் மிக்கா ரியல்பினா னிறைந்தா
ரேந்திழை யவரொடு மைந்தர்
கண்ணினா லின்பங் கண்டொளி பரக்குங்
கழுமல நகரென லாமே. ௪

சுருதியான் றலையு நாமகண் மூக்குஞ்
சுடரவன் கரமுமுன் னியங்கு
பரிதியான் பல்லு மிறுத்தவர்க் கருளும்
பரமனார் பயின்றினி திருக்கை
விருதினான் மறையு மங்கமோ ராறும்
வேள்வியும் வேட்டவர் ஞானங்
கருதினா ருலகிற் கருத்துடை யார்சேர்
கழுமல நகரென லாமே. ௫

புற்றில்வா ளரவு மாமையும் பூண்ட
புனிதனார் பனிமலர்க் கொன்றை
பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த
படிறனார் பயின்றினி திருக்கை
செற்றுவன் றிரைக ளொன்றொடொன் றோடிச்
செயிர்த்துவண் சங்கொடு வங்கங்
கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங்
கழுமல நகரென லாமே. ௬

அலைபுனற் கங்கை தங்கிய சடையா
ரடனெடு மதிலொரு மூன்றுங்
கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட
குழகனார் கோயில தென்பர்
மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு
மற்றுமற் றிடையிடை யெங்குங்
கலைகளித் தேறிக் கானலில் வாழுங்
கழுமல நகரென லாமே. ௭

ஒருக்கமுன் னினையாத் தக்கன்றன் வேள்வி
யுடைதர வுழறிய படையார்
அரக்கனை வரையா லாற்றலன் றழித்த
வழகனா ரமர்ந்துறை கோயில்
பரக்கும்வண் புகழார் பழியவை பார்த்துப்
பலபல வறங்களே பயிற்றிக்
கரக்குமா றறியா வண்மையால் வாழுங்
கழுமல நகரென லாமே. ௮

அருவரை பொறுத்த வாற்றலி னானு
மணிகிளர் தாமரை யானும்
இருவரு மேத்த வெரியுரு வான
விறைவனா ருறைவிடம் வினவில்
ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ண
மொலிபுனல் வெள்ளமுன் பரப்பக்
கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங்
கழுமல நகரென லாமே. ௯

உரிந்துய ருருவி லுடைதவிர்ந் தாரு
மத்துகில் போர்த்துழல் வாருந்
தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச்
செம்மையார் நன்மையா லுறைவாங்
குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை
மல்லிகை சண்பகம் வேங்கை
கருந்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங்
கழுமல நகரென லாமே. ௰

கானலங் கழனி யோதம்வந் துலவுங்
கழுமல நகருறை வார்மேல்
ஞானசம் பந்த னற்றமிழ் மாலை
நன்மையா லுரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி
யுள்ளமு மொருவழிக் கொண்டு
வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்
மற்றிதற் காணையு நமதே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருவீழிமிழலை பதிகம் ௩௭௭

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

புள்ளித்தோ லாடை பூண்பது நாகம்
பூசுசாந் தம்பொடி நீறு
கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டங்
காளியைக் குணஞ்செய்கூத் துடையோன்
அள்ளற்கா ராமை யகடுவான் மதிய
மேய்க்கமுட் டாழைக ளானை
வெள்ளைக் கொம்பீனும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. ௧

இசைந்தவா றடியா ரிடுதுவல் வாரு
 நிழுகுசந் தனத்திளங் கமலப்
பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய்க் கரப்பாய்
 பத்திசெய் யாதவர் பக்கல்
அசும்புபாய் கழனி யலர்கயன் முதலோ
 டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை
விசும்புதூர்ப் பனபோல் விம்மிய வீழி
 மிழலையா னெனவினை கெடுமே. உ

நிருத்தனு றங்க னீற்றனு னமரர்
 னீலமார் மிடற்றனெற் றிக்கண்
ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கு முயிரா
 யுளனிலன் கேடிலி யுமைகோன்
திருத்தமாய் நாளு மாடுநீர்ப் பொய்கை
 சிறியவ ரறிவினின் மிக்க
விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி
 மிழலையா னெனவினை கெடுமே. ௩

தாங்கருங் காலந் தவிரவந் திருவர்
 தம்மொடுங் கூடினா ரங்கம்
பாங்கினாற் றரித்துப் பண்டுபோ லெல்லாம்
 பண்ணிய கண்ணுதற் பரமர்
தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச்
 செண்பகம் வண்பலா விலுப்பை
வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி
 மிழலையா னெனவினை கெடுமே. ௪

கூசுமா மயானங் கோயில்வா யிற்கட்
 குடவயிற் றனசில பூதம்
பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி
 பாதிநற் பொங்கர வரையோன்
வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர்
 மலரணைந் தெழுந்தவான் றென்றல்
வீசுமாம் பொழிற்றேன் றுவலைசேர் வீழி
 மிழலையா னெனவினை கெடுமே. ௫

பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்
பங்கயத் தயனுமோர் பாலர்
ஆதியாய் நடுவா யந்தமாய் நின்ற
வடிகளா ரமரர்கட் கமரர்
போதுசேர் சென்னிப் புரூரவாப் பணிசெய்
பூசுரர் பூமக னனைய
வேதியர் வேதத் தொலியறா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. ௬

தன்றவம் பெரிய சலந்தர னுடலந்
தடிந்தசக் கரமெனக் கருளென்
றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத்
திறையவன் பிறையணி சடையன்
நின்றநாள் காலை யிருந்தநாண் மாலை
கிடந்தமண் மேல்வரு கலியை
வென்றவே தியர்கள் விழாவறா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. ௭

கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த
கரமுரஞ் சிரநெரிந் தலற
அடர்த்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க
வருளினன் றடமிகு நெடுவாள்
படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள்
பதங்களை யோதப்பா டிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. ௮

அளவிட லுற்ற வயனொடு மாலு
மண்டமண் கெண்டியுங் காணா
முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த
முக்கணெம் முதல்வனை முத்தைத்
தளையவிழ் கமலத் தவிசின்மே லன்னந்
தன்னிளம் பெடையொடும் புல்கி
விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக்கு
மிழலையா னெனவினை கெடுமே. ௯

கஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக்
கலதிகள் கட்டுரை விட்டு
அஞ்சித்தே விரிய வெழுந்தநஞ் சதனை
யுண்டம ரர்க்கமு தருளி
இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின்
குலையொடும் பழம்விழத் தெங்கின்
மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. ௰

வேந்தர்வந் திறைஞ்ச வேதியர் வீழி
மிழலையுள் விண்ணிழி விமானத்
தேய்ந்ததன் றேவி யோடுறை கின்ற
வீசனை யெம்பெரு மானைத்
தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன்
றமொழி ஞானசம் பந்தன்
வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை
வானவர் வழிபடு வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருவாலவாய் பதிகம் ௩௭௮

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
வாலவா யாவது மிதுவே. ௧

வெற்றவே யடியா ரடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளைநீ றணியும்
கொற்றவன் றனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவிநின் றேத்தும்
ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ
னுலகினி லியற்கையை யொழிந்திட்
டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற
வாலவா யாவது மிதுவே. உ

செந்துவர் வாயாள் சேலன கண்ணாள்
சிவன்றிரு நீற்றினை வளர்க்கும்
பந்தணை விரலாள் பாண்டிமா தேவி
பணிசெயப் பாரிட நிலவும்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந்
தண்ணெருக் கம்மலர் வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே. கூ

கணங்களாய் வரினுந் தமியராய் வரினு
மடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங்
கோபுரஞ் சூழ்மணிக் கோயில்
மணங்கமழ் கொன்றை வாளரா மதியம்
வன்னிவண் கூவிள மாலை
அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே. ச

செய்யதா மரைமே லன்னமே யனைய
சேயிழை திருநுதற் செல்வி
பையரா வல்குற் பாண்டிமா தேவி
நாடொறும் பணிந்தினி தேத்த
வெய்யவேற் சூலம் பாசமங் குசமான்
விரிகதிர் மழுவுடன் றரித்த
ஐயனா ருமையோ டின்புறு கின்ற
வாலவா யாவது மிதுவே. ரு

நலமில ராக நலமதுண் டாக
நாடவர் நாடறி கின்ற
குலமில ராகக் குலமதுண் டாகத்
தவம்பணி குலச்சிறை பரவும்
கலைமலி கரத்தன் மூவிலை வேலன்
கரியுரி மூடிய கண்டன்
அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே. ௬

முத்தின்றாழ் வடமுஞ் சந்தனக் குழம்பு
நீறுந்தன் மார்பினின் முயங்கப்
பத்தியார் கின்ற பாண்டிமா தேவி
பாங்கொடு பணிசெய நின்ற
சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே
சுடர்மர கதமடுத் தாற்போல்
அத்தனா ருமையோ டின்புறு கின்ற
வாலவா யாவது மிதுவே. ௭

நாவணங் கியல்பா மஞ்செழுத் தோதி
நல்லராய் நல்லியல் பாகும்
கோவணம் பூதி சாதனங் கண்டாற்
றொழுதெழு குலச்சிறை போற்ற
ஏவணங் கியல்பா மிராவணன் றிண்டோ
ளிருபது நெரிதர வூன்றி
ஆவணங் கொண்ட சடைமுடி யண்ண
லாலவா யாவது மிதுவே. ௮

மண்ணெலா நிகழ மன்னனாய் மன்னு
மணிமுடிச் சோழன்றன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி
பாங்கினாற் பணிசெய்து பரவ
விண்ணுளா ரிருவர் கீழொடு மேலு
மளப்பரி தாம்வகை நின்ற
அண்ணலா ருமையோ டின்புறு கின்ற
வாலவா யாவது மிதுவே. ௯

தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந்
தொழுதுதன் குணத்தினைக் குலாவக்
கண்டநா டோறு மின்புறு கின்ற
குலச்சிறை கருதிநின் றேத்தக்
குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள்
குறியின்க ணெறியிடை வாரா
அண்டநா யகன்றா னமர்ந்துவீற் றிருந்த
ஆலவா யாவது மிதுவே. ௰

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி
குலச்சிறை யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீ ராலவா யீசன்
திருவடி யாங்கவை போற்றிக்
கன்னலம் பெரிய காழியுண் ஞான
சம்பந்தன் செந்தமி ழிவைகொண்
டின்னலம் பாட வல்லவ ரிமையோ
ரேத்தவீற் றிருப்பவ ரினிதே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

மதுரைவாழ்வந்த மங்கையர்க்கரசியாரது ஆணையை மேற்கொண்டு குலச்சிறை நாயனார் ஆளுடைய பிள்ளையாரை யெதிர்கொண்டு வணங்கி நலம் வினவப்பெற்று அவருடன் வரும்போது, பிள்ளையார், தமக்கு முன்னே மதுரை தோன்றுதலும் தவமுதல்வராய அவரைநோக்கி 'ஈங்கு நம் பெருமான் றிருவாலவாய் எம்மருங்கிதென' வினவியருளக்குலச்சிறையார் அவரடியினை வணங்கித் தமது கரங்களாற்சுட்டிச் 'சோலைகள் சூழ்ந்து ஆகாயமளாவி யிருக்கும் திருக்கோபுரந் தோன்றாநின்ற இஃது இறைவன் திருவாலவாய்' என்றார். அதனைக்கண்ட பிள்ளையார் தமது இருகரங்களையும் உச்சியின்மேல்குவித்து மீண்டும் நிறைந்த மண்டு பேரன்பால் மண்மிசைப் பணிந்து 'மங்கையர்க் கரசி' என்னு மிப்பதிகமெடுத்து அதனில் மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்னும் இருவர் திருப்பணிகளை யெல்லாஞ் சிறப்பித்துத் திருப்பாட்டி னிறுதிதோறும் 'அன்னவர் வழிபடநின்றவாலவா யாவது மிதுவே' என்று பாடியருளினார்.

## திருப்பந்தணைநல்லூர் பதிகம் ௩௭௯

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை
யிவைசொல்லி யுலகெழுந் தேத்தக்
கடறினா ராவர் காற்றுளா ராவர்
காதலித் துறைதரு கோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க்
கோவணங் கொண்டுகூத் தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௧

கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங்
காட்டுளார் நாட்டுளா ரெனவும்
வழியுளா ரெனவு மலையுளா ரெனவு
மண்ணுளார் விண்ணுளா ரெனவும்
சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மறியார்
தொண்டர்வாய் வந்தன சொல்லும்
பழியுளார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௨

காட்டினா ரெனவு நாட்டினா ரெனவுங்
கடுந்தொழிற் காலனைக் காலால்
வீட்டினா ரெனவுஞ் சாந்தவெண் ணீறு
பூசியோர் வெண்மதி சடைமேல்
சூட்டினா ரெனவுஞ் சுவடுதா மறியார்
சொல்லுள சொல்லுநால் வேதப்
பாட்டினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௩

முருகினார் பொழில்சூ ழுலகினா ரேத்த
மொய்த்தபல் கணங்களின் றுயர்கண்
டுருகினா ராகி யுறுதிபோந் துள்ள
மொண்மையா லொளிதிகழ் மேனி
கருகினா ரெல்லாங் கைதொழு தேத்தக்
கடலுணஞ் சமுதமா வாங்கிப்
பருகினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௪

பொன்னினார் கொன்றை யிருவடங் கிடந்து
பொறிகிளர் பூணநூல் புரள
மின்னினா ருருவின் மிளிர்வதோ ரரவ
மேவுவெண் ணீறுமெய் பூசித்
துன்னினார் நால்வர்க் கறமமர்ந் தருளித்
தொன்மையார் தோற்றமுங் கேடும்
பன்னினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௫

ஒண்பொனா ரனைய வண்ணல்வாழ் கெனவு
முமையவள் கணவன்வாழ் கெனவும்
அண்பினார் பிரியா ரல்லுநன் பகலு
மடியவ ரடியிணை தொழுவே
நண்பினா ரெல்லா நல்லரென் றேத்த
வல்லவர் தீயரென் றேத்தும்
பண்பினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௬

எற்றினா ரேது மிடைகொள்வா ரில்லை
யிருநிலம் வானுல கெல்லை
தெற்றினார் தங்கள் காரண மாகச்
செருமலைந் தடியிணை சேர்வான்
முற்றினார் வாழு மும்மதில் வேவ
மூவிலைச் சூலமு மழுவும்
பற்றினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௭

ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப
வோசையா லாடல றாத
கலிசெய்த பூதங் கையினா லிடவே
காலினாற் பாய்தலு மரக்கன்
வலிகொள்வர் புலியி னுரிகொள்வ ரேனை
வாழ்வுநன் றானுமோர் தலையில்
பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௮

சேற்றினார் பொய்கைத் தாமரை யானுஞ்
செங்கண்மா லிவரிரு கூறாத்
தோற்றினார் தோற்றத் தொன்மையை யறியார்
துணைமையும் பெருமையுந் தம்மிற்
சாற்றினார் சாற்றி யாற்றலோ மென்னச்
சரண்கொடுத் தவர்செய்த பாவம்
பாற்றினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. ௯

* * * * * ௰

கல்லிசை பூணக் கலையொலி யோவாக்
கழுமல முதுபதி தன்னில்
நல்லிசை யாளன் புல்லிசை கேளா
நற்றமிழ் ஞானசம் பந்தன்
பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி
மேவிய பந்தணை நல்லூர்
சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேற்
றொல்வினை சூழகி லாவே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

**இறைவன் - பசுபதிநாதர்; இறைவி - காம்பன்னதோளி.**



## திருவோமாம்புலியூர் பதிகம் ௯௮ம்

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

பூங்கொடி மடவா ளுமையொரு பாகம்
 புரிதரு சடைமுடி யடிகள்
வீங்கிரு ணட்ட மாடுமெம் விகிர்தர்
 விருப்பொடு முறைவிடம் வினவில்
தேங்கமழ் பொழிலிற் செழுமலர் கோதிச்
 செறிதரு வண்டிசை பாடும்
ஓங்கிய புகழா ரோமமாம் புலியூ
 ருடையவர் வடதளி யதுவே. க

சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத்
 தழலுமிழ் சக்கரம் படைத்த
எம்பெரு மானா ரிமையவ ரேத்த
 வினிதினங் குறைவிடம் வினவில்
அம்பர மாகி யழலுமிழ் புகையி
 னாகுதி யான்மழை பொழியும்
உம்பர்க ளேத்து மோமமாம் புலியூ
 ருடையவர் வடதளி யதுவே. உ

பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப்
 படர்சடைக் கரந்தநீர்க் கங்கை
தாங்குத றவிர்த்துத் தராதலத் திழித்த
 தத்துவ னுறைவிடம் வினவில்
ஆங்கெரி மூன்று மமர்ந்துட னிருந்த
 வங்கையா லாகுதி வேட்கும்
ஓங்கிய மறையோ ரோமமாம் புலியூ
 ருடையவர் வடதளி யதுவே. ங

புற்றர வணிந்து நீறுமெய் பூசிப்
பூதங்கள் சூழ்தர வூரூர்
பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும்
பிரானவ னுறைவிடம் வினவில்
கற்றநால் வேத மங்கமோ ராறுங்
கருத்தினா ரருத்தியாற் றெரியும்
உற்றபல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. ௪

நிலத்தவர் வான மாள்பவர் கீழோர்
துயர்கெட நெடியமாற் கருளால்
அலைத்தவல் லசுர ராசற வாழி
யளித்தவ னுறைவிடம் வினவில்
சலத்தினாற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்
தன்மையார் நன்மையான் மிக்க
உலப்பில்பல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. ௫

மணந்திகழ் திசைக ளெட்டுமே ழிசையு
மலியுமா றங்கமை வேள்வி
இணைந்தநால் வேத மூன்றெரி யிரண்டு
பிறப்பென வொருமையா லுணரும்
குணங்களு மவற்றின் கொள்பொருள் குற்ற
மற்றவை யுற்றது மெல்லாம்
உணர்ந்தவர் வாழு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. ௬

* * * . ௭

தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி
தானுடை யரக்கனொண் கயிலை
அலைவது செய்த வவன்றிறல் கெடுத்த
வாதியா ருறைவிடம் வினவில்
மலையென வோங்கு மாளிகை நிலவு
மாமதின் மாற்றல ரென்றும்
உலவுபல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. ௮

கள்ளவிழ் மலர்மே லிருந்தவன் கரியோ
　　னென்றிவர் காண்பரி தாய
ஒள்ளெரி யுருவ ருமையவ ளோடு
　　முகந்தினி துறைவிடம் வினவில்
பள்ளநீர் வாளை பாய்தரு கழனிப்
　　பனிமலர்ச் சோலைசூ ழாலை
ஒள்ளிய புகழா ரோமமாம் புலியூ
　　ருடையவர் வடதளி யதுவே. ௯

தெள்ளிய ரல்லாத் தேரரோ டமணர்
　　தடுக்கொடு சீவர முடுக்கும்
கள்ளமார் மனத்துக் கலதிகட் கருளாக்
　　கடவுளா ருறைவிடம் வினவில்
நள்ளிருள் யாம நான்மறை தெரிந்து
　　நலந்திகழ் மூன்றெரி யோம்பும்
ஒள்ளியார் வாழு மோமமாம் புலியூ
　　ருடையவர் வடதளி யதுவே. ௰

விளைதரு வயலுள் வெயில்செறி பவள
　　மேதிகண் மேய்புலத் திடறி
ஒளிதர மல்கு மோமமாம் புலியூ
　　ருடையவர் வடதளி யரனைக்
களிதரு நிவப்பிற் காண்டகு செல்வக்
　　காழியுண் ஞானசம் பந்தன்
அளிதரு பாடல் பத்தும்வல் லார்க
　　ளமரலோ கத்திருப் பாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - துயரந்தீர்த்தநாதர்; இறைவி - பூங்கொடிநாயகி.



## திருக்கோணமலை

பதிகம் ௩௮௧

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே. ௧

கடிதென வந்த கரிதனை யுரித்து
வவ்வுரி மேனிமேற் போர்ப்பர்
பிடியன நடையாள் பெய்வளை மடந்தை
பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமு னித்திலஞ் சுமந்து
குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமா மலையமர்ந் தாரே. ௨

பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம்
படர்சடை முடியிடை வைத்தார்
கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக
மாகமுன் கலந்தவர் மதின்மேல்
தனித்தபே ருருவ விழித்தழ லுகந்
தாங்கிய மேருவெஞ் சிலையாக்
குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. ௩

ஆய

பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப்
பாங்குடை மதனைப் பொடியா
விழித்தவன் றேவி வேண்டமுன் கொடுத்த
விமலனூர் கமலமார் பாதர்
தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ்
செம்பொனு மிப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங்
கோணமா மலையமர்ந் தாரே. ௮

தாயினு நல்ல தலைவரென் றடியார்
தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினு மனத்து மருவிநின் றகலா
மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பா னீக்கி
நுழைதரு நூலினர் ஞாலம்
கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. ௯

பரிந்துநன் மனத்தால் வழிபடு மாணி
தன்னுயிர் மேல்வருங் கூற்றைத்
திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ்
செம்மையார் நம்மையா ளுடையார்
விரிந்துயர் மௌவன் மாதவி புன்னை
வேங்கைவண் செருந்திசெண் பகத்தின்
குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ்
கோணமா மலையமர்ந் தாரே. ௰

* * * * ௭

எடுத்தவன் றருக்கை யிழித்தவர் விரலா
லேத்திட வாத்தமாம் பேறு
தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு
மிறப்பறி யாதவர் வேள்வி

தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை
தன்னருட் பெருமையும் வாழ்வும்
கொடுத்தவர் விரும்பும் பெரும்புக ழாளர்
கோணமா மலையமர்ந் தாரே. அ

அருவரா தொருகை வெண்டலை யேந்தி
யகந்தொறும் பலியுடன் புக்க
பெருவரா யுறையு நீர்மையர் சீர்மைப்
பெருங்கடல் வண்ணனும் பிரமன்
இருவரு மறியா வண்ணமொள் ளெரியா
யுயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்கும்
குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக்
கோணமா மலையமர்ந் தாரே. ௯

நின்றுணுஞ் சமணு மிருந்துணுந் தேரு
நெறியலா தனபுறங் கூற
வென்றுநஞ் சுண்ணும் பரிசின ரொருபான்
மெல்லிய லொடுமுட னாகித்
துன்றுமொண் பௌவ மவ்வலுஞ் சூழ்ந்து
தாழ்ந்துறு திரைபல மோதிக்
குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங்
கோணமா மலையமர்ந் தாரே. ௰

குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்தன்
உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இஃது ஈழநாட்டிலுள்ளது.

இறைவன் - கோணேச்சுவரர்; இறைவி - மாதுமையாள்.

## திருக்குருகாவூர்வெள்ளடை — பதிகம் ௩அ௨

### பண் - அந்தாளிக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் ணீறணி மார்பிற் றோல்புனைந்
தெண்ணரும் பல்கண மேத்தநின் றாடுவீர்
விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக னீரே. ௧

திரைபுல்கு கங்கை திகழ்சடை வைத்து
வரைமக ளோடுட னாடுதிர் மல்கு
விரைகமழ் தண்பொழில் வெள்ளடை மேவிய
அரைமல்கு வாளர வாட்டுகந் தீரே. ௨

அடையலர் தொன்னகர் மூன்றெரித் தன்ன
நடைமட மங்கையோர் பாக நயந்து
விடையுகந் தேறுதிர் வெள்ளடை மேவிய
சடையமர் வெண்பிறைச் சங்கர னீரே. ௩

வளங்கிளர் கங்கை மடவர லோடு
களம்பட வாடுதிர் காடரங் காக
விளங்கிய தண்பொழில் வெள்ளடை மேவிய
இளம்பிறை சேர்சடை யெம்பெரு மானே. ௪

சுரிகுழ னல்ல துடியிடை யோடு
பொரிபுல்கு காட்டிடை யாடுதிர் பொங்க
விரிதரு பைம்பொழில் வெள்ளடை மேவிய
எரிமழு வாட்படை யெந்தை பிரானே. ௫

காவியங் கண்மட வாளொடுங் காட்டிடைத்
தீயக லேந்திநின் றாடுதிர் தேன்மலர்
மேவிய தண்பொழில் வெள்ளடை மேவிய
ஆவினி லைந்துகொண் டாட்டுகந் தீரே. ௬

* * * * * . ௭

* * * * * . ௮

* * * * * . ௯

* * * * * . ௰

* * * * * . ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வெள்ளடைநாதர்; இறைவி - காவியங்கண்ணி.



## திருநல்லூர்ப்பெருமணம் பதிகம் ௩௮௩

பண் - அந்தாளிக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே. ௧

தருமண லோதஞ்சேர் தண்கட னித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
வருமணங் கூட்டி மணஞ்செயு நல்லூர்ப்
பெருமணத் தான்பெண்ணோர் பாகங்கொண் டானே. ௨

அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே. ௩

வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்
நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே. ௪

ஏறுகந் தீரிடு காட்டெரி யாடிவெண்
ணீறுகந் தீர்நிரை யார்விரி தேன்கொன்றை
நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீருமை கூறுகந் தீரே. ௫

சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
நட்டக்கொட் டாட்டறு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே. ௬

மேகத்த கண்டனெண் டோளன்வெண் ணீற்றுமை
பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த
நாகத்த னல்லூர்ப் பெருமணத் தானல்ல
போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே. ௭

தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே. ௮

ஏலுந்தண் டாமரை யானு மியல்புடை
மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே. ௯

ஆத ரமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்
நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய
வேதனை தாடொழ வீடெளி தாமே. ௰

நறும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சிவலோகத்தியாகேசர்;
இறைவி - திருவெண்ணீற்றுமையம்மை.

---

**பதிக வரலாறு:**

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருநல்லூர்ப்பெருமணத்தை யடைந்து திருமணப் பந்தரில் வேள்விச் சடங்கினை முற்றி எரிவலம் வர வேண்டிய அமயத்தில் எரியாவா னிறைவனே யென்று திருக்கோயிலை யடைந்து தம்மை யில்லொழுக்கம்வந்து சூழ்ந்ததையுன்னித் தம் மனைவியாரோடு இறைவனடி சேரும் ஆதரவு பொங்குதலாலும், தம் மணங்காண வந்த சுற்றத்தவரும் திருக்கூட்டத்தினரும் மற்றும்பிறரும் இறைவனடி எய்துதலை விரும்பியும், பிறவிப்பாசந் தீர்த்தலைச் செம்பொருளாகக் கொண்டு இறைவன் பாதநீழல் சேரும்பருவ மீதென்று, இத் திருப்பதிகம் எடுத்துப்பாடி இறைவன் வகுத்துக் காட்டிய சுயஞ்சோதியில் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யருளிச்செய்து எல்லோரையும் புகுவித்துத் தாமும் தம் பன்னியோடு புகுந்தருளினார்.

ஆகத் திருப்பதிகங்கள் ௩௱௮௰௩

மூன்றாந் திருமுறை

முற்றிற்று



திருவிடைவாய் பதிகம் ௩௭௪

திருச்சிற்றம்பலம்

மறியார் கரத்தெந் தையம்மா துமையோடும்
பிறியா தபெம்மா னுறையு மிடமென்பர்
பொறிவாய் வரிவண் டுதன்பூம் பெடைபுல்கி
வெறியார் மலரிற் றுயிலும் விடைவாயே. ௧

ஒவ்வாத வென்பே யிழையா வொளிமௌலிச்
செவ்வான் மதிவைத் தவர்சேர் விடமென்பர்
எவ்வா யிலுமே டலர்கோ டலம்போது
வெவ்வா யரவம் மலரும் விடைவாயே. ௨

கரையார் கடனஞ் சமுதுண் டவர்கங்கைத்
திரையார் சடைத்தீ வண்ணர்சேர் விடமென்பர்
குரையார் மணியுங் குளிர்சந் தமுங்கொண்டு
விரையார் புனல்வந் திழியும் விடைவாயே. ௩

கூசத் தழல்போல் விழியா வருகூற்றைப்
பாசத் தொடும்வீ ழவுதைத் தவர்பற்றும்
வாசக் கதிர்ச்சா லிவெண்சா மரையேபோல்
வீசக் களியன் னமல்கும் விடைவாயே. ௪

திரியும் புரமூன் றையுஞ்செந் தழலுண்ண
வெரியம் பெய்தகுன் றவில்லி யிடமென்பர்
கிரியுந் தருமாளி கைச்சூ ளிகைதன்மேல்
விரியுங் கொடிவான் விளிசெய் விடைவாயே. ௫

கிள்ளை மொழியா ளையிகழ்ந் தவன்முத்தீத்
தள்ளித் தலைதக் கனைக்கொண் டவர்சார்வாம்
வள்ளி மருங்குல் நெருங்கும் முலைச்செவ்வாய்
வெள்ளை நகையார் நடஞ்செய் விடைவாயே. ௬

பாதத் தொலிபா ரிடம்பா டநடஞ் செய்
நாதத் தொலியர் நவிலும் மிடமென்பர்
கீதத் தொலியுங் கெழுமும் முழவோடு
வேதத் தொலியும் பயிலும் விடைவாயே. ௭

அகஎ

எண்ணா தவரக் கனுரத் தைநெரித்துப்
பண்ணார் தருபா டலுகந் தவர்பற்றுங்
கண்ணார் விழவிற் கடிவீ திகடோறும்
விண்ணோர் களும்வந் திறைஞ்சும் விடைவாயே. ௮

புள்வாய் பிளந்தா னயன்பூ முடிபாதம்
ஒள்வா னிலந்தே டுமொரு வர்க்கிடமாந்
தெள்வார் புனற்செங் கழுநீர் முளைதன்னில்
விள்வாய் நறவுண் டுவண்டார் விடைவாயே. ௯

உடையே துமிலார் துவராடை யுடுப்போர்
கிடையா நெறியான் கெழுமும் மிடமென்பர்
அடையார் புரம்வே வமூவர்க் கருள்செய்த
விடையார் கொடியா னழகார் விடைவாயே. ௰

ஆறும் மதியும் பொதிவே ணியனூரா
மாறில் பெருஞ்செல் வமலி விடைவாயை
நாறும் பொழிற்கா ழியர்ஞா னசம்பந்தன்
கூறுந் தமிழ்வல் லவர்குற் றமற்றோரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

இத்திருப்பதிகம் எந்தப் பிரதிகளிலும் எவரும் பதித்து இதுகாறும் வெளி வரவில்லை. முதற்கண் சிவனடியார் ஒருவர் ஒரு சிறு சுவடி யுருவமாக வரலாறு ஒன்று எழுதிப் பதிப்பித்து வெளியிட்டார்கள். ஆயினும் அதில் ஏழாவது பாட்டு மிக்க சிதலமாக அவராற் சரிசெய்து அச்சிடப் பட்டுளது. பிறகு சென்னைத் துரைத்தனக் கல்வெட்டுப் பரிசோதனை யிலாகாவின் சார்பாகத் திரு ஆராவமுதையங்கார் பி. ஏ., பி. எல்., அவர்கள் மிக்க சிரமப்பட்டு ஒட்டெடுத்து அப்பாட்டு இன்னும் மேற்கொண்ட பெரும் பரிசோதனைசெய்து எழுதித் தந்தார்கள். அன்றியும் அவர் தாம் எழுதிய பாடத்தைத் தாம் எடுத்த ஒட்டைக்கொண்டு ஒத்துக் காட்டினார்கள். இத்தலம் ஐயடிகள்காடவர்கோனாயனார் க்ஷேத்திர வெண்பாவில் பாடப் பட்டுளது. ஆயினும் அங்கு 'இடைவாய்' என்றுளது. இங்கு 'விடைவாய்' என்று காண்கிறது. இதுகாறும் இதைப்பற்றி அதிகமாக ஒன்றும் சொல்ல இயலவில்லை. இது துரைத்தனத்தார் உத்தரவின்மேல் பதிப்பிக்கப்பட்டது.

## திருமறைக்காடு பதிகம் ௨௮௫

வெள்ளிப்பாட்டு

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

விடைத்தவர் புரங்கண்மூன்றும் விரிசிலை குனியவாங்கிப்
படைத்தொழில் புரிந்துநின்ற பரமனே பரமயோகி
கடைத்தலை புகுந்துநின்றோங் கலிமறைக் காடமர்ந்தீர்
அடைத்திடுங் கதவுதன்னை யப்படித் தாளிறாலே. க

முடைத்தலைப் பலிகொள்வானே முக்கண நக்கமூர்த்தீ
மடைத்தலைக் கமலமோங்கும் வயன்மறைக் காடமர்ந்தாய்
அடைத்திடுங் கதவையென்றிங் கடியனேன் சொல்லவல்லே
அடைத்தனை கதவிதன்றோ வெம்மையா ளுகக்குமாறே. உ

கொங்கணு மலர்கண்மேவுங் குளிர்பொழி லிமையப்பாவை
பங்கணு வுருவினானே பருமணி யுமிழும்வெம்மைச்
செங்கணு ரரவம்பூண்ட திகழ்மறைக் காடமர்ந்தாய்
அங்கணு விதுவன்றோதா னெம்மையா ளுகக்குமாறே. ௩

இருளுடை மிடற்றினானே யெழின்மறைப் பொருள்களெல்லாம்
தெருள்பட முனிவர்க்கீந்த திகழ்மறைக் காடமர்ந்தாய்
மருளுடை மனத்தனேனும் வந்தடி பணிந்துநின்றேற்
கருளது புரிவதன்றோ வெம்மையா ளுகக்குமாறே. ௪

பெருத்தகை வேழந்தன்னைப் பிளிறிட வுரிசெய்தானே
மருத்திகழ் பொழில்கள்சூழ்ந்த மாமறைக் காடமர்ந்தாய்
கருத்திலனேனுநின்றன் கழலடி பணிந்துநின்றேன்
அருத்தியை யறிவதன்றோ வெம்மையா ளுகக்குமாறே. ௫

செப்பமர் கொங்கைமாதர் செறிவளை கொள்ளுந்தேசோ
டொப்பமர் பலிகொள்வானே யொளிமறைக் காடமர்ந்தாய்
அப்பமர் சடையினானே யடியனேன் பணியுகந்த
அப்பனே யளவில்சோதி யடிமையை யுகக்குமாறே. ௬

மதிதுன்று மிதழிமத்த மன்னிய சென்னியானே
கதியொன்று மேற்றினானே கலிமறைக் காடமர்ந்தாய்
விதியொன்று பாவின்மாலை கேட்டருள் வியக்குந்தன்மை
இதுவன்றோ வுலகினம்பி யெம்மையா ளுகக்குமாறே. ௭

நீசனா மரக்கன்றிண்டோ ளெரிதர விரலாலூன்றும்
தேசனே ஞானமூர்த்தீ திருமறைக் காடமர்ந்தாய்
ஆசையை யறுக்கவுய்ந்திட் டவனடி பரவமெய்யே
ஈசனார்க் காளதானா னென்பதை யறிவித்தாயே. ௮

மைதிக ழுருவினானு மலரவன் றானுமெய்ம்மை
எய்துமா றறியமாட்டா ரெழின்மறைக் காடமர்ந்தாய்
பொய்தனை யின்றிநின்னைப் போற்றினார்க் கருளைச்சேரச்
செய்தனை யெனக்குநீயின் றருளிய திறத்தினாலே. ௯

மண்டலத் தமணர்பொய்யுந் தேரர்கண் மொழியுமாறக்
கண்டனை யடிகளென்றுங் கலிமறைக் காடமர்ந்தாய்
தண்டியைத் தானாவைத்தா னென்னுமத் தன்மையாலே
எண்டிசைக் கறியவைத்தா யிக்கத வடைப்பித்தன்றே. ௰

மதமுடைக் களிறுசெற்ற மாமறைக் காட்டினானைக்
கதவடைத் திறமுஞ்செப்பிக் கடிபொழிற் காழிவேந்தன்
தகவுடைப் புகழின்மிக்க தமிழ்கெழு விரகன்சொன்ன
பதமுடைப் பத்தும்வல்லார் பரமனுக் கடியர்தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

இத்திருப்பதிகம் பிரும்மஸ்ரீ வரகூர். சுந்தரேச சாஸ்திரிகள் பதிப்பித்த உபமன்யுபக்த விலாசத்திலும் சிவஸ்ரீ சுவாமிநாத பண்டிதர் அவர்கள் பதிப்பித்த தலமுறைப் பதிப்பிலும் தவிர வேறு எந்தப் பிரதிகளிலும் காணப்பெறவில்லை. அன்றியும் அடங்கன்முறையிற் காணும் வேறுபிற வெள்ளிப் பதிகங்கள்போல அவ்வளவு சொல்வளம் பொருள்வளம் செறிந்து காணவில்லை. பண்டிதர் ஒருவர் தவிர வேறு ஒருவரும் பதிப்பியாமையானும், அவரும் வேறேயே பதிப்பித்தமையானும் இது வேறு தனியே பதிப்பிக்கப் பெற்றது.



# அருஞ்சொற் பொருளகராதி

அ

அக்கு - எலும்பு, ௯௧ - ௨
அசும்பு - இடையறாதொழுக்கு, ௪௩௩ - ௫
அண்டல் - பகைத்தல், ௭௩௬ - ௯
அம்புதம் - மேகம், ௧௯ - ௫
அயில் - கூர்மை, ௪௨௩ - ௭
அரங்கு - சபை, ௨௪ - ௯
அரண் - மதில் (திரிபுரம்), ௫ - ௪
அரிவை - பெண், ௨௫ - ௧
அலங்கல் - மாலை, ௨௰ - ௮
அலவை - அல்லாதவை, ௫௫௬ - ௰
அல் - இரவு, ௧௫௩ - ௧௩
அவலம் - துன்பம், ௬௰ - ௧௧
அளை - புற்று, ௧௩ - ௬

ஆ

ஆகம் - உள்ளம்; அகம் ஆகமென நீண்டது. ஆகம் ஆகுபெயராய் உள்ளத்தையுணர்த்தியது மாம், ௫ - ௯
ஆகரம் - உறைவிடம், ௧௪௬ - ௬
ஆசு - கவசம், ௭௬௫ - ௮
ஆடகம் - நால்வகைப் பொன்னினொன்று, ௧௮ - ௧
ஆனை - பசுவினதைந்து பஞ்ச கௌவியம், ௩௱௧ - ௬
ஆதர்கள் - அருகர், ௬௮ - ௰
ஆயம் - ஆதாயம், லாபம், ௧௧௪ - ௭
ஆலி - ஆலங்கட்டி, ௨௭ - ௩
ஆறு - அறுபகை, ௰ - ௯

இ

இதணம் - காவற்பரண், ௧௫௧-௨
இரவன் - சந்திரன், ௧௮௩ - ௪
இறவு - செலவு, மிகுதியுமாம், ௫௨௯ - ௭
இறை - கை, ௨ - ௬

உ

உகிர் - நகம், ௨௬ - ௮
உண்பு - புசிப்பு (ஈண்டு வினைப் புசிப்பு), ௧௧௨ - ௧௧
உரவம் - வன்மை, ௭௭ - ௪
உரவு - வன்மை, ௪௮௰ - ௬
உலம் - திரண்ட கல் (ஈண்டு மலை), ௫௪ - ௧௧
உழுவை - புலி, ௬௯௩ - ௧

ஊ

ஊர்தி - வாகனம், ௮௫ - ௨
ஊழி - உலகமழியுங்காலம், ௨ - ௮
ஊறி - கடல், ௧௨௩ - ௧

எ

எச்சு - உயர்வு, ௧௯௨ - ௰
எண்கு - கரடி, ௧௫௩ - ௩
எல்லி - இரவு, ௧௭ - ௮
எவ்வம் - துன்பம், ௧௨௬ - ௮
எள்கல் - இகழ்ச்சி, ௫௩௫ - ௪
எற்றல் - கொல்லல், ௪௯௧ - ௨

ஏ

ஏ - அம்பு, ௩௨ - ௬
ஏண் - பெருமை, ௪௯௯ - ௭
ஏதம் - குற்றம், ௨௬ - ௧௧
ஏவம் - குற்றம், ௪௯௮ - ௬
ஏழை - பெண், ௯௯ - ௬
ஏனம் - பன்றி, ௧ - ௨

ஒ

ஒசித்தல் - உடைத்தல், முறித்தல், ௧௧௮ - ௯
ஒன்றார் - பகைவர், ௧௨௨ - ௮

க

கஞ்சம் - தாமரை, ௨௬௫ - ௧௧
கடைசியர் - மருதநிலப் பெண்கள், ௬௯௮ - ௧

கண்டல் - தாழை, அ - கக
கதம் - கோபம், ருய - எ
கது - வெடிப்பு, ஙஉ - அ
கத்திரிகை - ஒருவகைப் பறை, எகக - ரு
கந்துகம் - பந்து, கூ - ங
கபோதகம் - புறா, கஙரு - ௬
கமர் - வெடிப்பு, சாஉஅ - ய
கயம் - குளம், உசா - சா
கரவு - வஞ்சனை அங - க
கருக்கம் - இருள், கமழ்தல், தோற்றுதல், சாய - அ
கலதி - மூதேவி, சாசக - ய
கல்வம் - மயிற்றோகை, சாகூ - சா
கழை - மூங்கில், உஎ - ங
கள்ளம் - கபடம், ககங - க
கறவை - பாற்பசு, எாசா - எ
கறுவு - பெருங்கோபம், சருஎ - ங

கா

காசை - காயாம்பூ, சருச - எ
காமனை (கள்) - இச்சைகள், உஎஉ - கூ
கானல் - கடற்கரைச்சோலை, உ-எ

கி

கிடங்கு - அகழி, கஙக - க
கிறி - பொய், உரு - உ

கீ

கீழ்ந்து - பிளந்து, ருஙசா - கூ

கு

குடசம் - மலைமல்லிகை, எஙஎ - க
குந்தளம் - அளகம், எாஅ - க
குரவம் - குராமலர், ஙங - க
குருளை - இளமை, சகூஉ - ய
குருளை - பசுக்கன்று, எாசா - எ
குற்றான் - ஒசித்தான், ஙகஎ - அ
குனித்தல் - வளைத்தல், ரு - சா

கூ

கூகம் - ஆந்தை, ருகூகூ - கக
கூகை - கோட்டான், ஙசா - ௬

கெ

கெண்டல் - கிளர்தல், ஙய - ங
கெழுவுதல் - பொருந்துதல், ஙங - ங

கே

கேணல் - கெடுத்தல் (ஈண்டு பறித்தல்), - உககூ - உ
கேதம் - துன்பம், உசா - கக
கேழல் - பன்றி, ாங - கக

கை

கைதவம் - வஞ்சனை, ரு - ய

கொ

கொக்கு - மாமரம், உகக - ச
கொந்து - பூங்கொத்து, ாஉ - ங
கொம்மல் - கொம்மெனவொலித்தல், சசாஉ - ச
கொளுவுதல் - கொளுத்துதல், உசாக - உ

கோ

கோடல் - வெண்காந்தள், கஎச-சா
கோது - குற்றம், சாச - ய

கௌ

கௌவை - சத்தம், எாஉ - ங

ச

சதிர் - (சதுர்) அறிவு, உசாக - சா
சதிர்வு - அழகு, பெருமையுமாம், உ - எ
சரதம் - உண்மை, எகஎ - கக
சல்லரி - வாத்தியவிசேடம், எஉஉ - த
சழித்தல் - சப்பளித்தல், கஉய-சா

சா

சாகம் - வில், உஅங - சா
சாடுதல் - கொல்லுதல், ஙகூ - க
சாந்தம் - கலவை, ககஅ - எ
சாய்தல் - கடத்தல், (ஈண்டு பசு பாச ஞானங்களைக்கடத்தல்) கூர்மையுமாம், ாய - கச
சாவகர் - சமணர், ஙாஉ - ய

சி

சிட்டம் - வன்மை, ககஉ - அ
சில்லை - இழிவு, உகூரு - ரு

சு

சுதை - சுண்ணச்சாந்து, வெண்மையுமாம், ககூ - உ

## அருஞ்சொற் பொருளகராதி

சுருதி - கேட்கப்படுவது, வேதம், உகு - அ
சுலவல் - சுற்றுதல், உஉ - க

### சூ

சூகரம் - பன்றி, கசகு - கு
சூடகம் - கைவளை, கஅ - க
சூதம் - மாமரம், கஙு - அ

### செ

செண்டு - வையாளிவீதி, (செண்டுவெளி) கூகங - உ
செம்மாப்பு - இறுமாப்பு, கூச - க
செம்மை - செவ்விதாந் தன்மை, ரு - ச
செய் - வயல், கருகூ - கக
செருந்தி - ஒருவகைப்பூ, ருகூ - கூ

### சே

சேடர் - பெரியார், கூய - கக
சேடு - வன்மை, பெருமையுமாம், ருகங - ச
சேணம் - உயர்வு, சஉங - ச
சேமம் - சுகம், கூஎய - கூ

### சோ

சோடைகள் - சோர்ந்தவர், சஉஅ - ய

### த

தகரம் - தகரமென்னும் வாசனைமரம், ககரு - ரு
தக்கை - வாத்திய விசேடம், ககூச - ரு
தடுக்கு - பாய், ஙச - ய
தரா - பூமி, சஉங - அ

### தா

தாரகை - விண்மீன், கூகூ - ங
தாரா - ஒருபுள், கூஎகூ - அ

### தி

திமில் - வேங்கைமரம், எஉ - எ
திரங்கல் - திரைதல், ஈருய - ங
திவிதலம் - வானுலகம், ருக - க

### து

துங்கம் - உயர்வு, பெருமை, கூ - ங
துடி - உடுக்கை, கூங - கூ
துத்தி - பாம்பின் படப்பொறி, ஈககூ - ய
துத்திரி - வாத்திய விசேடம், எகக - ரு
துரக்கல் - ஓட்டல், எகச - அ
துற்பு - உணவு, எககூ - உ
துற்றல் - நெருங்குதல், அ - க
,, - உண்ணல், ஈகச - ரு
துன்னம் - தையல், சசரு - உ
துன்னல் - தைத்தல், கூஉ - ங

### தூ

தூசு - ஆடை, ஈஉச - ய
தூமம் - புகை (ஈண்டு நெருப்பு), உயக - ரு

### தெ

தென்றி - தெற்றி (மயங்கி), ஈருய - ரு

### தே

தேரர் - பௌத்தரிலொருவகையர், கஎ - ய
தேறல் - கள், தேன், கூரு - ங

### தொ

தொங்கல் - மாலை, ஈகரு - க
தொத்து - பூங்கொத்து, உஉ - உ

### தோ

தோடு - பெண்களது காதணி, க-க

### ந

நக்கன் - சிவபெருமான் (திருவாணன்), ஈசஎ - க
நசை - ஆசை, ச - க
நச்சம் - நஞ்சம், விஷம், சங - உ
நடலை - துன்பம், ஙஅ - ரு
நந்தி - சிவபெருமான், ஈஅக - ங

### நா

நாளிகேரம் - தெங்கு, ஈசகூ - ரு
நாவினள் - நாமகள், சரச்சுவதி, ருருய - ரு
நானம் - கஸ்தூரி, ஈஎங - ங

### நி

நிசிசரன் - இராக்கதன், இரவிற் சஞ்சரிப்போனென்பது, ருஉ - [illegible]
நித்திலன் - நொச்சி சூடிய இறைவன், உகூய - கக
நிருபமன் - ஒப்பில்லாதவன், உருகூ - உ

நீ

நீடு - நீண்ட காலம், ருகங - ச

நு

நுணங்குதல் - வளைதல், அச - எ

நூ

நூறுதல் - அழித்தல், உஅ - கூ

நை

நைதல் - வருந்துதல், ௱கச - ௩

ப

பங்கம் - ஈனம், ௱சகூ - க

பச்சம் - பட்சம், அன்பு, சாங - உ

பச்சை - மிசை, ருசஎ - ய

படகம் - தம்பட்டம், எகக - ரு

படப்பை - கொல்லை, ஙஉ - கூ

படிதம் - படித்தல், ஈண்டுபாட்டு, சககூ - ச

படிமம் - தெய்வக் கோலம், ௱கஅ - ரு

படிறு - பொய், வஞ்சகம், எ - உ

பட்டிமன் - (பண்டிமன், பாண்டிமன்) பாண்டியன், கூருக - ச

பண் - பாட்டிற்கண் பொருந்திய விசையமைதி, ச - ங

பரக்கு - பரத்தல், ௱உஅ - கூ

பரசு - மழு, சஉஉ - அ

பரல் - பருக்கைக் கல், உஎஉ - அ

பரா - பரை, பராசத்தி, சஉங - அ

பருக்குதல் - பருகுதல், ௱கூரு - அ

பயப்பு - பசலை, கூஎரு - க

பயலை - காமத்தாலுண்டாகும் பசப்புத்தேமல், கூகக - உ

பளகர் - குற்றமுடையார், கூககூ - ய

பறப்பை - ஓர்வகைக் குண்டம், ௱எகூ - உ

பா

பாசுரம் - பாட்டு, எஉகூ - ய

பாடகம் - காலணி, கஅ - க

பாடு - கேடு, வருத்தமுமாம், ௱கூரு - ய

பாணி - கை, கூகூ - உ

பாரிடம் - பூதம், ரு - கூ

பாற்றுதல் - போக்குதல், ரு - ரு

பி

பிச்சம் - மயிற்பீலிக்குஞ்சம், ௱எக - அ

பிஞ்ஞகன் - தலைக்கோல முடையான், இறைவன், ௱கஎ - க

பிடக்கு - பிடகமென்னும் புத்தாகமம், ஙச - ய

பிணக்கம் - மாறுபாடு, கூஎஎ - ங

பிரசம் - தேன், சஉஉ - அ

பில்கு - கொப்பளித் தொழுகுதல், கூரு - ங

பீ

பீடு - பெருமை, க - க

பீர் - முலைப்பீர், ௱கூ - எ

பீழ்த்தல் - பேர்த்தல், ௱கச - அ

பு

புணரி - கடல், ௱சச - ங

புரிசை - மதில், ௱சங - ய

புல்லம் - இடபம், சஅங - கூ

புவம் - மேலேழுலகி னொன்று, சகூ - க

பூ

பூகம் - கமுகு, கூ - ச

பூசுரர் - தரைத்தேவர், உக - கக

பூமான் - இறைவன், கஎ - உ

பெ

பெயல் - மேகம், ௱சா - உ

பெற்றம் - இடபம், ௨ - உ

பே

பேழ்தல் - பிளத்தல், உ௱ - கூ

பொ

பொக்கம் - பொய், ௱கய - எ

பொக்கணம் - சோளி, ௱கூச - ரு

பொய்து - பொய்த்து என்பதின் சிதைவு, ருங - கூ - எ

பொறி - இலக்குமி, செல்வமுமாம், ச - க

பொற்பு - அழகு, ௱ - ய

போ

போதகம் - யானை, ருகூங - அ

போதன் - பிரமன், சகூஅ - கூ

போதி - அரசமரம், ௱சஎ - ய

ம

மஞ்ஞை - மயில், ௱உ - ச

மத்தம் - ஊமத்தை, கூ - க

மந்தணம் - இரகசியம், ஙருஎ - எ

மரவம் - குங்குமமரம், ௩௬ - எ
மருள் - கள் (தேன்), ௱௪எ - அ

மா

மாசு - மேகம், ௫௱அ - எ
மாசுணம் - பெரும்பாம்பு, ௱உ௰-௫
மாணம் - மாட்சிமை, ௪உ௩ - ௪
மாணி - பிரமசாரி; ஈண்டு மார்க்கண்டேயர், ௬௬௧ ௩.
மாது - விருப்பம், ௩௧௪ - ௬
மாழை - பொன், அழகு மாம், ௫௧௧ - ௬

மி

மிண்டர் - வலியர், சமணர், ௧௬ - ௰

மீ

மீகம் - மேன்மை, செப்ப மாய வறிவு, ௩உ௫ - ௰
மீளி - வன்மை, பெருமை யுமாம், ௪௪௧ - ௩

மு

முகடு - உச்சி, ௱௩௩ - ௰
முசலம் - இருப்புலக்கை, ௪௫௩-௧
முசிவு - இளைப்பு, ௫௧ - ௩.
முந்நீர் - கடல், நிலத்தைப் படைத்தலும், காத்தலும், அழித்தலு மாகிய மூன்று தொழிலு முடைமையின் முந்நீர். ஆகுபெயரென்பர் நச்சினார்க்கினியர். ஆற்று நீர் ஊற்று நீர், வேற்று நீர் என்னும் முந்நீர் என்பாருமுளர், எ - ௬
முழை - மலைக்குகை, ௫௧ - ௩
முளி - காய்ந்த, உலர்ந்த, ௱௫௧-௬
முறி - ஆடை, ௪ - ௧

மூ

மூகம் - மௌனம், ௩உ௫ - ௰

மொ

மொந்தை - ஒருகட்பறை, ௱உ௰-௫

மோ

மோடி - காடுகாள், ௪௩௧ - அ

மௌ

மௌவல் - முல்லை, ௩௬ - எ

வ

வங்கம் - மரக்கலம், ௪௧ - ௧
வசி - வசியச்சொற்கள், எ௧௩ -உ
வண்டர் - மிண்டர், ௱௩௰ - எ
வந்தி - வந்தித்தல், வணங்கல், ௱௪௭ - ௧௧
வயம் - பூமி, (வையம்), உ௬ - ௧
வளி - காற்று, ௪௧ - ௧

வா

வாசி - அளவு, அளவின்றிக்கொடுத்தல் என்பது கருத்து, வட்டமுமாம், அ - ௰
வாசிகை-தொடுத்த பூமாலை, ௧௧-௫
வாடை - வாசனை, ௪ - ௩
வாலிய - மிகைசெய்த, ௩௫எ - ௩
வாளி - அம்பு, ௬௬உ - ௬

வி

விகிர்தன் - இறைவன், உஅ - அ
விதாதா - பிரமன், உபப்பிரும்மாவுமாவான், உஎஎ - ௩
வித்தகர் - அறிஞர், அஎ - ௰
வியர் - வியர்வை, உ - அ
விலங்கல் - மலை, ௪௰ - அ

வீ

வீ - பறவை, ௰ - எ
வீந்தார் - இறந்தார், ௩அ - ௬
வீரணர் - சிவன்,எ௩௧ - ௧

வெ

வெடிய - அச்சந்தரும், ௫உ௧ - ௫
வெந்தல் - சினம், ௱௪௫ - எ
வெருகு - பூனை, ௪அ௰ - ௫
வெவ்வம் - வெப்பம், ௱உ௬ - அ

வே

வேழ்வி - வேள்வி, யாகம், ௪௧௰ - அ
வேனல் - கானல், ௫௧ - உ

---

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

